# குறைந்த செலவில் அதிக உற்பத்தி

டாடா ஸ்டீல் தொழிற்சாலையில் உள்ள ஆறு இரும்பு உருக்கு உலைகளையும் சில ஆண்டுகளுக்கு ஒரு முறை 'பழுது' பார்க்கவேண்டியுள்ளது. இரும்புத் தொழிற்துறையினர் இவ்வேலையை ரீலைனிங் என்று அழைக்கின்றனர். இது ஒரு முக்கியமான வேலையாகும், இவ்வேலைக்கு ஆயிரக்கணக்கான டன் உஷ்ணத்தால் பாதிக்கப்படாத செங்கற்களும், எஃகும், உருக்கு இரும்பும், பல மைல் நீளமுள்ள மின் கம்பிகளும் மற்றும் 'குழாய்களும்' தேவைப் படுகின்றன. மேலும் பல தொழிற்கலை வல்லுனர்களும் தேர்ச்சி மிக்கத் தொழிலாளர்களும் தேவைப்படுகிறார்கள். இவ்வேலைக்கான ஒவ்வொரு கட்டடமும், ஒவ்வொரு அம்சமும் முன்கூட்டியேத் திட்டமிடப்படுகிறது. பிறகு இவ்வேலையை விரைவாகவும் குறைந்த செலவிலும் முடிக்கும் பொருட்டு, தொழிற் கலைஞர்களும் தொழிலாளர்களும் இரவு பகலாக இணைந்து கருமமே கண்ணாகச் செயல் படுகின்றனர்.

கடந்த பல ஆண்டுகளாக டாடா ஸ்டீல் இந்தத்துறையில் மிகுந்த முன் னேற்றத்தைக் கண்டுள்ளது. 1957ல் ஓர் இரும்பு உருக்கு உலையை ரீலைனிங் செய்வதற்கு 39 நாட்கள் தேவைப்பட்டன. 1963ன் தொடக்க காலத்தில் இவ்வேலை 74 நாட்களில் செய்யப்பட்டது. இச்சாதனையை மிஞ்சுவது கடினம் என்று பலரும் அப்போது கருதினர். ஆனால் ஆறு மாதங் களுக்குள்ளாகவே இரும்பு உருக்கு உலை 64 நாட்களில் ரீலைனிங் செய்யப் பட்டது.

ஆனால் இத்தோடு முடிவு அடையவில்லை. 1957ல் 99 நாட்களில் இரும்பு உருக்கு உலையை ரீலைனிங் செய்யப்பட்ட வேலை 57 நாட்களிலேயே செய்யப் பட்டுள்ளது. இதன் விளைவாக, 'பழுது பார்ப்பதில் மிச்சப்படுத்தப்பட்ட நேரம்' இன்றியமையாத் தேவையான எஃகு உற்பத்தியை அதிகரிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஒரு வேலையை மேலும் மேலும் குறைந்த நேரத்தில் செய்வதற்காக எடுக்கப் படுகின்ற இடைவிடாத இதயபூர்வமான முயற்சிகளும் இதர சாதனைகளும் செலவினங்களைச் சிக்கனமாக்கி உற்பத்தியைப் பெருக்குதல் என்ற நிறு வனம் ஏற்றுக்கொண்டுள்ள அடிப்படை இலட்சியத்தை அடைவதற்காகப் புரியப்படுகின்றன.

**டாடா ஸ்டீல்**



The Tata Iron and Steel Company Limited

JWTTN 2834A

# கல்கி பொருளடக்கம்

★

எளிமையான விஷயங்களில் ஆனந்திக்கும் பான்மையை எங்களுக்கு போதிப்பாய்! கசப்பான ஊற்று ஏதுமற்ற மகிழ்ச்சியைத் தரும் பான்மையை எங்களுக்குப் புகட்டுவாய்!

— ருட்யார்ட் கிப்ளிங்

★

விசுவாவசு மார்கழி 25 ● ஜனவரி 9



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


ஆயுதங்களைக் கொடுங்கள். வெற்றிகரமாக முடித்துத் தருகிறோம்!
சர்க்கார்
காங்கிரஸ் கட்சி
தேர்தல் பிளான்
நெருக்கடி காலச் சட்டங்கள்
PK





மலர் 25 ● இதழ் 24

# நந்தரின் குறை

**ராஜாஜி**

'சக்கரவர்த்தி சபா மண்டபத்தில் எதைச் சொன்னால் எனக்கென்ன நன்மை? அவர் சொல்கிற விஷயங்களால் என் நிலைமையில் அதிக மகிழ்ச்சியோ, முன்னேற்றமோ ஏற்பட்டுவிட முடியுமா?' என்று டால்ஸ்டாயின் மகத்தான படைப்பாகிய 'போரும் அமைதியும்' என்ற நூலில் ஒரு பாத்திரம் கேட்கிறது. யூனியன் உள்துறை மந்திரி ஸ்ரீ குல்ஜாரிலால் நந்தர் அவர்கள் அரசாங்க சிப்பந்திகளிடையே பேசியிருப்பதைப் படித்த போது மேற்கண்ட பாத்திரம் சொன்னதுதான் என் நினைவுக்கு வந்தது. 'நாட்டின் தேவைக்கும் நிகழ்கால சாதனைக்குமிடையேயுள்ள பெருத்த இடைவெளியைப் பாலமிட்டுப் பூர்த்தி செய்யும் பணியில் சிப்பந்திகள் தம்மை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்' என்று ஸ்ரீ நந்தர் பெரிதாகப் பேசியுள்ளார். 'அரசியல் துறையில் பெருத்த சக்தி விரயமாவதைக் காண்கிறோம்; ஏனெனில், அரசியல் கட்சிகள் தேசத்தின் நலனை சுயநலனைவிடப் பெரிது என்ற கருத்தை மறந்து விட்டிருக்கின்றன. அரசியலில் சுய அநுகூலம் பெறவேண்டும் என்கிற எண்ணத்தில் கட்சிகள் மக்களைத் தவறான வழியில் நடத்திச் செல்கின்றன. மக்களின் அறியாமை காரணமாக அவர்களைத் தவறான வழியில் அழைத்துச் செல்வது சாத்தியமாயிருக்கிறது' என்றெல்லாம் ஸ்ரீ நந்தர் குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார். இதைப் போல் இன்னும் பல அருமையான விஷயங்களையும் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் கூறியிருக்கிறார். இவை மற்ற கட்சிக்காரர்களை விடக் காங்கிரஸுக்கே மிகவும் தேவையான யோசனைகள்.

இதுபோன்ற பேச்சுக்கள் பத்திரிகைகளில் படிப்பதற்கு நன்றாக இருக்கின்றன; இதயத்தைத் தொடுகின்றன. ஆனால், அரசாங்கத்தின் இன்றைய பொருளாதார கொள்கைகள் நீடிக்கும் வரை பேச்சினால் மட்டும் சிப்பந்திகளைச் சரியாக நடத்திவிட முடியுமா? மக்களுக்குத்தான் அதிக மகிழ்ச்சி அளித்துவிட முடியுமா? காரணங்களைப் பொறுத்தே விளைவுகள் அமையும். பிரசங்கத்தினால் விளைவுகளைத் தடுக்க முடியாது.

ஆளும் கட்சி — அரசாங்கம் இவற்றைக் கண்டனம் செய்யும் எதிர்க்கட்சிகள் யாவும் ஓர் அநாவசிய உபத்திரவம் என்ற எண்ணம் பதவியிலுள்ள காங்கிரஸ்காரர்களையும், பதவிக்காக முயன்று வரும் காங்கிரஸ்காரர்களையும் பேயாய்ப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ''நெருக்கடி கால''த்தில் எதிர்க்கட்சிகள் இல்லாவிடிலே நல்ல நிர்வாகம் நடக்க முடியும் என்பது அவர்களின் அபிப்பிராயம். 'குறைகளைக் கூறுவதால் மக்களின் மனம் குழம்பி அவர்களுடைய ராஜாங்க விசுவாசம் குறைந்துவிடும்; ஆட்சேபணைகளைக் கேட்பதும் அவற்றுக்குப் பதில் சொல்வதும் அவசியமற்ற கால விரயமும் சக்தி விரயமுமே ஆகும்; அறிவுக்குப் பொருந்தியிருப்பினும்கூட, ஆளும் கட்சிக்கு அப்பாற்பட்டவர்களின் யோசனையை ஏற்பதால் அக்கட்சியின் பலம் குன்றி அந்தஸ்தும் குறைந்து விடும்; ஆளும் கட்சியின் உயர் மட்டத்தில் 'ஒழுக்கக் கட்டுப்பாடு' உண்டாக வேண்டும்; அதாவது யாருமே மாற்றுக் கருத்து தெரிவிக்கக் கூடாது; கட்சியின் அந்தரங்கக் கூட்டங்களில் இவ்வித மாற்றுக் கருத்துக்கள் வெளியானாலும் அவை வெளியில் பரவிவிட்டால் ஆளும் கூட்டத்தினரிடம் பொதுமக்களின் நம்பிக்கை பலவீனமுறுமாதலால் அக் கட்சியினர் எல்லாவற்றிலும் ஏகோபித்து ஒரே கருத்துதான் தெரிவிக்க வேண்டும்'— இவைதான் இன்று ஆள்கிற கட்சிக்காரர்களின் கருத்துக்கள். ருஷிய ஸார் மன்னர்கள் ஆட்சியில் காது கேட்காத

சபை அங்கத்தினரும், 'உங்கள் கருத்தையே தான் நானும் நினைத்தேன்' என்று கூறி சாமர்த்தியமாக 'ஏகோபித்த' முடிவுகளுக்கு உதவியதாக டால்ஸ்டாயின் நூலில் காண்கிறோம். இதேபோன்ற கட்சி அமைப்பைத்தான் காங்கிரஸ் முக்கியஸ்தர்களும் விரும்புகிறார்கள். செவிட்டில் பலவிதமுண்டு: செவிப்பறை பழுதானால் காது கேட்காது; காதின் உட்பாகத்தில் குறைபாடிருந்தாலும் கேட்காது; இன்னமும் உட்புறத்தில் மூளை செவிடாகிப் போயிருந்தாலும் மற்றவர்கள் சொல்வது காதில் விழாது. தேசத்தின் பொருளாதாரம் முழுவதும் ஆள்கிற கட்சியின் குத்தகையில் இருக்கும் போது, 'உங்கள் கருத்தையே நானும் நினைத்தேன்' என்கிற பல்லவிகள் ஒன்று சேர்ந்தால் பரஸ்பரம் சுயநலத்துக்கு உதவும் ஒரு சங்கத்தையே தோற்றுவிக்கும். பொருளாதாரம் அடியோடு இற்று விழுகிற வரையில் இக் குத்தகை நீடித்து விடுமென அஞ்சவேண்டியிருக்கிறது.

அரசன் இல்லை என்பதாலோ, பார்லிமென்ட் இருக்கிறது என்பதாலோ ஜனநாயகம் ஏற்பட்டு விடாது; மக்களின் அத்தியாவசியத் தேவையாகிய நல்ல நிருவாகத்தைப் பெற்று விட முடியாது. குற்றங்களையும் அபாயங்களையும் திட்சண்யமாக நோக்கி முன்கூட்டியே எச்சரிக்கக்கூடிய எதிர்க்கட்சி நாட்டுக்கு இன்று அத்தியாவசியம் என்பது வெளிப்படை. அது ஆள்கிறவர்களுக்கு 'உபத்திரவமாக' இருக்கலாம். எனினும், அதனைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்; அதோடு வரவேற்கவும் வேண்டும். 'உங்கள் கருத்தையேதான் நானும் நினைத்தேன்' என்று சொல்பவர் உண்மையில் நண்பரல்ல; உறுதியாகவும் வெளிப்படையாகவும் பேசுபவரே — மனத்துக்கு ரம்மியமில்லாதவற்றையும் பேசுபவரே — உபயோகம் வாய்ந்த உத்தம நண்பர். இவ்வுண்மையை முன்பே திருவள்ளுவர் கூறினார்:

**நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற் பொருட்டு**

தேகபலத்தைக் கொண்டு போர் செய்யும் போது இயந்திரகதியில் சகாக்கள் வியூகம் அமைத்துக் கொள்வது வெற்றிக்கு உதவும். ஆனால் விவேகமான முடிவுகளை இலட்சியமாகக் கொள்ளும் போது வெவ்வேறு கோணங்களிலிருந்து நோக்க வேண்டும். மனம் விட்டுச் சொன்ன ஆட்சேபணைகளே அப்போது உதவும்.

சீனம் இந்திய எல்லைக்குள் ஊடுருவிய போது பிரகடனமான 'நெருக்கடி' நிலைமை பாகிஸ்தான் ஆக்கிரமிப்போடு சகஜமாக ஒட்டுப் போடப்பட்டிருக்கிறது; மூன்று ஆண்டுகளாக நிலவி வரும் 'நெருக்கடி' இன்னும் இப்படியே நீடிக்கப்படும் என்றும் நினைக்க வேண்டியுள்ளது. ஜனநாயகத்தை அப்புறப்படுத்துவதற்கு 'நெருக்கடி'யைச் சாக்குக் காட்டுவது அழகா? அப்படியே நெருக்கடியிருப்பினும், நெருக்கடி காலங்களில்தான் எதிர்க்கட்சிகளை அரசாங்கத்துக்கு மேலும் நெருக்கமாக்கிக் கொள்ள வேண்டும்; கூட்டு மந்திரி சபை அல்லது தேசிய மந்திரி சபை அமைத்து எதிர்க்கட்சியினருக்கு அதில் இடம் தருமளவுக்கு இந்த நெருக்கம் வளர வேண்டும்.

சுயநலனுக்காகச் செயற்கையான கட்டுப்பாட்டின் மீது ஏற்படுத்தும் விசுவாசமும் ஒற்றுமையும் தேசத்துக்கு நல்லதல்ல, ஆள்கிறவர்களுக்கும் நல்லதல்ல. இந்தியா பார்லிமென்ட் முறைப்படி நிர்வகிக்கப்படுகிறது என்ற பெயரைக் காப்பாற்ற வேண்டுமாயின், சர்க்காரின் எல்லாவித நடவடிக்கைகளையும் சுதந்திரமாக விமரிசிக்கும் உரிமை மதிக்கப்பட வேண்டும். கண்டனமென்பது சர்க்கார் நிர்வாகத்துக்கு எரிச்சலூட்டும் கருவியல்ல; சுதந்திரப் பிரஜைகளின் கடமையைப் பூர்த்தி செய்யும் ஓர் அங்கம் அது; சட்டசபை ஆட்சியின் ஓர் அத்தியாவசிய அம்சம் அது. குறை சொல்பவர் ஒரு சகா; போனால் போகிறதென்று சகித்துக் கொள்ள வேண்டிய தேச விரோதியல்ல.

# டி. டி. கே. ராஜிநாமா

ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் ராஜிநாமாவுக்கான காரணங்கள் திட்டவட்டமாகத் தெரியாத இன்று (1—1—66) அவர் பதவியிலிருந்து விலகியது பற்றி ஏதும் கூறுவது பொருந்தாது. மொத்தத்தில் இது ஆச்சரியமூட்டும் செய்தியாக வந்துள்ளது. மூழ்கும் கப்பலை விட்டு வெளியேறுவது போல் ஓட்டை கண்ட கொள்கைகளிலிருந்து புத்திசாலியாகிய ஸ்ரீ டி. டி. கே. விலகிவிட்டாரோ என்றுகூட எண்ணத் தோன்றுகிறது. நிதிமந்திரி விலகுவதைவிட நிதிக் கொள்கை மாறுவதே இன்று அவசியம்.

புதிய நிதி மந்திரி, ரிவி ஸ்யூ மந்திரி இவர்களின் நியமனத்தில் பிரதேசவாரியாகத் திருப்தி தரும் ஏற்பாட்டையே காண்கிறோம். புதிதாக மந்திரி சபை அநுபவம் பெறும் ஸ்ரீ ஸசீந்திர சௌத்திரி என்ன செய்யப் போகிறார் என்பதை நாடு அக்கறையுடன் கவனிக்கிறது. சமீப காலமாக ஸ்ரீ டி. டி. கே. 'சர்க்கார் வருமானத்தைப் பெருக்க வழி தேடினால் மட்டும் போதாது; செலவுகளில் சிக்கனம் காட்ட வேண்டும்' என்பதை உணர்ந்ததாகத் தோன்றியது. இவ் விஷயத்தைப் புதிய நிதி மந்திரி காரியமாக்கிக் காட்டினால் க்ஷேமம் உண்டாகும்.

தேசம் இன்று மிகவும் விரும்புவது வரிச் சுமை குறைவதையும், தனியார் முதலீட்டுக்கு ஊக்கம் பெருகி உற்பத்தித் துறையில் ஒரு நிச்சயத் தன்மை ஏற்படுவதையுமே. இதோடு அந்நியக் கொள்கை திடமாக உருவாகி மேல்நாடுகளுடன் நட்புப் பெறுவதால் தேசம் பாதுகாப்பு பலம் பெறுவதோடு வரிப் பளுவும் குறையும். இவற்றுக்கெல்லாம் ஸ்ரீ ஸசீந்திர சௌத்திரி உதவி புரிவாரா?

# என்ன சேதி?

- பதவி துறந்த பெருமை
- குழப்பம்
- இரு மீனாக்ஷி சுந்தரர்கள்

**மை**சூர் ராஜ்யத்தில் மதுவிலக்கைத் தளர்த்துவதை எதிர்த்து மந்திரி ஸ்ரீமதி தாஸப்பா அவர்கள் தமது பதவியை ராஜி நாமா செய்திருப்பது நிகழ்கால காங்கிரஸ் சரித்திரத்தில் ஓர் அதிசயம் என்றே சொல்ல வேண்டும். பதவி கிடைப்பதற்காக எதையும் செய்யலாம் என்ற சூழ்நிலையில், கிடைத்த பதவியை ஒரு கொள்கைக்காகத் துறக்க முன் வந்துள்ள ஸ்ரீமதி தாஸப்பா நம் அனைவரின் பாராட்டுக்கும் உரியவர். அவரது ராஜிநாமாவை வாபஸ் பெற முயற்சிகள் நடப்பதாகவும், அவர் நியாயமான முறையில் பிடிவாதமாக இருப்பதாகவும் தெரிய வருகிறது.

காந்திஜியின் கொள்கைகளை ஆளும் கட்சியினர் ஒவ்வொன்றாகக் காற்றில் விட்டு வருவதற்கேற்பவே, மதுவிலக்கு விஷயத்திலும் அண்ணலின் ஆணையை மீற முற்பட்டது வருந்தத் தக்கது. மதுவரக்கனைப் போன்ற சமுதாய விரோதி வேறெதுவும் கிடையாது. உணவுப் பற்றாக்குறையையோ, சர்க்கார் வருமானத்தின் போதாக் குறையையோ காரணம் காட்டி மதுவிலக்கைத் தளர்த்துவது நாட்டில் அநாகரிகத்தை அவிழ்த்துவிட்டு, குடும்ப வாழ்வின் ஒற்றுமையைக் குலைப்பதற்கே வழி செய்யும். ஸ்ரீமதி தாஸப்பாவைப் போல மேலும் பலர் திரமுடன் முன்வந்தால் இந்த அவக்கேடு தடுக்கப்படலாம்.

ஃ ஃ ஃ

**பி**ரிட்டிஷ் ஆட்சியிலிருந்ததைவிட இன்று மக்கள் சுதந்திரத்தைப் பெரிதும் இழந்து, பீதியில் வாழ்கிறார்கள் என்பதற்கு இன்று நாட்டில் காணப்படும் ஒரு நிகழ்ச்சியே போதிய சான்றாகும்.

காங்கிரஸ் அக்ராசனர் திரு காமராஜ் அவர்கள் எங்கோ ஒரு கூட்டத்தில், லேவாதேவிக்காரர்களிடம் நகைகளை அடகு வைத்து விட்டு, மீட்க முடியாமல் சிரமப்படுபவர்களின் கடனை ஒருவாறு அடைத்து, அரசாங்கமே அந்த நகைகளை எடுத்துக்கொண்டு தங்கப் பத்திரங்களாக மாற்றிக் கொள்ளலாம் என்று சொல்லி வைத்தார். அதன் விளைவாகக் கிராம மக்கள் பெரும் பீதியில் ஆழ்ந்து, லேவாதேவிக்காரர்களிடம் வைக்கப் பட்டுள்ள நகைகளையெல்லாம் அரும்பாடுபட்டு, வேகமாகத் திருப்பிப் பெற்று வருகிறார்களாம். புதிதாக நகை அடமானம் வைக்கப் பயப்படுகிறார்களாம். சென்னை அரசாங்கமும் ஜில்லாக் கலெக்டர்களும் லேவாதேவிக்காரர்களிடமிருந்து தங்கப் பத்திரத்துக்கு நகைகளைப் பறிமுதல் செய்யும் உத்தேசமில்லை என்று அறிக்கைகளுக்கு மேல் அறிக்கை விட்டு வருகிறார்கள். இப்படி ஏழை மக்கள் வாழ்வில் பெரும் குழப்பத்தையும் நிச்சயமற்ற தன்மையையும் உண்டாக்கி விட்டார் திரு காமராஜ். அவர் வாய் விட்டுச் சிந்தித்த ஒரு யோசனையைச் சர்க்கார் சட்டமாகவும், உத்தரவாகவுமே மக்கள் நினைக்கத் தலைப்பட்டுவிட்டார்கள் என்றால் சர்க்காரும் கட்சியும் ஒன்றாகிவிட்டது என்பதற்கு இதை விடப் பெரிய சான்று வேறு என்ன உண்டு?

ஃ ஃ ஃ

**நா**ன்மாடக் கூடலாகிய மதுரையம்பதி கண்ட தமிழ்ச் சங்கங்களின் முதல் புலவராக மதிக்கப்படுவர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் அல்லவா? இப்பெயருக்குப் பொருத்தமாக மதுரையம்பதியில் புதிதாக இவ்வாண்டு பணி புரியத் தொடங்கும் மதுரை சர்வ கலாசாலைக்குத் துணை வேந்தராகத் திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் நியமிக்கப் பட்டிருக்கிறார். இச் செய்தியைக் கேட்டுத் தமிழ் கூறும் நல்லுலகம் பெரு மகிழ்வு எய்தியுள்ளது. ஏனெனில் திரு தெ. பொ. மீ. துணை வேந்தர் பதவிக்கு அவ்வளவு தகுதி பெற்றவர். அவர் தீவிர தேச பக்தர். பன் மொழி பயின்ற வித்தகர். தமிழில் பேரார்வம் கொண்டு பயின்று, தமிழ்ப் பெரியார் திரு வி. க. அவர்களின் பண்ணையில் செழித்தவர். தமிழிலுள்ள அத்வைத வேதாந்தத்திலும் சைவ சித்தாந்தத்திலும் மூழ்கித் திளைக்கும் பெரியார். எனினும் பிற சமயங்களில் ஆழ்ந்த புலமையும் சமரச நோக்கும் கொண்ட பரந்த மனமுடையவர். சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி அவர் செயல் திறமையைப் பறைசாற்றும். மேனாடுகளில் சுற்றுப் பிரயாணங்கள் செய்து விரிந்த அநுபவம் பெற்றவர். இத்தகையவர் சங்கம் வளர்த்த மதுரையில் தோன்றும் புதிய சர்வகலாசாலையின் முதல் உப அத்யட்சகராக நியமிக்கப்பெற்றது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.



★

அன்பார்ந்த நேயர்களுக்கு சந்தோஷ சமாசாரம் தெரிவிக்கிறேன். பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் 'கல்கி', 'ஸ்வராஜ்யா' பத்திரிகைகளின் மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கையைத் தமிழ்நாட்டு அரசாங்கம் ரத்து செய்துவிட்டது. டிஸம்பர் முப்பதாம் தேதியன்று பப்ளிக் பிராஸிக்யூடர் கீழ்க்கண்ட வாபஸ் அறிக்கையைத் தாக்கல் செய்தார்:

''ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியார் எடுத்துக் காட்டியதன் பேரில் நிலைமை மீண்டும் பரிசீலனை செய்யப்பட்டு, இந்தக் குற்றச்சாட்டில் மேல்நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியமில்லை என்று அரசாங்கம் கருதுகிறது. எனவே, இவ்விரு வழக்குகளையும் வாபஸ் பெறுவதற்கு என்னை அநுமதிக்குமாறு கோர்ட்டாரைக் கேட்டுக் கொள்கிறேன்.''

இதன்படியே வழக்கு ரத்து செய்யப்பட்டது.




★

இலங்கையின் நிருவாகத்தில் நியாயமான அளவுக்குத் தமிழை உபயோகப்படுத்துவதாகச் சில ஆண்டுகளுக்கு முன் கொடுக்கப்பட்ட வாக்குறுதியைச் செயலாக்கத் தொடங்கியுள்ள பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகாவுக்கு வாழ்த்துக்கள்! இலங்கையின் வடக்குப் பகுதியிலும், கிழக்குப் பகுதியிலும் வாழும் தமிழர்கள் அத்தீவின் பிரஜா வுரிமையில் தங்களுக்கும் சமத்துவம் உண்டு என்ற பாத்தியதை சர்க்காரால் ஆமோதிக்கப்பட்டிருப்பதில் மகிழ்ச்சி கொள்வர்.

நிரந்தரமாக உள்ள சிறுபான்மையினருக்கு நியாயம் இழைத்தால்தான் ஒரு நாட்டில் சமாதானமும் முன்னேற்றமும் காண முடியும். அரசியல் கட்சி அபிப்பிராயங்களில் சிறுபான்மையாயுள்ளவர்கள் விஷயத்தில்தான் பெரும்பான்மையினரின் ஆட்சி ஓரளவுக்கேனும் பொருந்தும்; அரசியல் கருத்தன்றி, பிறப்பால் எண்ணிக்கையில் சிறுபான்மையோராக இருப்பவர் மீது பெரும்பான்மையாட்சி செல்லாது.

இந்த விவாதங்கள் ஒருபுறமிருக்க, யாழ்ப்பாணத் தமிழர்கள் இலங்கைக்காகச் செய்துள்ள பணிகளைப் பற்றியும், இலங்கையின் பண்பாட்டு வரலாற்றில் இடம் பெற்றுள்ள தமிழ்ப் பெரியார்களைப் பற்றியும் அந்நாடு முழுதும் பெருமைப்பட வேண்டும்.

மொழியைப் பொறுத்தமட்டில், சிங்களம் தமிழ் இவற்றுக்கு அரசாங்கச் சடங்குகளில் முதலிடம் கொடுத்திருந்தாலும், ஆங்கிலம் இதுவரையிருந்தாற்போல் நீடிக்கும் என்று நம்புவோமாக. இலங்கையாயினும் இந்தியாவாயினும் தேசிய நடவடிக்கையின் எல்லாத் துறைகளிலும் நவீன காலத்தில் செயலாற்றுவதற்கு ஆங்கிலத்தைவிடச் சிறந்த உபகரணத்தை நாம் பெற முடியாது. ஹிந்தி, தமிழ், சிங்களம் முதலிய நமது மகத்தான, அன்புக்குரிய மொழிகளைப் பற்றிய நமது உணர்வுகள், உணர்ச்சி ரீதியில் நியாயமானவைதான். ஆனால் அதற்காக ஏற்கனவே நம் நாடுகளில் பிடிப்பு ஏற்படுத்திக் கொண்டதும், உலக மொழியுமான ஆங்கிலத்தைத் தேசப் பணிக்கு உபயோகப்படுத்திக் கொள்வதன் புத்திசாலித்தனத்தைக் காண மறுக்கும் குருடராகாதிருப்போம்!

★

உணவு விநியோகத்தில் இந்தியாவில் எவ்வளவு ஒற்றுமை குன்றி உள்ளதென்பதை உணவு கார்ப்பரேஷன் தலைவர் ஸ்ரீ பாய் எடுத்துக் கூறி யிருக்கிறார். உணவு தானிய ஸப்ளை விஷயத்தில் தேசம் முழுவதையும் ஒன்றாக்க வேண்டும் என்ற யூனியன் உணவு மந்திரியின் முயற்சியை ராஜ்யங்கள் 'வெற்றிகரமாக' எதிர்த்திருக்கின்றன. ஒற்றுமை ஒற்றுமை என்று வெற்று வார்த்தை பேசுவது காங்கிரஸுக்குச் சௌகரியமான, சுலபமான அரசியலாயிருக்கிறது. ஆனால் நடைமுறையில் ஸ்தூலமாக ஒரு ராஜ்யத்துக்காக மற்றது தியாகம் செய்ய வேண்டுமென வரும்போது, காங்கிரஸின் ராஜ்ய சர்க்கார்களுக்குப் பிரதேசப் பித்தை எதிர்க்கும் தீரம் இல்லை. ஒரு ராஜ்யத்தில் உணவுப் பற்றாக்குறையைத் தீர்த்துக் கொள்வதற்காகக் கூடுதலான ஸப்ளை அத்தியாவசியமா யிருக்கிறது; இன்னொரு ராஜ்யமோ நல்ல விளைச்சல் காணும் அதிருஷ்டம் பெற்றிருக்கிறது. ஆயினும் வசதியுள்ள ராஜ்ய மக்கள் மற்றவர்க்கு உதவ முன்வராவிடில் காங்கிரஸ் சர்க்கார்கள் 'ஒற்றுமை'க்காக எதுவும் செய்வதில்லை.

தானிய வியாபாரத்தைச் சுதந்திரமாக விட்டிருந்தாலே அமைதியான, சிக்கனமான முறையில் விவகாரங்கள் நிர்வகிக்கப்பட்டிருக்கும். சுதந்திரமாய்த் தொழில் செய்யும் வியாபாரிகளுக்கு ஒரு சிறிய லாபம் கிடைத்து விட்டால் அது 'சுரண்டல்' என்று அவசியமில்லாமல் பயந்து சர்க்கார் தலையிடும் போக்கு நிற்க வேண்டும். தொன்றுதொட்டுத் திருப்திகரமாகக் காரியத்தைக் கவனித்துவந்த வியாபாரிகளின் இடத்தில் ஒரு விஸ்தாரமான சர்க்கார் இலாக்காவை அமைக்க வேண்டும் என்ற கருத்தை விட்டு, சுதந்திரமான போட்டியை ஏற்படுத்த வேண்டும். இறக்குமதியாகும் உணவுதானிய விநியோகத்தை மட்டும் அரசாங்க அதிகாரிகள் மேற்கொண்டு, உள்நாட்டு உற்பத்தியை வியாபாரிகள் வசம் விடவேண்டும். சர்க்கார் சர்வாதீன சோஷலிஸக் கொள்கைக்காகப் பல தவறுகள் செய்யப்பட்டிருக்கின்றன; அந்தத் தவறுகளிலிருந்து மீள்வதற்கு அதை விட அதிகம் செலவிட வேண்டியிருக்கிறது.

# விருது பெற்ற வித்தகர்கள்

சென்ற டிஸம்பர் 24ந் தேதியன்று தில்லியில் நடைபெற்ற ஒரு விழாவில் சங்கீத நாடக அகாடமியின் வருஷாந்திர விருது பெற்ற கலைஞர்கள் ஸ்ரீமதி இந்திரா காந்தியிடமிருந்து விருது பத்திரம் பெற்றனர்.

இவர்களில் கர்நாடக சங்கீத வாய்ப்பாட்டுக்கான பரிசை ஸ்ரீமதி பிருந்தா அவர்களும், வாத்திய இசைக்கான பரிசை ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கம் அவர்களும், நாட்டியத்துக்கான பரிசை ஸ்ரீ டி. சொக்கலிங்கம் பிள்ளை அவர்களும் பெற்றனர். மூவருமே தத்தம் துறையில் பெருமை கொண்டு, தேசிய விருதுக்கு முற்றிலும் தகுதி பெற்ற பாத்திரங்களாவர்.

ஸ்ரீமதி பிருந்தா அவர்கள் வீணை தனம்மாளின் பரம்பரையில் வந்துள்ள கலைஞர். கர்நாடக சங்கீதத்தின் நெளிவு சுளிவுகளையும், கன நயங்களையும் அற்புதமாகப் பேணிப் போற்றித் தருபவர். தூய்மையான மரபையும், சுருதி சுத்தத்தையும், நாத மெருகுகளையும் முக்கியமாகக் கருதுபவர்களின் மதிப்பில் ஓங்கி நிற்பவர். ஸ்ரீமதி பிருந்தாவை வித்வான்கள் பாராட்டும் விதுஷி என்றே சொல்லலாம்.

ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கம் மாலி என்ற பெயரில் லட்சக்கணக்கான ரசிகர்களின் பாராட்டைப் பெற்றவர். இசைக்கலையில் மிகவும் உழைத்தவர். சங்கீதத்தைச் செம்மையாக அளித்து உள்ளத்தைத் தொடக்கூடிய ஆற்றல் பெற்றவர். அவருக்கென்றே ஒரு பாணி உண்டு. அதன் நூதனங்களில் சொக்கித் திளைக்கும் ரசிகர் ஏராளம்.

ஸ்ரீ சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் தொன்மைப் புகழ் வாய்ந்த ஒரு நாட்டிய சம்பிரதாயத்தின் பிரதிநிதியாவார். இன்று அவரது சிஷ்யவர்க்கம் பல்கிப் பெருகி அவரது பாணியை ரசிகர் உலகுக்கு அளித்து வருகிறது. கலைச் சிறப்பாலும், வயதாலும், அநுபவத்தாலும், தேசத்தின் பாராட்டைப் பெற உரிமை பெற்ற பெரியவர் அவர்.

விருது கொண்ட விற்பன்னர் யாவருக்கும் நமது மனமார்ந்த வாழ்த்துக்களை அளிக்கிறோம்.







தலைவலி

எவ்வளவு கடுமையாயினும்

உபாதை

வலிக்கும் பகுதியில்

மட்டுமே

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உள்ளுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள். பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் தசைவலி, தலைவலி, சுளுக்கு மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும். மற்றும் மார்ப்புச்சளி, ஜலதோஷம் போன்றவைக்கும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக் கணக்கில் வரும்.

அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்படுவரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி



## கும்நாம் (ஹிந்தி) ✻

கும்நாம்! பெயருக்கேற்ப ஊர், பேர் தெரியாமல் போக வேண்டிய படம்தான்! ஊரும் பேரும் தெரியக்கூடிய அளவுக்கு விளம்பரப் படுத்தப்பட்டிருக்கிறது! ஒளிப்பதிவும், வண்ணக் கலவையும் கொலையுண்ட கதைக்கு உயிர் ஊட்டுகின்றன! மேல்நாட்டு வலிப்பு நடனம் வெறியூட்டுகிறது! அதை மேவுவதாக நம் நாட்டு நடனம் ஒன்று! ஈடு கொடுத்து ஆடிப் பரவசப் படுத்துகிறார் நடிகர் மகமூது!

இப்படியாகப் படம் பார்ப்பவர்களின் மதியைக் கிறங்க வைத்து எட்டுப் பேரை ஓர் ஆகாய விமானத்தின் மூலம் அநாமதேயத் தீவில் கொண்டு இறக்கி விடுகிறார்கள்! சகலவிதமான நவீன வசதிகளையும் உணவு வகைகளையும் அங்கு காண்கிறோம். இரவுக்கு ஒரு கொலையாக எட்டுப் பேரில் அறுவர் உயிர் துறப்பதைக் காணும்பொழுது கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல் இருக்கிறது!

அப்புறம், காதல் காட்சிகளுக்கு உயிர் ஊட்டி வந்த ஓர் ஆணும் பெண்ணும் கதையை இனிது முடிப்பதற்கென்றே மிஞ்சுகிறார்கள்! படத்தின் தொடக்கத்தில் நடந்த கொலையை மூடி மறைப்பதற்காக ஒருவன் இத்தனை கொலைகளும் புரிந்திருக்கிறான்! தலைதப்பியது தம்பிரான் புண்ணியமாக உயிர் தப்பியவன் சி. ஐ. டி.! டெம்போவுக்காக வேண்டி அவன் ஆறு கொலைகளும் முடிவதற்காகக் காத்திருக்கிறான்! அதன் பின்னரே தன்னை இனம் காட்டிக் கொள்கிறான்! முடிச்சு இப்படி அவிழ்ந்தபின், குறையும் டெம்போவை நிலை நிறுத்தக் குற்றவாளியும் குற்ற இலாக்கா அதிகாரியும் கைகலக்கிறார்கள்! அந்த நேரம் பார்த்து ஆகாய விமானம் வருகிறது! தன்னை இட்டுச் செல்லத்தான் என்று குற்றவாளி ஓட, அவனைத் துரத்திக் கொண்டு சி. ஐ. டி. ஓடுகிறான்! ஆகாய விமானத்தில் ஒரு சண்டை இருக்கும் என்று ரசிகர்கள் நினைக்கும் வேளையிலே, ஏமாந்து விடுகிறார்கள்! குற்றவாளி சிறைப்படுத்தப்படுகிறான்! கடைசியில் கதையும் சுபமாக மு ந்து விடுகிறது! திரையுலகிலே கதைப் பஞ்சம் எப்படி உணவுப் பஞ்சமெனத் தலைவிரித்தாடுகிறது என்பதையும் கூறாமல் கூறுகிறார்கள் 'கும்நாம்' ஹிந்திப் படத் தயாரிப்பாளர்கள்! ✻

## நாணல் ✻

திரைக்கதையின் நிர்ப்பந்தமான சூழ்நிலையிலும் சௌகார் ஜானகிக்கு நன்றாக நடிக்கச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. கண்ணீர் விட்டு எல்லாரையும் கண் கலங்க வைக்கிறார். கே. ஆர். விஜயா குறைந்த உடையும் நிறைந்த சிரிப்புமாக வந்து காதல் புரிந்து கண்கலங்கிக் கல்யாணமும் செய்து கொள்கிறார். போலீஸ்-ஸப் இன்ஸ்பெக்டராக வரும் முத்துராமனுக்குக் காதல் புரியவும், மர்மத் திருடனோடு கைகலக்கவும் சான்ஸ் அடிக்கிறது. காட்சி தவறாமல் வந்து எல்லோரையும் சிரிப்பில் ஆழ்த்தக் கிடைத்த வாய்ப்பை நாகேஷ் நன்றாய்ப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

ஆனால் கதைதான் சினிமாவுக்கு ஏற்றதாயில்லை. மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதிகள் நால்வர் சிறையிலிருந்து தப்பி ஒரு பெரிய மனிதனின் பங்களாவுக்குள் புகுந்து அதை ஆக்கிரமித்துக் கொண்டு வீட்டில் உள்ளவர்களைத் துப்பாக்கி முனையில் மிரட்டிச் சாகஸங்கள் புரிவதும் கடைசியில் போலீஸாரிடம் சிக்குவதும் என்ன கதையோ! அந்தப் பெரிய மனிதன் மட்டும் அல்ல, இடாத்திர உருவமுள்ளவனும், கல்லூரி மாணவனுமான அவன் தம்பியும் மேற்படி குற்றவாளிகளிடம் நடுங்குவது கேலிக்கூத்துதான்!

''நாணல்'' நாடக மேடையில், பாராட்டப்பட்டிருக்கலாம். ஒரே ஸெட்டில் நடக்கும் கதை நாடகத்துக்கு உகந்ததாக இருந்திருக்கலாம். ஆனால் படத்தில் எதையெல்லாமோ எதிர்பார்த்துப் போகும் ரஸிகர்களைத் திருப்தி செய்யும் அளவுக்குத் திரைக்கதை திருப்தியளிப்பதாயில்லையே!

அலட்டிக் கொள்ளாமல் நடிக்கும் விஜயன் முரடர்களுக்கு நாணல் போல் வளைந்து கொடுத்துப் பெயர் வாங்குகிறார்! படத்தில் 'டெம்போ' இல்லாததால் பார்ப்பவர்களை அலுக்க வைக்கிறது. நாம் இன்னும் நாடகமேடை 'டெக்னிக்'கிலிருந்து பூரணமாக விடுபடவில்லை என்பதையே எடுத்துக் காட்டுகிறது 'நாணல்'. ✻



அத்தியாயம் இருபத்தோன்று

## இருபுறமும் நெருப்பு

சக்கரவர்த்தியிடமிருந்து அவசரமான அழைப்பு வந்ததைக் கண்ட விசுவநாதன் நேரே அரண்மனைக்குச் சென்றான். அவனுக்கு முன்பாகவே அங்கு அந்தரங்க ஆலோசனை மண்டபத்தில் பலர் கூடியிருந்தனர். அமைச்சர் சாளுவநரசிம்மர், சக்கரவர்த்தியின் தம்பி அச்சுதராயர், மருமகன் ராமராயர், முக்கியமான அமரநாயக்கர்கள் முதலிய பலரும் அங்கே அழைக்கப்பட்டிருந்தார்கள்.

சக்கரவர்த்தி மட்டும் எரிமலைபோல் குமுறிக் கொண்டிருந்தார். பாமினி சுல்தான்களிடம் அவர் அனுப்பியிருந்த தூதுவர்களில் மூன்று பேர்கள் திரும்பி யிருந்தார்கள். பீஜப்பூர், பீடார், கோல்கொண்டா ஆகிய மூன்று நாடுகளின் சுல்தான்களும் தங்களால் அப்போது வடக்கே படை திரட்டிச் செல்ல முடியாது என்பதை மிகவும் இராஜதந்திரத்தோடு சொல்லியிருந்தார்கள். மூவருடைய மறுமொழிகளும் ஒன்று போலவே இருந்தன.

"இன்னும் இருவரும் இதே காரணங்களைத்தான் சொல்லப் போகிறார்கள்" என்றார் கிருஷ்ணதேவராயர்; "ஆனால், நாம் தனியாக நின்றாவது நம்மாலானதைச் செய்யத்தான் வேண்டும்; வெள்ளத்துக்கு அணை போட அஞ்சி வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பது கோழைத்தனம்!"

"சக்கரவர்த்திகளே!" என்று பதறிக் கொண்டு எழுந்தார் அச்சுதராயர்.

"அச்சுதா! நீங்கள் விரும்பியது போலவே நடந்திருக்கிறது. நீங்கள் எதிர்பார்த்தது போலத்தான் சுல்தான்களும் செய்தி அனுப்பி யிருக்கிறார்கள்" என்று கூறிவிட்டு, அச்சுதராயர் அமைச்சர் முதலானவர்களைக் கூர்ந்து நோக்கியவாறே, "எனக்கும் ஓரளவு எல்லாம் தெரியும்" என்று முடித்தார்.

அமைச்சர் முதல் பலர் இதைக் கேட்டு வெலவெலத்துப் போனார்கள்.

"ஆனால் உங்கள் முயற்சிகளையும் மீறி அவர்களுடைய ஒத்துழைப்புக் கிடைக்கும் என்று நம்பினேன். அது நடைபெறவில்லை. இந்த வகையிலாவது உங்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டிருப்பது எனக்கு ஆறுதல் தருகிறது. ஆனால் விஜயநகரம் தன் கடமையிலிருந்து இதற்காகப் பின்தங்கி நிற்கப் போவதில்லை."

"நாம் மட்டிலும் வடக்கே படை நடத்திச் செல்வது நமக்கே ஆபத்தாக முடியும்" என்றார் சக்கரவர்த்தியின் மருமகனான ராமராயர்.

"உங்களைத்தான் வடக்கே அனுப்புவதற்கு முடிவு செய்திருக்கிறேன்" என்றார் சக்கரவர்த்தி; "போர்க் கருவிகள், உணவுப்



# வெற்றித் திருநகர்

அகிலன்



பொருள்கள், திரவியங்கள் முதலியவையும் எடுத்துக் கொண்டு நீங்கள் ஹாஸன் கானிடம் செல்கிறீர்கள். வடக்கே ஹாஸன் கானும் ராணாசிம்மரும் அங்குள்ள மற்றவர்களையும் ஒன்று திரட்டி வருகிறார்கள். அவர்களுக்கு நீங்கள் பின்பலமாக நின்று உதவி செய்ய வேண்டும். நாம் நேரடியாகப் போரில் கலந்து கொள்ள வேண்டாம். ஆனால் போரின் வெற்றிக்கு நம்மால் ஆனதை யெல்லாம் நாம் செய்தே ஆக வேண்டும். ஹாஸன்கானிடம் நான் உதவி செய்வதாக வாக்களித்திருக்கிறேன்.''

ராமராயர் சக்கரவர்த்தியைப் போலவே எதையும் சாம்ராஜ்யத்தின் நலனை இலட்சியமாகக் கொண்டு செய்பவர். சக்கரவர்த்தியின் ஆணைகளை அணுவளவும் தவறாமல் செய்து முடிப்பவர். அவருக்குச் சக்கரவர்த்திதான் சாம்ராஜ்யம். வடக்கே செல்வ

தற்காகத் தம்மைச் சக்கரவர்த்தி தேர்ந்தெடுத்ததிலிருந்தே அதை அவர் எவ்வளவு பொறுப்பான பணி என்று உணர்ந்து கொண்டார்.

''படைகளை அனுப்பினாலும் நடத்திச் செல்கிறேன்'' என்றார் ராமராயர்.

''படைகள் வேண்டாம்; இங்கும் நாம் தற்காப்போடு இருக்க வேண்டிய அவசியம் வந்திருக்கிறது'' என்றார் சக்கரவர்த்தி.

ஆயுதங்களையும் உணவுப் பொருள்களையும் அனுப்பி வைப்பதுகூட அச்சுதராயருக்கு அச்சத்தை விளைவித்தது. காபூலிலிருந்து படையெடுத்து வரும் பாபருக்கு இது தெரிந்து விட்டால், அவருடைய பகையை விலைக்கு வாங்கியதாக இருக்குமென்றார் அவர்.

''தம்பி! படையெடுத்து வருகிறவர்களுக்கெல்லாம் வரவேற்பு வழங்குவதற்காக இந்த விஜயநகர சாம்ராஜ்யம் தோன்றவில்லை. அச்சமும் கோழைத்தனமும்தான் இந்த சாம்ராஜ்யத்துக்குப் பகையே தவிர, படையெடுத்து வரும் அன்னியர்களல்லர். படை நடத்தி வருகிறவர்களுக்கெல்லாம் கதவுகளைத் திறந்து விட்டு விருந்தோம்பல் நடத்தி உபசரிப்பதென்றால், இந்த நாட்டில் ஆண் மக்களே பிறந்திருக்க வேண்டாம். கொள்ளை அடிக்க வருகிறவனின் பகைக்காக அஞ்சி, நாம் நம்முடைய மாளிகைகளை அவனுக்காகத் திறந்து விடுவோமா? பகைவனை முறியடிக்க வேணுமென்ற மனத்திண்மை யில்லாமல், பகையஞ்சி வாழும் வாழ்வு ஒரு வாழ்வாகாது.''

கூட்டத்தைக் கலைத்து விட்டு, விசுவநாதனை அழைத்து, வடக்கே அனுப்பவேண்டிய பொருள்களைக் கணக்கெடுக்கச் செய்தார் சக்கரவர்த்தி. ராமராயரும் அரியநாத முதலியாரும் உடன் இருந்து கொண்டு செல்ல வேண்டிய திரவியங்களைத் தனியே ஒதுக்கி வைத்தனர். அதேபோல் ஆயுதங்கள் உணவுப் பொருட்களுக்கான ஏற்பாடுகளும் தனித் தனியே நடைபெறத் தொடங்கின.

ராமராயரின் பயணத்துக்கான எல்லா ஏற்பாடுகளும் துரிதமாக நடைபெற்று முடிந்தன. ஆனால் சக்கரவர்த்தி அவரை உடனடியாக அனுப்பி வைக்காமல் தாமதம் செய்து வந்தார். அகமதுநகர், பீரார் ஆகிய இரு நாடுகளிலிருந்து திரும்பி வரும் தூதுவர்களை எதிர்பார்த்து அவர் காத்திருப்பதாகவே ராமராயரும் மற்றவர்களும் நினைத்தார்கள். அவர்களும் அதே பதிலுடன் திரும்பி வந்து விட்டனர். அதற்குப் பிறகும் சக்கரவர்த்தி ஏதோ ஒரு செய்தியை எதிர்பார்த்துக் காத்திருப்பதுபோல் தோன்றியது.

அவர் எதிர்பார்த்த செய்தி திடுக்கிடும் செய்தியாகவே வடக்கிலிருந்து வந்து சேர்ந்தது. ஹாஸன்கானும் ராணாசிம்மரும் தங்களுடைய தூதுவர்களை அவரிடம் அனுப்பியிருந்தார்கள். தூதுவர்களால் செய்தியை வாய்விட்டுச் சொல்லக்கூட முடியவில்லை. அவ்வளவு தூரம் அவர்கள் கலங்கிப் போயிருந்தார்கள்.

''டில்லி நகரம் விழுந்து விட்டது. பானிபட்டில் நடந்த பயங்கரமான போர்க்களத்தில் இப்ராஹிம் லோடியும் அவருடைய படைவீரர்களும் சின்னாபின்னமாக்கப்பட்டார்கள். பாபரிடம் இருந்ததைப் போல் இப்ராஹிம் லோடியிடம் பன்மடங்கு படைவீரர்கள் இருந்தும் அவரால் எதிர்த்து நிற்கமுடியவில்லை. குறைந்த வீரர்களாக இருந்தாலும் பாபரின் வீரர்கள் பயிற்சியில் சிறந்தவர்கள். பாபர் போர்முறைத் தந்திரங்களிலும் படைகளை நடத்துவதிலும் வீரத்திலும் சிறந்தவராக விளங்குகிறார்.''

கிருஷ்ணதேவராயர் ஒரு கணம் எதுவுமே பேச முடியாது அமர்ந்து விட்டார். பணிவோடு அவரிடம் ஓலை ஒன்றை நீட்டினான் தூதுவர்களில் ஒருவன். அதைப் படித்துப் பார்க்க வேண்டும் என்ற நினைவே சக்கரவர்த்திகளுக்குச் சில விநாடிகளுக்குப் பிறகு தான் ஏற்பட்டது.

''விவரங்களைத் தூதுவர்கள் நேரில் கூறுவார்கள். டில்லியையும் ஆக்ராவையும் பாபர் கைப்பற்றி விட்டதால், நாங்கள் யாரும் சோர்வடையவில்லை. இப்ராஹிம் லோடியால் எதிர்த்து நிற்க முடியாது என்பதை நாங்கள் முன்பே அறிந்திருந்தோம். இப்போது நானும் ராணாசிம்மரும் இங்குள்ள சிற்றரசர்களை யெல்லாம் ஒன்று திரட்டி வருகிறோம். இந்துக்கள் இஸ்லாமியர் என்ற வேறுபாடின்றி எல்லோரையும் திரட்ட முனைந்திருக்கிறோம். ஒருசிலரைத் தவிர, பெரும்பாலோர் இணங்கி வந்துவிட்டார்கள். ஆகவே, தாங்களும் பாமினி சுல்தான்களுடன் உடனடியாக இங்கு வரவேண்டும். அவர்களுக்குத் தனித்தனியே தூதுவர்களை அனுப்பியிருக்கிறோம். ஒருவேளை அவர்களுடைய ஒத்துழைப்புக் கிடைக்காவிட்டாலும், தங்கள் தலைமையில் விஜயநகரத்துப் படைகள் மட்டிலும் வந்தால் கூடப் போதும். தங்களது வீரத்தின் புகழ் இமயத்துக்கு அப்பாலும் பரவியிருப்பதால், தங்களது சாம்ராஜ்யம் இந்தப் பரதகண்டத்தில் பாதி அளவு இருப்பதால், தங்களது வருகை ஒன்றே போதும் நமது வெற்றிக்கு. நம் கூட்டுப் படையினர் எல்லோருமே தங்கள் வரவால் ஊக்கம் பெறுவார்கள். பாபரின் படைகளுக்கும் தங்கள் பெயரே சிம்ம சொப்பனமாக இருக்கும். ஆகவே, எங்களது வேண்டுகோளைப் புறக்கணிக்காமல், உடனடியாகப் புறப்பட்டு வந்து சேருங்கள். தங்கள் வருகையால் வெற்றி நமக்கென்பது உறுதியாகிவிடும்.''— ஹாஸன்கானும் ராணாசிம்மரும் ஓலையில் கையொப்பமிட்டிருந்தார்கள்.

மறுநாள் முடிவு கூறுவதாகச் சொல்லி அவர்களை விருந்தினர் மாளிகையில் தங்கச் செய்து விட்டு, ராமராயரையும் விசுவநாதனையும் மட்டிலும் தனியே அழைத்துப் பேசினார் சக்கரவர்த்தி. தாமே படை நடத்திச் செல்ல வேண்டும் என்ற துடிப்பு அவருக்குக் கணத்துக்குக் கணம் மிகுந்து கொண்டிருந்தது. யாராலுமே தமது முடிவை மாற்ற முடியாது என்பதுபோல் அவர் பேசத் தொடங்கி விட்டார்.

''இந்தச் செய்தி இப்போது யாருக்குமே தெரிய வேண்டாம். இதில் உங்களுடைய கருத்தும் வேறுவிதமாக இருக்க முடியா

தென்று நம்புகிறேன். என்னோடு நீங்கள் இருவருமே வரலாம்'' என்றார் கிருஷ்ண தேவராயர்.

விசுவநாதன் போருக்குப் புறப்படுவதற்குத் தயங்கவில்லை. ஆனால் சக்கரவர்த்தி செய்திருக்கும் முடிவு கேட்டு அவன் பேரதிர்ச்சியுற்றான். அச்சுதராயரும் அமைச்சர் சாளுவநரசிம்மரும் அப்போது தலைநகரத்தில் இருப்பார்கள். படைவீரர்களும் சக்கரவர்த்தியோடு சென்று விடுவதால், பீஜப்பூர் அதில்ஷாவின் மனம் எப்படி மாறுமென்று சொல்ல முடியாது. தலைவரில்லாத மாளிகையைக் காவல் இல்லாது விட்டுச் செல்வது போல் சக்கரவர்த்தி விஜய நகரத்தை விட்டுச் செல்ல முனைந்து விட்டாரே!

விசுவநாதன் மௌனமாக ராமராயரின் ஆலோசனைக்காகக் காத்திருந்தான்.

''சக்கரவர்த்திகள் என்னை மன்னிக்க வேண்டும்!'' என்று தொடங்கினார் ராமராயர்; ''பாமினி சுல்தான்களின் ஒத்துழைப்புக் கிடைக்காத இந்த நிலையில், தாங்கள் எக்காரணத்தைக் கொண்டும் படைகளை விஜயநகரத்திலிருந்து வெளியே அனுப்பக் கூடாது. மேலும் தாங்கள் இங்கு இருந்தால்தான் இந்த சாம்ராஜ்யமும் நிலைக்கும். முன்பு கட்டளையிட்டபடியே நான் ஆயுத உதவிக்காகச் செல்கிறேன். அது போதும்!''

''ஆமாம், சக்கரவர்த்திகளே!'' என்று கண் கலங்கக் குமுறினான் விசுவநாதன்; ''தாங்கள் படைகளோடு இங்கு இருந்தே தீரவேண்டும்; கட்டளையிட்டால் நானும் இவர்களோடு புறப்படுகிறேன்.''

கிருஷ்ணதேவராயர் இருதலைக் கொள்ளி எறும்பு போல் துடித்தார்.

## அத்தியாயம் இருபத்திரண்டு

# இலட்சியம் வீழ்ந்ததா?

நாட்டின் தலைவிதியையே மாற்றி அமைத்த புதிய வரலாற்று நிகழ்ச்சிகள் ஒருபுறம் நடந்து கொண்டிருந்தன; மறுபுறம் அவற்றினால் புதிய சிந்தனைகளும் தோன்றிச் செயல்படத் துடித்துக் கொண்டிருந்தன. பாபரின் பானிபட் போர்க்களம்தான் இந்த நாட்டில் முகலாய சாம்ராஜ்யம் எழும்புவதற்கு அடிக்கல் நாட்டப்பெற்ற இடமாகும்.

அதோடு முதன்முறையாக, வடக்கே ஒற்றுமை உணர்ச்சியைத் தூண்டி விடுவதற்கு முயன்ற இடமும் பானிபட்தான். டில்லி சுல்தான் இப்ராஹிம் லோடியும் அவரது படை வீரர்களும் வீழ்ந்த பின்பும், டில்லியைப் பாபர் கைப்பற்றிய பிறகும், வடநாடு ஓய்ந்திருக்க வில்லை. ரஜபுத்திர ராணாக்களான இந்து மன்னர்களும்—ஆப்கானியத் துருக்கிய வழி வந்த இந்த நாட்டுச் சுல்தான்களும் தோளோடு தோள் நின்று கொண்டு பாபரை எதிர்க்கத் துணிந்து விட்டார்கள்.

அகவாழ்வுக்காகத்தான் சமய உணர்ச்சியே தவிர, புறவாழ்வில் அது குறுக்கிட்டு நாட்டுப் பற்றுக்கு உலை வைக்குமானால், தங்களது புற வாழ்வே நிலைகுலைந்து விடும் என்பதை முதன் முறையாக இந்த நாட்டு இந்துக்களும் முஸ்லிம்களும் அன்றைக்கு உணரத் தொடங்கினர். ஆனால், கண் குருடாகிய பிறகு கதிரவனை வழிபடத் துடிப்பது போல், வெள்ளம் பெருக்கெடுத்து விட்ட பிறகே அவர்கள் அணை போட முனைந்தார்கள். ஒன்றுபட்ட வாழ்வே வாழ்வு என்பதை அவர்கள் காலம் கடந்த பிறகு கண்டார்கள் என்றாலும், அப்படி ஒரு புதிய சிந்தனை மலர்வதற்கே காரணமாக இருந்தது பானிபட் போர்க்களம்தான்.

அந்தப் புதிய சிந்தனையின் உயிர்த் துடிப்பு நிறைந்த ஓலை இப்போது கிருஷ்ணதேவராயரின் கரத்தில் இருந்தது. அந்த ஓலையின் செய்தி அவரது நாடி நரம்புகளெங்கும் பரவி அவரை ஆட்கொண்டு விட்டது. ஹாஸன் கானும் ராணா சிம்மரும் தங்களை வடக்கத்தியர்களென்றோ, வெவ்வேறு சமயங்களைச் சார்ந்தவர்களென்றோ அப்போது நினைக்கவில்லை. தெற்கே தொலைதூரத்திலிருந்த கிருஷ்ணதேவராயரை உடன் பிறந்தாரென்று நம்பி அவரைத் துணைக்கு அழைத்திருந்தார்கள்.

''ராமராயரே! இந்த ஓலையின் அழைப்பு என்னால் மறுக்கக் கூடாத ஒன்றாகத் தோன்றுகிறது. இப்போது நான் உதவிக்குச் செல்லாவிட்டால் பிறகு என் காலமெல்லாம் இதற்காக வருந்த வேண்டிய நிலை ஏற்படும்'' என்றார் சக்கரவர்த்தி.

''தங்களுக்கு உள்ள பரந்த கண்ணோட்டம் வடக்கே உள்ள எல்லா அரசர்களுக்கும் இருக்குமானால், நம் துணையின்றியே அவர்களால் பாபரை முறியடிக்க முடியும். இன்னும் சிலர் அங்கு தனியே ஒதுங்கி நிற்கிறார்கள் என்றும் தெரிகிறது. அதே சமயம் இங்குள்ளவர்களும் நம்புவதற்கு இடமில்லாத மண் குதிரைகளாக இருக்கிறார்கள். இந்த மண் குதிரைகளை நம்பி நாம் வடக்கே சென்றால், விஜயநகரமே வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகக் கூடும். ஆகவே தாங்கள் புறப்படுவது என்ற எண்ணத்தையேவிட்டுவிடுவதுதான் நல்லது.''

''ஆமாம், சக்கரவர்த்திகளே! நம் சாம்ராஜ்யத்தின் வளர்ச்சி கண்டு பொறாமைப் பகை கொண்டவர்கள் நம் எல்லையிலேயே இருக்கிறார்கள். நாம் பகையின்றி வாழ முயன்றாலும் நமது வளர்ச்சியே நமக்குப் பகை தேடித் தந்திருக்கிறது. தாங்கள் இங்கு இருந்தே ஆக வேண்டும்'' என்று மன்றாடினான் விசுவநாதன்.

இரவில் அரண்மனையிலேயே தங்குவதாகத் தன் அன்னையாருக்குச் செய்தி அனுப்பி விட்டு, நெடுநேரம் சக்கரவர்த்தியோடு அவன் இருந்தான். ராமராயரும் தமது

## ராஜ தந்திரம்!

மாஜித் தூதுவர் ஒருவரின் மனைவியை அவளுடைய பழைய தோழி ஒருத்தி கண்டு பேசிக் கொண்டிருந்தாள்.

''உன் கணவர் தூதுவர் வேலையில் இருந்தாரே, அந்த வேலை எப்படி?'' என்று தோழி கேட்டாள்.

''அவர் தூதுவர் வேலையில் இருந்தது எல்லா வகையிலும் நன்றாகத்தான் இருந்தது. ஆனால் ஒரு வகையில் எனக்குப் பிடிக்கவில்லை. அது என்னவென்றால் எல்லாருமே — வேலைக்காரிகூட ராஜ தந்திர முறையில் பேசுவார்கள்'' என்றாள் மாஜித் தூதுவரின் மனைவி.



''அப்படி என்ன பேசுவார்கள்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் தோழி.

''ஒன்றுமில்லை. வேலைக்காரி சில தட்டுகளை உடைத்து விட்டு, என்னிடம் வந்து, 'அம்மா நம்மிடம் இருந்த 120 தட்டுகள் இப்பொழுது 150 தாக இருக்கின்றன!' என்பாள்.''

---

மாளிகைக்குச் செல்லவில்லை. சக்கரவர்த்தி நள்ளிரவுக்குப் பிறகே தமது படுக்கை யறைக்குச் சென்றார்.

அங்கு அவரால் உறங்க முடியவில்லை. தமது வாழ்நாளிலேயே இப்படி ஒரு பெரும் புயல் வீசியும், அதை நேரில் சென்று தடுக்க முடியவில்லையே என்ற கொதிப்பு அவருக்குள் குமுறிக் கொண்டிருந்தது. பீஜப்பூர் அதில்ஷாவுக்கு அவர் அனுப்பியிருந்த தூதுவரிடம், அதில்ஷா மட்டும் இந்தப் போரில் ஒத்துழைப்பதாக இருந்தால், ரெய்ச்சூரின் ஆட்சிப் பொறுப்பை அவருக்கே கொடுத்து விடுவதாகவும் கூறியிருந்தார். அப்படிக் கூறிய பிறகும் அவர் ஒத்துழைக்க முன்வரவில்லை.

''பாபரை இப்போது முறியடிக்காவிட்டால், பிறகு எல்லோருமே தங்களுடைய நாடுகளை அவரிடமோ அவர் மக்களிடமோ பறி கொடுக்கத்தான் போகிறார்கள்!'' என்று தமக்குள் கூறியபடியே அவர் நீண்ட பெருமூச்சு விட்டார்.

திடீரென்று உணர்ச்சி வயப்படும் இயல்பினரான கிருஷ்ணதேவராயருக்குப் பலர் மீது அப்போது சினம் பொங்கியது. 'தம்பி அச்சுதராயர், அமைச்சர் சாளுவநரசிம்மர், அமரநாயக்கர் பலர், பாமினி சுல்தான்கள் இவர்களில் யாருமே பரத கண்டத்தின் எதிர்காலத்தில்தான் தங்களது எதிர்காலம் இருக்கிறது என்பதை உணரவில்லை. ஒவ்வொருவரும் தங்கள் சாதி, சமயம், குறுகிய நாட்டுப் பரப்பு, குறுகிய வாழ்நாள் இவற்றுக்குள்ளாகவே கிணற்றுத் தவளைகள்போல் மூழ்கிக் களிக்கிறார்கள். மேற்கிலிருந்து போர்த்துகீசிய நாட்டானும் வடக்கிலிருந்து பல பகைவரும் வந்தும்கூட இவர்கள் விழித்துக் கொள்ள மறுக்கிறார்கள்...... தலைவிதி! நாட்டின் தலைவிதி !......'

மதிகொண்ட மாமன்னருக்கு அந்தத் தலைவிதி இமயத்தை விடப் பெரிதாக அப்போது காட்சியளித்தது. இமயத்தையே கூட அவர் அப்போது நொந்து கொண்டார். அந்த மலை மட்டிலும் வடமேற்கே கணவாய்களுக்கு இடம் விடாமல் நெருக்கமாக உயர்ந்திருந்தால், இத்தனை கொடுமைகளை இந்த நாடு கண்டிருக்குமா?

ஒருகணம்கூட அவர் கண்களை மூடி உறங்கவில்லை.

**வி**டிவெள்ளி முளைத்தது. வழக்கம்போல் உடற்பயிற்சிக்கும் குதிரைச் சவாரிக்குமாக அவர் படுக்கையிலிருந்து துள்ளி எழுந்தார். கண்கள் சிவந்து கலங்கியிருந்தன. அவரோடு பயிற்சிகளில் விசுவநாதனும் ராமராயரும் அன்று கலந்து கொண்டார்கள். பயிற்சிகள் முடிந்தவுடன் அரண்மனை முகப்பு வாயிலுக்கு நடந்து வந்தார் சக்கரவர்த்தி.

''நான் இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை; பெரும்பாலும் நானே படைகளுடன் புறப்படலாம் என்றுதான் நினைக்கிறேன்'' என்றார் ராமராயரிடம். இதைக் கேட்டவுடன் ராமராயர் வாயடைத்துப் போனார். விசுவநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

அதற்கு மேல் சக்கரவர்த்தியிடம் மறுத்துப் பேசுவதற்கு அவர்களுக்குத் துணிவில்லை. இறைவனைப் பிரார்த்தனை செய்து கொண்டார்கள். ''உன்னுடைய சித்தம் எதுவோ அதன்படி நடக்கட்டும்; மனித சக்திக்கு மீறிய காரியங்களை உலகத்தில் நடத்துகிறவன் நீ!'' என்று விசுவநாதன் வேண்டிக் கொண்டான்.

சக்கரவர்த்தி தமது குதிரையில் தாவினார். உடனே அது வெகு வேகமாகப் பறந்தது. பின்னால் வருகிறவர்களைப் பற்றிய நினைவே அன்று அவருக்கு ஏற்படவில்லை என்று தெரிந்தது. அவருடைய மனோவேகத்துக்கேற்ப அவர் குதிரையும் பறக்க வேண்டுமென விரும்பியவர் போல் அவர் பறந்தார்.

போர்க்களத்தில் பாயும் புரவியென அவர் குதிரை பாய்வதைக் கண்டவுடன் விசுவநாதனும் ராமராயரும் அதைப் பின்பற்ற முயன்றார்கள். குதிரை வெறி கொண்ட வேகத்தில் முன்னே சென்று கொண்டிருந்தது. அதன் வாயிலிருந்து பொங்கிய நுரை காற்றில் மிதப்பதைப் பின்னே சென்றவர்கள் கண்டார்கள்.

விஜயநகரம் சமவெளிப் பிரதேசத்தில் உருவான நகரமல்ல. மேடுகள், பள்ளங்கள்,

குன்றுகள், படைகள், வளைவுகள், நெளிவுகள் கொண்ட நகரம். சக்கரவர்த்தி அதன் குன்றுகள் சூழ்ந்த எல்லைக்கே போய் விட்டார்.

வேகம் குறையவில்லை. விசுவநாதனும் ராமராயரும் அச்சத்தோடு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பாறையில் குளம்பு மோதி ஒரு சமயம் விசுவநாதனின் குதிரையே கவிழ்ந்து விழப் பார்த்தது.

'சக்கரவர்த்தி தம் மனக் கொதிப்பை ஆற்றிக் கொள்வதற்காக இப்படி வாயு வேகத்தில் பறக்கிறாரா? அல்லது அவரது மனக் கொதிப்பே இப்படி அவரை ஆட்டிப் படைக்கிறதா? ஏன் இந்த வேகம்? ஏன் இந்தப் பரபரப்பு? என்றுமில்லாதபடி இன்று அவருக்கு என்ன நேர்ந்து விட்டது?'

''சக்கரவர்த்திகளே! சக்கரவர்த்திகளே!'' என்று விசுவநாதன் கூவிய குரல் ஒலி, குன்றுகளில் பட்டு எதிரொலி செய்தது. ஆனால் யாருக்காக அவன் கூவினானோ அவர் மட்டும் அதைச் செவிமடுக்கவில்லை. அவனைத் தொடர்ந்து வந்த ராமராயரும் அவ்வாறே கூவிப் பார்த்தார். பயனில்லை.

சக்கரவர்த்தியின் புரவி குன்றின் மீது அப்போது தாவிக் கொண்டிருந்தது. எப்போதுமே உயரமான இடத்திலிருந்து எதையும் நோக்கும் இயல்புடையவர் அவர். குன்றின் உச்சியை நோக்கியே அவர் அப்போதும் போய்க் கொண்டிருந்தார். சற்று நிதானமாகப் போகக் கூடாதா? பின்னால் வருகிறவர்களின் நிலையைக் கண்டாவது, அவர்களுக்காகச் சற்றுத் தமது வேகத்தைக் குறைத்துக் கொள்ளக் கூடாதா?

மின்வெட்டும் நேரந்தான்; மின்வெட்டிய காட்சிதான்; மின்வெட்டிய இடியோசை தான்.......

சக்கரவர்த்தியின் குதிரை பயங்கரமாகக் கனைத்துக் கொண்டே, ஒரு பாறை தடுக்கித் தலைகுப்புற விழுந்தது. சக்கரவர்த்தியும் அதே சமயத்தில் பாறைச் சரிவில் புரண்டு கொண்டிருந்தார். விசுவநாதன் தன் குதிரையிலிருந்து தரையில் தாவி விரைந்தோடி அவர் அருகில் சென்றான்.

சக்கரவர்த்தியின் விழிகள் திறந்துதான் இருந்தன. ஆனால் அவற்றால் விசுவநாதனை இனம் கண்டு கொள்ள முடியவில்லை. வாய் திறந்து பேசவோ, அவன் கதறிய கதறலைக் கேட்கவோ அவருக்கு இயலவில்லை. முதுகுப்புறமிருந்து குபுகுபுவென இரத்தம் பாய்ந்து கொண்டிருந்தது.

பாபரின் பானிபட் போர்க்களத்தின் முடிவு கேட்டு, விஜயநகரத்தின் இலட்சியம் பெற்ற அதிர்ச்சியின் சின்னமாக அவர் அங்கே சரிந்து கிடந்தார். (தொடரும்)





# உலகமெலாம் தமிழ் முழக்கம்

பாரதியாரின் கனவு பலித்து வருகிறது என்ற எண்ணம்தான் சென்னை ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் நடைபெற்ற தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பதின்மூன்றாவது மகாநாட்டிலிருந்த போது எழுந்தது. 'உலகமெலாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்' என்றார் பாரதியார். இதோ ஒரு ரஷ்ய இளைஞர் திரு செம்பியன் ரோடின் (மேலே படத்தில் ஒலிபெருக்கிக் கருவியின் முன் நின்று பேசுபவர்தான்) தமது ருஷ்யக் குரலில் தமிழ் வழங்குவதைப் பாருங்கள்! தமிழின் இனிமை ருஷ்யக் குரலையும், எவ்வளவு இனிமையாக்குகிறது! அதோ, ஓர் அமெரிக்கரைப் பாருங்கள். தமிழ்க் கலைகளை ஆராய எவ்வளவு ஆர்வத்துடன் வந்திருக்கிறார் திரு பெக்! இவற்றையெல்லாம் பார்க்கும்போது, உலகமெலாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்யும் பணியைத் தொடங்கி விட்டோம் போலிருக்கிறதே என்ற மகிழ்ச்சிதான் ஏற்பட்டது!

இப்படியொரு கம்யூனிஸ ஆட்சிமுறையைக் கொண்ட ருஷ்யாவையும், ஜனநாயக ஆட்சி முறையைக் கொண்ட அமெரிக்காவையும் ஒருசேர ஒரு மேடையில் காணும் வாய்ப்பு தமிழ் எழுத்தாளர்களுக்கு எட்டித் தந்தது — கன்னித் தமிழ்! தேனினும் இனிய தீந்தமிழ்! தமிழ்ப் பயில வந்த காரணத்தினாலேயேயன்றோ இவர்களெல்லாம் இங்கு வந்து கூடினார்கள்!

ஏறத்தாழ இத்தகைய இன்பச் சூழ்நிலை தமிழ் எழுத்தாளர்கள் சங்கத்தில் இனி நிலவும் என்ற நம்பிக்கை சூசகமாக இவ்வாண்டு விழாவில் வெளிப்பட்டது. இதை ஒரு மகத்தான வெற்றியாகவே கருதுகிறேன்.

எழுத்தாளர்கள் என்பவர்கள் அனைவரும் ஒரே மாதிரியான அரசியல் கொள்கைகளையும் இலக்கியக் கொள்கைகளையும் வைத்துக் கொள்ள முடியாதவர்கள்! வேறுபட்ட கொள்கைகளையும், வேறுபட்ட இலக்கிய வழிகளையும் கொண்டவர்களாகத் தான் இருக்க முடியும். இவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் 'கொண்டதே கோலம், கண்டதே காட்சி' என்ற முறையில் பேசத் தலைப்பட்டார்களானால், அவர்கள் தங்களை அறியாமலே மற்ற சக எழுத்தாளர்களைப் புண்படுத்தியவர்களாகிறார்கள். ஆகவே மாற்றுக் கருத்தினையும் கொள்கையையும் மதித்து ம. பொ. சி. அவர்கள் சொன்னது போல், பிறரை 'நச்சுச் சொற்களால்' புண்படுத்தாத வகையில் நடந்து கொள்ள வேண்டும். அது இவ்வாண்டு பெரிதளவும் காண முடிந்தது.

முக்கியமாக இக்கசப்பு நிகழ்ச்சிகள் விழாவில் கருத்தரங்கு நிகழும்போது எழுவதுண்டு. இவ்வாண்டின் கருத்தரங்குக்குத் தலைமை வகித்த திரு செல்லபாண்டியன் காஷ்மீர் பிரச்னையைக் குறித்தும், சாதி வித்தியாசத்தைப் பற்றியும் குறிப்பிட்டுப் பேசிக் குழப்பியது தவிர, மற்றபடி அனைவரும் வெகு சிறப்பாக யாரையும் நோகாத முறையில் பேசினார்கள். திரு வஹாப் அவர்கள் ''தேசப்பாதுகாப்பில் எழுத்தாளனின் பங்கு''

என்ற கருத்தரங்கு விஷயத்தைச் சீரிய முறையில் தொடங்கி வைத்தார். அப்படியே ஸ்ரீமதி வசுமதி ராமஸ்வாமி, திரு கு. ராஜவேலு, திரு அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார், முகவை ராஜமாணிக்கம் முதலியோர் நல்ல முறையில் பேசினார்கள். நண்பர் கி. ராஜேந்திரன் பேச வந்தபோது ஒரு நல்ல பண்பே வெளிப்பட்டது.

தலைமை வகித்த திரு செல்லபாண்டியன், ''இனி வரும் பேச்சாளர்கள் காலத்தின் அருமை கருதிப் பத்து நிமிடங்களுக்குள் தங்கள் பேச்சை முடித்துக் கொள்ள விரும்புகிறேன்!'' என்றார்.

திரு ராஜேந்திரன் தமது உரையைக் கச்சிதமாக எழுதித் தயாரித்துக் கொண்டு வந்திருந்தார். ''இதைப் படித்துப் பார்த்தேன். முழுக்கப் படித்து முடிக்கப் பதினெட்டு நிமிடங்கள் பிடிக்கின்றன. ஆகவே, நான் படித்துக் கொண்டே வரும் போது பத்து நிமிடங்கள் ஆனவுடன் 'நிறுத்து' என்று சொன்னால் நிறுத்தி விடுகிறேன்'' என்றார் ராஜேந்திரன்.

''நான் ஏன் 'நிறுத்து' என்று சொல்ல வேண்டும்? நீங்களே பத்து நிமிடங்களுக்குள் உரையைச் சுருக்கிக் கொள்ளுங்கள்!'' என்றார் தலைமைவகித்த திரு செல்லபாண்டியன்.

இப்படிப் பேச்சாளரை நிறுத்த விரும்பாத தலைவரையும், தலைவர் உத்தரவுக்குக் கட்டுப்படுகிறேன் என்று கூறும் பேச்சாளரையும் காண்பது அரிதல்லவா?

திரு ம. பொ. சி. அவர்களின் சிறப்புப் பேருரையில் பல கருத்துக்களை வெளியிட்டார். மிக நீண்ட நேரம் பேசினார். கருத்துக்கு இடைஇடையே 'என் கருத்தை நீங்கள் ஏற்க வேண்டும் என்றில்லை. உங்கள் சிந்தனைக்குத்தான் வைக்கிறேன்' என்று மிகுந்த அவையடக்கத்துடன் பேசினார். இப்பண்பை எல்லா எழுத்தாளர்களும் கருத்தரங்கின் போது சென்ற ஆண்டுகளில் வெளிப்படுத்தியிருந்தால், இந்தப் பதின்மூன்று ஆண்டுகளில் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் எவ்வளவு மேம்பட்டிருக்கும், எவ்வளவு வளர்ச்சிபெற்றிருக்கும், எவ்வளவு சக்தி வாய்ந்ததாக இருந்திருக்கும் என்ற எண்ணம் தான் மேலோங்கியது.

இதற்கான அஸ்திவாரத்தைச் சென்ற ஆண்டு தலைவராக இருந்த திரு சோம. லெ. நன்கு அமைத்திருக்கிறார். அந்த அஸ்திவாரத்தின் மீது நல்ல கட்டடம் எழுப்பக் கூடிய புதிய தலைவராகத் திரு அழ. வள்ளியப்பா வந்திருப்பது நல்ல சூசகம்.



பன்மொழிப் புலவர் அப்பாத்துரையாருக்கு ஸி. பி. கேடயம் கொடுக்கிறார்.



பெ. நா. அப்புஸ்வாமி அவர்களுக்கு ஸி. பி. கேடயம் வழங்குகிறார்.

''விழாவைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே? என்று கேட்பது காதில் விழத்தான் செய்கிறது.

வரவேற்புரை நிகழ்த்திய ஸ்ரீமதி ஜெயா அருணாசலம் அவர்களின் உரையையும், தலைவர் சோம. லெ. அவர்கள் உரையையும் தமிழ் எழுத்தாளர் சங்க வெளியீடான பாரதியில் பார்த்துக் கொள்ளலாம். முக்கியமாக திரு சோம. லெ. அவர்கள், அரசாங்கத்துக்குச் சில உருப்படியான யோசனைகளை வழங்கியிருக்கிறார். பி. இ. என். சங்கத்துக்கு ஆண்டுதோறும் நிதி உதவி அளிப்பதுபோல் தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்குத் தமிழக அரசாங்கம் நிதி உதவியளிக்கலாம் என்று கூறியிருக்கிறார்.

இவ்வாண்டு, தமிழ் எழுத்தாளர் சங்கம் பன்மொழிப் புலவர் திரு கா. அப்பாத்துரை அவர்களுக்கும் திரு பெ. நா. அப்புஸ்வாமி அவர்களுக்கும் கேடயங்கள் வழங்கிப் பாராட்டிக் கௌரவித்துள்ளது.

சில தமிழ்க் கவிதைகளையும் பாரதியாரின் குயில் பாட்டையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த ஸ்ரீமதி ஹெப்ஸிபா ஜேசுதாசன் அவர்களுக்கும், திருக்குறளை உருது மொழியில் ஆக்கி வெளியிட்டுள்ள திரு ஹஸரத் சுஹரவர்த்தி அவர்களுக்கும் பதக்கங்கள் வழங்கிக் கௌரவித்துள்ளது.

டாக்டர் ஸி. பி. ராமசுவாமி அய்யர் அவர்கள் சிறப்புரை நிகழ்த்தி, தமது இளமையில் தமிழைத் தவிர ஆங்கிலம், பிரெஞ்சு, கிரீக், லத்தீன் ஆகிய பிற மொழிகளையே பயில நேர்ந்த வரலாற்றை ஆற்றாமையோடு சொன்னார். ஆனால் தமிழில் அவர் தாயுமானவர் பாடல்களையும் பாரதியார் எழுத்துக்களையும் எவ்வளவு ஊன்றிப் படித்திருக்கிறார் என்பது அவர் மேற்கோள்கள் காட்டிப் பேசியதிலிருந்து புலனாயிற்று. பல மொழிகள் படித்ததினாலேதான் தமிழில் சுவையான ஜீவனுள்ள கவிஞர்கள் யார் என்பது டாக்டர் ஸி. பி.க்கு யாருடைய உதவியும் இல்லாமலே தெரிந்ததோ என்றும் தோன்றியது.

மொத்தத்தில் தமிழ் எழுத்தாளர் சங்கம் புதியதோர் ஏட்டைத் திருப்பியிருக்கிறது. அது நல்ல முறையில் வளரும் என்று எதிர்பார்க்கவும் பாரதியார் கண்ட கனவு நனவாகவும் இடம் இருக்கிறது! —எஸ். வி. எஸ்.




சகோதரி பள்ளிப் படிப்பை முடித்து இப்போது ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த இடைக்காலத்தில், குறிப்பாகக் கடந்த இரண்டு மூன்று வருஷங்களில், ஆங்கிலப் பகுதியில் படித்த இந்திய மாணவிகளின் எண்ணிக்கை மளமளவென்று அதிகரித்து வந்தது. இருந்தாலும் எந்தவிதத்திலும் அந்தப் பள்ளிக்கூடம் இந்தியப் பாணியில் மாறிவிடவில்லை. அதற்கு மாறாக, அங்குள்ள சூழ்நிலை முன்னைவிட அதிகமாக — அப்படி அதிகரிக்க இடமிருந்தது எனக் கொண்டால் — மேனாட்டுப் பாணியிலேயே அமைந்திருந்தது.

ஒவ்வொரு நாளும் காலையில் எல்லா மாணவிகளும் ஒரு பெரிய கூடத்தில் ஒன்றுகூடுவார்கள், வரிசைக்கிரமமாகச் செல்வார்கள். எல்லா மாணவிகளும் ஒரே மதத்தைச் சேர்ந்தவர்களில்லையாதலால் காலையில் இறை வணக்கம் இருக்கவில்லை. அதற்குப் பதிலாக எல்லோரும் பிரிட்டிஷாரின் தேசிய கீதங்களைச் சேர்ந்து பாடுவார்கள்.

சுயராஜ்ய இயக்கத்தின் முதல் முழக்கங்களை உணர ஆரம்பித்திருந்த சில இந்தியப் பெண்கள், இப்பழக்கத்தை எதிர்க்கலானார்கள். துணிந்து மறுப்பதற்குத் தைரியம் இருப்பதாகக் கொண்டாலும்கூட, அவ்வாறு செய்வதனால் பலன் ஏதும் இராது என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆகையினால் அதிகாரத்தை எதிர்க்கும் முறையில் பாட்டுக்களின் வார்த்தைகளை மாற்றி உச்சரித்து உரக்கப் பாடினார்கள். இப்படித் துணிச்சல் காட்டுவதற்காகத் தண்டிக்கப்படுவோமோ என்று சந்தேகத்துடன் எதிர்பார்த்தார்கள்.

பின்னால் பாராளுமன்ற உறுப்பினராக விளங்கவிருந்த ஸ்ரீமதி நல்லமுத்து ராமமூர்த்தி, அன்று சகோதரி சுப்புலக்ஷ்மியின் மாணவிகளில் ஒருத்தி.

அவர் பின்னல் இவ்வாறு எழுதினர்: ''இதுபோன்ற விதேசப் பற்றுகளில் கட்டாயமாக எங்களை ஈடுபடுத்தியதால் எங்களுடைய இளம் மனங்களில் எதிர்ப்பைத்தான் எழுப்பி விட்டனர் அதிகாரிகள். எங்களுடைய நாட்டியங்கள், உடற்பயிற்சி எல்லாம் ஐரோப்பிய வகையைச் சார்ந்தவை — வால்ட்ஸ் (Waltz) கேக் வாக் (Cake Walk) ஸ்விடிஷ் டிரில் (Swedish Drill) போன்றவை. சங்கீதமும் ஆங்கிலச் சங்கீதம் தான். எங்கள் இளம் தமிழ் ஆசிரியை சகோதரி சுப்புலக்ஷ்மிதான் தேசியக் கும்மி, கோலாட்டம், எங்களுடைய சொந்த மொழியில் நாடகங்கள், பாட்டுகள் எல்லாம் பள்ளிக்கூடத்துக் கலை நிகழ்ச்சிகளில் புகுத்தி விட்டவர்.''

தங்களுடைய தாய்மொழியின் அழகிலும்,' அதன் பழங்கால நூல்களின் சிறப்பிலும் பெருமை கொள்ளச் செய்தது சகோதரிதான் என்று ஸ்ரீமதி ராமமூர்த்தி மேலும் எழுதியிருக்கிருள். பள்ளிக்கூடத்தின் ஆங்கிலப் பகுதி முழுவதிலும் பெண்கள் தங்கள் வகுப்பில் இருக்கும்போதோ, விளையாட்டின் போதோ ஒருவரோடு ஒருவர் ஆங்கிலத்தில்தான் பேசவேண்டும் என்பது சட்டமாக இருந்தது. தமிழில் பேசும்போது அகப்பட்டுக்கொண்டவர்கள் சிறிய அபராதம் கட்டவேண்டும். சகோதரியே இது சரி, இவ்வாறு தான் இருக்க வேண்டும் என்று நினைத்தாள். வீட்டில் ஆங்கிலம் பேசாத பெண்கள் அந்த மொழியை சகஜமாகக் கற்றுக்கொள்ள இதுவே சிறந்த முறை. ஆனல் அவர்களுக்கு ஒன்றை உணர்த்த விரும்பினள். அதாவது ஆங்கிலம் மிகவும் முக்கியமானதும் உபயோக மானதும், ஏன் மிகவும் அழகானது மான ஒரு பாஷையாக இருந்தாலும் அது தமிழைவிட மேலானதல்ல. தமிழிலிருந்து வேறுபட்டது, அவ்வளவுதான். எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் மிகவும் நுட்பமாகப் பாகுபடுத்தித் தமிழில் கூற முடியும் என்றும் அவைகளுக்குத் தகுந்தபடி ஆங்கிலத்தில் வார்த்தைகள் இல்லை என்றும், பெண்கள் சகோதரியிடமிருந்து அறிந்து கொண்டார்கள். ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பே — இங்கிலாந்தில் இலக்கியம் என்று கருதப்படக் கூடிய ஒன்றே அல்லது 'தற்காலத்தில் ஆங்கிலம் என்று அழைக்கப்படும் பாஷைக்கு ஒப்பான ஒரு மொழியோ உருவாவதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே — தமிழ்ப் பெரும் புலவர் திருவள்ளுவர் குறளை எழுதி விட்டார். இருந்தும், இன்றும் திருக்குறளைச் சுலபமாகப் படித்துப் புரிந்து கொள்ளலாம். அவருடைய செய்யுள்கள் இன்றும் அநேக படிப்பினைகளைக் கற்பித்து வருகின்றன. பள்ளியில் உள்ள பெரிய பெண்கள் இதுபோன்ற விஷயங்களைக் கேட்டு வியப்பு மிக மெய் சிலிர்த்தார்கள். கல்வி ஞானம் பெறுவதில் ஏற்படக் கூடிய உற்சாகமானதோர் உணர்ச்சிப் பெருக்கை அவர்கள் இப்போதுதான் முதன் முறையாக அனுபவித்தார்கள். எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு இஷ்ட பாடமாகத் தமிழைப் படிக்க வேண்டும் என்று சகோதரி கூறிய போது ஆவலோடு அவர்கள் அதற்கு ஒத்துக் கொண்டார்கள். பழைய நூல்கள் சில மிகவும் கடினமாக இருந்தன. ஆனல் பெண்கள் உற்சாகத்தை இழக்கவில்லை. அவர்களுக்குப் புரியாத எதையும் விளக்கிச் சொல்லச் சகோதரி எப்போதும் தயாராக இருந்தாள். சகோதரி படிப்பில் பின்தங்கிய பெண்களைக் குத்திக் காட்டி, கேலி செய்வதோ அவர்கள் எழுதிய பாடங்களைக் கிண்டல் செய்து, அவர்கள் உற்சாகத்தைக் குலைப்பதோ இல்லை. அவர்களுக்குக் கிடைத்த ஆசிரியைகளுக்குள் சகோதரியே மிகவும் மேலானவள்.

**மி**ஸ் பாட்டர்ஸன் சகோதரி புகுத்திய புதுமைகளை வரவேற்றுள். மிஸ். லின்ச்சும் அவ்வாறேதான். இன்ஸ்பெக்டர் அம்மாள் சுப்புலக்ஷ்மிக்கு அடிக்கடி சொல்லி அனுப்புவதைப் பார்த்துச் சில உபாத்தியாயினிகள் பொறுமைப் பட்டார்கள்! அவர்கள் இருவருக்குமிடையே பேசவேண்டிய விஷயங்கள் நிறைய இருந்தன. விதவைகள் இல்லம் தொடங்கிச் சில மாதங்களுக்குப் பிறகு மேலும் இரண்டு இளம் விதவைகள் அதில் சேர்ந்தார்கள். ஆயினும் பெற்றோர்களைப் பழைய மரபிலிருந்து விடுவித்து அவர்களுடைய விதவைப் பெண்களுக்குப் புது வாழ்வு தொடங்குவதற்கான ஒரு வாய்ப்பளிக்க முன்வருமாறு இணங்க வைப்பது மிகவும் கடினமானதாக இருந்தது. ஆதி காட்டேஜுக்குத் தம் பெண்களை அழைத்து வருவதாக வாக்களித்த சில தந்தையர், பிறகு, தம் நண்பர்களும் உறவினர்களும் என்ன சொல்வார்களோ என்று அஞ்சி வராமல் இருந்து விடுவதைப் பார்த்து, மிஸ் லின்ச் வெகுண்டு எழுவாள். அவர்கள் வாக்களித்து விட்டதைச் சுட்டிக் காட்டி அதற்குக் கீழ்ப்படியுமாறு அவர்களைப் பயமுறுத்திப் பார்ப்பாள்.

''பிறரைப் பயமுறுத்தக் கூடிய ஆற்றல் எனக்கு இல்லையா என்ன?''

# என் அருமைப் பாட்டி!

பாட்டி மீது எனக்கு மிகவும் பிரியம். பாட்டிக்கும் என் மீது அதிக அன்பு. எங்கள் இருவருக்குமே சுவைமிக்க நியூட்ரீன் மிட்டாய்கள், டாபிகள் மீது உயிர்.

நியூட்ரீன் மிட்டாய்களும், டாபிகளும் தின்னத் தின்னத் திகட்டாதவை. மகிழ்ச்சி ஊட்டுபவை. உங்கள் வயது ஆறு ஆனாலும், அறுபது ஆனாலும் அவை உங்களுக்குப் பிடிக்கும்.








மிட்டாய்கள், டாபிகள்

என்று மிஸ் லின்ச் ஏமாற்றத்துடன் கூறினாள். சுப்புலக்ஷ்மியும் அவளும், மற்றும் ஒரு தந்தை தம் வாக்கை மீறியதைக் குறித்து வருத்தப்பட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''இருக்கிறது; பிறரைப் பயமுறுத்தக்கூடியவர்தான் நீங்கள்'' என்று சுப்புலக்ஷ்மி ஆமோதித்தாள். ''ஆனால் பயமும் சினமும் மோசமான ஆயுதங்கள். நீங்கள் அவற்றை உபயோகப்படுத்தாமலிருப்பதே நமக்கு நல்லது என்று நினைக்கிறேன்.''

மிஸ் லின்ச் அவளை வெறித்து நோக்கினாள். பி. டி. பள்ளிக்கூடத்தில் யாருமே, ஏன் மிஸ். பாட்டர்ஸன்கூடத்தான், தம் மேலதிகாரி ஒருவரிடம் சரிசமமாகப் பேசக் கனவிலும் துணிந்திருக்க மாட்டார்கள். ''நீ ரொம்பவும் துணிச்சல் உள்ளவள். நேரிடையாக முகத்திலடித்தாற்போல் இப்படி என்னிடம் சொல்கிறாயே'' என்றாள் அவள்.

''இல்லை,'' சுப்புலக்ஷ்மி அடக்கமாகக் கண்களைத் தாழ்த்தி மறுமொழி தந்தாள். ''இது துணிச்சல் இல்லை. எளிமைதான். உண்மையைக் கூறத் துணிச்சல் எதற்கு? வெற்றி பெறுவதற்குச் சிறந்த முறை அன்பையும் மதிப்பையும் பெறுவதுதான். பயமுறுத்தி ஆள்பவர்களால் நன்மை ஏதும் செய்ய முடியாது.''

இது அனைத்தும் உண்மை என்று மிஸ் லின்ச்சுக்குத் தோன்றவில்லை. ஆயினும் இளையவளான இந்தப் பெண்மணி தன்னைப் போலவே அபிப்பிராயங்களை வெளிப்படையாக எடுத்துச் சொல்பவளாக விளங்க ஆரம்பித்திருப்பதைப் பார்த்து அவள் ஆனந்தம் கொண்டாள். மரியாதைக்காகவும், காரியார்த்தமாகவும் தான் சொல்வதையெல்லாம் ஆமோதிக்கும் அநேகம் பேர்களை அவள் சந்தித்திருக்கிறாள். அவர்களுடைய செய்கைகள் அவர்கள் வெளியிட்ட அபிப்பிராயங்களுக்கு மாறுபட்டிருந்தன.

சுப்புலக்ஷ்மி ஒளிவு மறைவின்றிப் பேசியது அம்முதியவளையும் மனம் திறந்து பேசத் தூண்டியது. வெறுப்பு கொடிய பாவமாகக் கருதப்படவேண்டிய ஒன்று என்பதாக வளரும் பிராயத்திலிருந்தே உணர்ந்து வந்த சுப்புலக்ஷ்மியிடம் அவள் கூறினாள்:

''அயர்லாந்து நாட்டவரும் இந்தியர்களும் ஒரே மாதிரியான நிலையில் தான் இன்று இருக்கிறார்கள். ஆங்கிலேயர்கள் இரக்கமற்றவர்களாயும் செல்வப் பெருக்கத்திலேயே அதிக நாட்டம் உள்ளவர்களாயும் இருப்பதனால்தான் நம் இரு நாடுகளையும் வெற்றிகொண்டு விட்டிருக்கிறார்கள். ஆனால் இந்த வெற்றி நீடித்து நிலைக்காது. நமது தேசத்தவர் விழிப்படைந்து விட்டார்கள். ஒரு நாள் நாம் எல்லோரும் சுதந்திரம் அடைந்து விடுவோம்.''

## 4

சித்தி இப்பொழுது ஆதிகாட்டேஜுக்குச் சென்றுவிட்டபடியால் முன்னைப் போல் விசாலாட்சிக்குக் கல்லூரி நாட்களைத் தன் கணவருடன் கோயமுத்தூரில் கழிக்க முடியவில்லை. சென்னையில் அவள் தேவைப்பட்டாள்.

அவளுடைய கடைசிப் பெண்கள் சொர்ணமும், நித்யாவும் மிகவும் கெட்டிக்காரப் பெண்கள். இருவருக்கும் பள்ளிக்கூடம் மிகவும் பிடித்திருந்தது. தன் பெரிய சகோதரிகளைப் போல் இல்லாமல் சொர்ணம் தன் வயதுக்கு மேல் உயரமாக இருந்தாள். உடலின் அமைப்பைப் பார்த்தால் அழகுச் சிலையாக வளருவாள் என்று தோன்றியது. அவளுடைய தகப்பனாரால் பெரிய அளவில் வரதட்சிணை தர முடியாது என்பது தெரிந்திருந்தாலும்கூட, பல பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்காகச் சொர்ணத்தைக் கேட்டனர். பிள்ளையைப் பெற்ற பல தாய்மார்கள் விசாலாட்சியிடம் பெண்ணின் திருமணத்தைத் தள்ளிப் போடுவது உசிதமல்ல என்று நினைவுபடுத்தியவண்ணம் இருந்தனர்.

சகோதரி இப்போது என்னிடம் கூறினார்: ''அந்த நாட்களில் பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்த பெண் பெரியவளாகி விட்டால் பிறகு அவளுக்குக் கல்யாணம் செய்வதே மிகவும் கடினம். முடியாத காரியம் என்றே சொல்லலாம். அதனால் பெண்ணைப் பெற்றவர்கள் எப்படியாவது அவளுக்குச் சீக்கிரம் கல்யாணத்தை முடித்துவிடத் துடித்தார்கள். பிள்ளையைப் பெற்றவர்களுக்கு இப்படிப்பட்ட அவசரம் ஏதும் இல்லையே? அவர்கள் தாங்கள் எது கேட்டாலும் கிடைத்துவிடும் என்று மிகவும் அபரிமிதமான அளவில் வரதட்சிணை கேட்பார்கள். உண்மையில் இவ்வாறு பயமுறுத்தலுக்கும் பணம் பறித்தலுக்கும் ஆளான தந்தைமார்கள் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. ஒன்றிரண்டு பெண்களுக்கு மேல் பெற்றுவிட்டவர்கள் பாடு அவஸ்தைதான்!''

''கல்யாணம் நடக்காமல் தாமதமானால் பிறகு அப் பெண்களின் நிலை என்ன? அவர்கள் வாழ்நாள் முழுதும் கன்னியாகவே இருந்து விடுவார்களா?''

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில் ஈறுகளைப் பலப்படுத்துகிறது என்று




[illegible]

[illegible]

[illegible]

[illegible]

வேறு எந்த டூத் பேஸ்ட்டிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை. குழந்தைகள் அதன் இனிய பெப்பர்மிண்ட் வாசனையை விரும்புகின்றனர்.




பணத்தை
மிச்சப்படுத்துங்கள்—
பெரிய எகானமி
சைஸை வாங்குங்கள்!

CTPA. G. 11 TAM

''இல்லை, இல்லை. பெற்றோர்கள் ஏமாற்று வித்தைகளைக் கையாள்வார்கள், தாய்மார்கள், பாவம், மணமாகாத தங்கள் பெண் பெரியவளாகி விட்டால் அதை ரகசியமாக வைத்திருப்பார்கள் !''

சகோதரி பிறர் பேசுவதைத் தெளிவாகச் செவியுறத் தான் பயன்படுத்தும் கருவியின் 'பாட்டரி'ப் பெட்டியை எடுத்துச் சிரித்துக் கொண்டே நன்கு குலுக்கினார். பிறகு என்னைப் பார்த்துத் தொடர்ந்தார் : ''மனிதர்கள் பைத்தியக்காரத்தனமாக நடந்து கொள்வார்கள். அந்த நாட்களில் கல்யாணம் ஆகுமுன் எந்தப் பெண்ணும் பெரியவளாக முடியாது. அவளுக்கு எத்தனை வயதானாலும் சரிதான்!'' சகோதரி சிரித்தார்-சந்தோஷத்தோடு அல்ல; ஒருவித வெறுப்புடன்.

பதின்மூன்று வயதிலேயே சொர்ணம் திண்மையான மனதிடம் கொண்டவளாக இருந்தாள். படிப்பிலேயே மூழ்கியிருந்தாள். அவளும், சிறுமி நித்தியாவும் இப்பொழுது பிடித்தே பெரிய லட்சிய ஆசைகளைக் கொண்டிருந்தனர். சகோதரியைப் போலவே தாங்களும் உபாத்தியாயினிகளாகி விடுவது என்று தங்களுக்குள் திட்டமிட்டிருந்தனர்.

கல்யாணம் செய்து கொள்வதால் அவர்கள் ஆசை பூர்த்தியாவது தடைப்படாது என்று விசாலாட்சி எடுத்துக் கூறினாள். அவர்களுடைய அப்பாவின் நண்பர்களில் அநேகர் தங்கள் பிள்ளைகளுக்குப் படித்த மனைவிகள் வேண்டுமென்று விரும்பினார்கள். அவர்கள், தங்கள் நாட்டுப் பெண்கள் விரும்பினால் பெரியவர்களான பிறகு உத்தியோகம் பார்ப்பதற்குக்கூடத் தடை செய்ய மாட்டார்கள். இது போன்ற வாதங்களினால் சொர்ணத்தை இணங்க வைக்க முடியவில்லை. தான் சுதந்திரமாக இருக்க வேண்டும்; பிறருடைய விருப்பத்துக்குக் கீழ்ப்படியாமல் தன் வாழ்க்கையைத் தானே வகுத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புவதாகக் கூறி அவள் பிடிவாதமாக இருந்தாள். அவளுடைய திருமண விஷயமாக நாளுக்கு நாள் கவலை அதிகரித்துக் கொண்டு வந்தது அவள் தாயாருக்கு. தன்னால் இயன்றவரையில் அப்பெண்ணின் மனத்தை மாற்ற வேண்டுமென்று எண்ணினாள். ''உனக்குத் தெரியவில்லையா?'' என்று அவள் ஒரு நாள் ஆரம்பித்தாள். ''கல்யாணம் செய்து கொள்ளாவிட்டால் என்ன நடக்கும் தெரியுமா ? நீ வயதான பிறகு — உன் தகப்பனாரும் நானும் போய் விட்ட பிறகு, உன் சகோதரிகள் தங்கள் குழந்தைகளுடனும், பேரன் பேத்திகளுடனும் சந்தோஷத்தில் மூழ்கியிருக்கும் போது,— உலகத்தில் தன்னந்தனியாக நிற்பாய்.''

சொர்ணத்தின் பெரிய அகன்ற கண்கள் தெளிவாகவும் அமைதியாகவும் இருந்தன. அவள் தாயின் முகத்தை ஏறிட்டு நோக்கிக் கேட்டாள். ''அப்புறம்? அக்கா? — அவளுக்கு என்ன நேரும் என்று சொல்லவில்லையே ?''

எதையும் பாதியில் விட்டு விடக் கூடியவள் அல்ல விசாலாட்சி. சொர்ணம் என்றாவது ஒரு நாள் தானாகவே மனத்தை மாற்றிக் கொள்ளுவாள் என்று எதிர்பார்த்தவண்ணம் இருந்தாள். இதற்கிடையில் சொர்ணத்தின் இரண்டுருளியைச் சம்பிரதாயமாகக் கொண்டாடத் தீர்மானித்தாள் விசாலாட்சி. எழும்பூரில் உள்ள ஆசாரமான மாதர்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களையும் அவர்களுடைய பெண் குழந்தைகளையும் தொடர்ந்து இரண்டு மூன்று நாட்கள் அரசமரத்து வீட்டில் நடைபெறவிருக்கும் விசேஷங்களில் பங்கு எடுத்துக் கொள்ளும்படி அழைத்தாள்.

யாரும் மறுக்கவில்லை. எழும்பூர் பெண்மணிகள் தங்களுக்குள் இந்தப் புதுமையைப் பற்றி வம்பளந்திருப்பார்கள். ஆயினும் அவ்வளவு மதிப்புக்குரிய வீட்டின் அழைப்பை அவர்கள் கட்டளையாகக் கருதினார்கள். தவிரவும் என்னதான் நடக்கும் என்பதைக் காணும் ஆவல் குறுகுறுப்புடன் இருந்தார்கள்.

(தொடரும்)





✲ சோவியத் நாடு நேருஜி பரிசுப் போட்டியில் மாக்ஸிம் கார்க்கியின் 'அன்னை' என்னும் நூலை மொழிபெயர்த்த திரு சிதம்பர ரகுநாதன் முதன் மந்திரியிடம் பரிசு பெறுகிறார்.

✲ தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்த நேபாள மன்னர் மகேந்திரரும், ராணி ரத்னவும் மகாபலிபுரம் சென்று கலைச் செல்வங்களைக் கண்டு களித்தனர். சென்னையில் பெரம்பூர் இண்டக்ரல் கோச் பாக்டரிக்குப் போய்ப் பார்வை யிட்டனர். நேப்பாள ராணி ரத்ன 'டூரிஸ்ட்' ரயிலுக்குள் ஏறிப் பார்வையிடுகிறார்.



✲ இந்த வருஷம் தமிழ் இசை விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களுக்கு 'இசைப் பேரறிஞர்' என்ற பட்டத்தைத் தமிழக செய்தித்துறை மந்திரி திரு பூவராகன் வழங்கிக் கௌரவிக்கிறார்.






## திருமுருக கிருபானந்தவாரியார்

## 62. வள்ளலுக்கு ஒரு வள்ளி!

தெய்வத் தச்சன் கந்தப் பெருமானின் ஆணையைச் சிரமேற் கொண்டு, விண்ணுலகத்தைச் சூழப் பொன் மதில்களையும், நான்கு வாயில்களையும், ஏழு நிலைமாடங்களையும், கோபுரங்களையும், எண்ணில்லாத வீதிகளையும், நடுவே ஒரு பெருங் கோயிலையும், செய்குன்றுகளையும், அளவில்லாத நீர் நிலைகளையும் அமைத்தான். மாளிகைகளையும் மணிமயமான மண்டபங்களையும் உண்டாக்கினான். தவப் பள்ளிகளை அழகுற அமைத்தான். இந்திரனுக்கும், பிரம்மாவுக்கும், திருமாலுக்கும் தனித் தனியாகக் கோயில்களை அமைத்தான். கந்தக் கடவுள் எழுந்தருளுவதற்கு ஏற்றதோர் திருக்கோயிலையும் தனியாக அமைத்தான். அழிந்த விண்ணுலகம் இப்பொழுது பிரம்மாவின் சத்திய உலகத்தினும் வனப்புடையதாகவும், வளமுடையதாகவும் விளங்கியது. தெய்வத் தச்சன் மனத்தால் இவ்வாறு வளங்களையெல்லாம் சேர்த்து அமைத்த திறமையைக் கண்டு யாவரும் விம்மிதமுற்றனர். பிரம்மாவும் திருமாலும், தெய்வத் தச்சனிடம், ''உனது தொழில் திறமைக்கு நிகரில்லை'' என்று கூறிப் புகழ்ந்தார்கள்.

விண்ணுலகம் பெற்ற அழகைக் கண்ட இந்திரன் மகிழ்ச்சிப் பெருக்கினால் தெய்வத் தச்சனைக் கட்டித் தழுவினான். அமராவதியை அழகுற அமைத்த தெய்வத் தச்சன் ஆறுமுகப் பெருமானின் திருவடிகளை வணங்கி நின்றான். ஆறுமுக வள்ளல் தெய்வத் தச்சனுக்கு அருள் புரிந்து தம் கணங்களுடன் நகரத்தினுள் சென்றார்.

அப்போது அயிராணி அரம்பையர்கள் சூழ ஒரு விமானத்தில் வந்து இந்திரன் கோயிலை அடைந்தாள். ஆறுமுகக் கடவுள் அந்நகருட் புகுந்து தெய்வயானையம்மையாருடன் சபா மண்டபத்தில் எழுந்தருளியிருந்தார். பின்னர் மயில்வாகனக் கடவுள் திருமாலையும், திசைமுகனையும் நோக்கி, ''அமராவதியில் இந்திரனுக்கு விரைவில் முடிசூட்டுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

கந்தப் பெருமானின் கட்டளையை ஏற்ற தேவர்கள், சாமரம், குடை, வாள், கிரீடம் முதலிய அரச அங்கங்களையும், மற்றவற்றையும் உடனே கொண்டுவரச் செய்தனர். இந்திரனைக் கங்கை நீரினால் அபிஷேகம் செய்வித்தனர். ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துச் சிங்காதனத்தில் அமரச் செய்தனர். விண்ணவர் போற்றவும், கற்பகமலர் தூவவும், அரம்பையர் பாடவும், முழவுகள் முழங்கவும், மிகவும் சிறப்பாக இந்திரனுக்கு முடி சூட்டினார்கள். தேவர்கள் யாவரும் இந்திரனை வணங்கினார்கள். இந்திரன் எம் பரமபிதாவாகிய கந்தக் கடவுளைத் தொழுது, ''எந்தையே! சூரனையழித்து, அடியேன் இழந்த அரசுரிமையையும், பொன்னுலக ஆட்சியையும் மீட்டுத் தந்து என்றும் அழியா இன்பத்தையும் நலத்தையும் வழங்கியருளினீர்கள். அடியேன் உய்ந்தேன். இதனினும் ஒருவன் பெறும் பேறு உண்டா? தங்கள் திருவடித் தொழும்பனாகிய என்னுடைய தவமே தவம்'' என்று துதிசெய்து நின்றான்.



''இந்திர! இனி நீ அஞ்சுந்தன்மையின்றி என்றென்றைக்கும் அமராவதியை அரசுபுரிந்து இன்புற்று இருப்பாயாக'' என்று அருள் புரிந்து ஆசி கூறியருளினார் ஆறுமுகவள்ளல். பின் எல்லாத் தேவர்களையும் தத்தம் இடங்களுக்குச் செல்லும்படி பணித்தார்.

**க**ந்தவேள் விண்ணுலகில் சில நாட்கள் தங்கியிருந்த பின் தெய்வயானை அம்மையாரோடு கந்தவெற்பில் வீற்றிருக்கத் திருவுளங் கொண்டு புறப்பட்டார். அதனை அறிந்த ஆகண்டலன், அரவணைச் செல்வன், அம்புயன் முதலியோர் வந்து கந்தவேளைத் தொழுதார்கள். பெருமான், அவர்கள் புடைசூழத் தெய்வயானை அம்மையாருடன் தேரில் அமர்ந்தார். வீரவாகு தேவர் அத் தேரைச் செலுத்தினார். இலக்கத்தெண்மரும் பூதர்களும் சூழ, ஆறுமுகக் கடவுள் திருக்கயிலாய மலையை அடைந்தார். அன்னை, தந்தையை வணங்கி அவர்களது திருவருளும் விடையும் பெற்றார். எல்லாத் தேவர்களுக்கும் தத்தம் இருக்கை செல்லுமாறு விடை கொடுத்து விட்டுக் கந்தகிரியை அடைந்தார். வீரவாகு தேவர் முதலிய வீரரும், படைத் தலைவர்களும், பூதர்களும் துதித்துக் கொண்டு நிற்க, தெய்வயானை அம்மையாரோடு இரத்தின சிங்காசனத்தில் வீற்றிருந்தருளினார்.

துய்யதோர் மறைகளாலும்
துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க
சேவலும் மயிலும் வாழ்க
வெய்ய சூர் மார்பு கிண்ட
வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீர் அடியார் வாழ்க
வாழ்கஇப் புவனம் எல்லாம்

புக்கதோர் குமர மூர்த்தி
பொருதிறல் வயவர் யாருந்
தொக்கனர் பணியில் நிற்பத்
தொல்படைக் கணங்கள் போற்ற
மைக்கருங் குவளை ஒண்கண்
மடவர லோடு மேவி
மிக்குயர் மணிப்பீ டத்தில்
வீற்றிருந் தருளி னானே

ஃ ஃ ஃ

**வ**ளம் பல நிறைந்து அண்டர் பரவுந் தொண்டை நன்னாட்டில், மேற்பாடி என்னும் ஊரின் அருகில் வள்ளிமலை என்று ஒரு மலை உள்ளது. அது காண்பார் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் கவினுடையது. அம்மலைச் சாரலில் அருந்தவ மிக்க சிறூர் என்ற ஓர் ஊர் பெருமை பெற்றிருந்தது. சிறிய ஊராகப் பணிந்திருக்கும் வினய அழகே அழகு. எளிமையின் உருவான வள்ளியம்மை பிறக்க இச் சிற்றூரைக் காட்டிலும் உற்ற இடம் எதுவுண்டு? இன்றைச் சித்தூரே அன்றைச் சிறூர். அச் சிற்றூரில் வேடர் அரசனும், பண்டைத் தவமுடையோனுமாகிய நம்பி என்பான் வாழ்ந்தான். அவன், தாய் வழி பத்தும், தந்தை வழி பத்தும், தான் ஒன்றுமாக இருபத்தொரு தலைமுறைகளாக முருகப் பெருமானை ஆராதனை செய்து வந்தவன். அவனுக்குச் சில



ஆண் மக்கள் இருந்தனர். பெண் மகவு இன்மையால் அவன் உளம் வருந்தினன். அடியவர் வேண்டும் வரங்களை வழங்கும் ஆறுமுகக் கடவுளை வழிபட்டும், குறி கேட்டும், வெறியாட்டயர்ந்தும் மகட் பேற்றை எதிர்பார்த்திருந்தான்.

கண்வ முனிவருடைய சாபத்தினால் திருமால் சிவ முனிவராகவும், திருமகள் மானாகவும், உபேந்திரன் நம்பியாகவும் பிறந்திருந்தனர். அந்தச் சிவ முனிவர் சிவபெருமானிடம் சித்தத்தைப் பதிய வைத்து, அம்மலையிடத்தே மாதவம் புரிந்து கொண்டிருந்தார். அப்போது முருகப் பெருமானின் திருவருளினால் இலக்குமியவதாரமாகிய அழகிய, பொன் மயமான பெண் மான், முனிவர் முன்னே வந்து உலாவியது. மானைக் கண்ட சிவ முனிவர் காம உணர்ச்சி பெற்றுக் கலங்கினார். தெய்வப் புணர்ச்சி போலக் கண் மலரால் அம்மானிடத்து இன்பம் அநுபவித்துப் பின் மெய்யுணர்வால் தெளிவுற்று உறுதியான தவத்தில் நிலை பெற்று நின்றார்.

கந்தவேளைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு ஆங்கொருசார் தவம் புரிந்து கொண்டிருந்த சுந்தரவல்லி, முன்பு தனக்கு முருகவேள் கட்டளையிட்டவாறு, அம் மான் வயிற்றில் கருவாகப் புகுந்தாள். முருகனின் அம்மான் திருமால். அம்மான் மகள் இம் மானின் மகளாக வந்தாள். மான் சூல் கொண்டது. அங்கும் இங்கும் உலாவித் திரிந்து உடல் நொந்தது. வேட்டுவப் பெண்கள் வள்ளிக் கிழங்கு அகழ்ந்தெடுத்த குழி ஒன்றில் பல்கோடிச் சந்திரப் பிரகாசமும் மரகத வண்ணமும் உடைய சர்வலோக மாதாவைக் குழந்தையாக ஈன்றது. மனித உருவில் தான் ஈன்ற அந்தக் குழந்தையைக் கண்ட மான் மருண்டு ஓடி விட்டது. வைகுண்டம் போய் இலக்குமியாயிற்று.

மான் வயிற்றில் பிறந்த குழந்தை அழுது கொண்டிருந்தது. அந்த அழுகையொலி, 'கின்னரர்கள் யாழ் ஒலியோ? கலைவாணியின் இன்னிசையோ?' என்று ஐயுறும் வண்ணம் மதுரமாக இருந்தது. அதனைக் கேட்டு அவ்விடத்தில் வேட்டைக்கு வந்த வேட்டுவர் மனமகிழ்ந்தனர். பிறந்த குழந்தை அழாவிடில் மற்றவர் அழ வேண்டிவரும் தானே?

ஆறுமுகக் கடவுளுடைய திருவருள் தூண்டுதலால், வேட்டுவ மன்னனாகிய நம்பி, தன் மனைவியோடு பரிசனங்கள் சூழத் தினைப்புனத்துக்கு வந்திருந்தான். குழந்தையின் அழுகையொலி கேட்டு உள்ளமும் ஊனும் உருகினான். அழுகுரல் கேட்ட வழியே போனான். அங்கே, பாற்கடலில் பிறந்த திருமடந்தை நாணுமாறு விளங்கும் திருக் குழந்தையைக் கண்டான். ''என் மாதவம் பலித்தது'' என்று உள்ளம் உவந்தான்; ஆனந்தக் கூத்தாடினான். தோள்களைத் தட்டினான்; துள்ளிக் குதித்தான். குழந்தையை எடுத்துத் தன் மனைவியாகிய கொடிச்சியின் கரத்தே கொடுத்தான். பெண் குழந்தையின்றிப் பல்லாண்டுகளாக வருந்திக் கொண்டிருந்த கொடிச்சி மிக்க மகிழ்ச்சியுடன் குழந்தையைக் கையிலேந்தி உச்சி மோந்து முத்தம் தந்தாள்; மார்போடு அணைத்துக்கொண்டாள். அன்பின் மிகுதியினால் அவளுக்குப் பால் பெருகிற்று; பாலூட்டினாள். பின்னர் அனைவரும் சிறூர் போய்ச் சிறு குடிலில் புகுந்து குழந்தையைத் தொட்டிலில் இட்டனர். குறிஞ்சிப் பறையை ஒலித்துக் குரவைக் கூத்தாடினர், வெறியாட்டயர்ந்து முருகவேளுக்கு நல்விழா எடுத்தனர். வள்ளிக் கிழங்கை அகழ்ந்த குழியிற் கண்டெடுத்ததால் அக் குழந்தைக்கு வள்ளி என்ற பெயரிட்டார்கள். படித்தறியாத வேட ராஜன் அன்பு மிகுதியால் வைத்த அப்பெயர் மற்றொரு விதத்திலும் குழந்தைக்குப் பொருந்துவதாயிற்று. வள்ளல் முருகன் எனில், இச்சுந்தரவல்லி வள்ளி என்றுதானே பெயரிடப் பெறவேண்டும்? கேட்டதெல்லாம் கொடுக்கும் வள்ளன்மை பொருந்திய இச்சா சக்தியே வள்ளியன்றோ? கிரியா சக்தியாகிய தெய்வயானையையும், இச்சா சக்தியாகிய வள்ளியம்மையாரையும் உயிர்கள் இன்புறும் பொருட்டுத் தழுவுகிறார் முருகப் பெருமான். கண்ணாடியில் தெரியும் நிழலை அசைக்கும் பொருட்டுத் தான் அசைவது போல் உலக உயிர்கள் இன்புறும் பொருட்டு ஞானபண்டிதன் சக்தியுடன் இன்புறுகிறார் என்பதேயன்றோ தத்துவம்?

**மூவா முகுந்தன் முதல் நாள்**
**பெறும் அமுதை**
**தேவாதி தேவன் திருமைந்தன்**
**தேவிதனை**
**மாவாழ் சுரத்தில் தம்**
**மாமகளாப் போற்றுகையால்**
**ஆவா குறவர் தவம்**
**ஆர் அளக்க வல்லாரே**

உலகங்களுக் கெல்லாம் தாயாகிய வள்ளி நாயகியை வேட்டுவ மன்னனாகிய நம்பியும் அவன் மனைவி கொடிச்சியும் தங்கள் குழந்தையாக அன்பு செய்து இனிது வளர்த்தார்கள். **(தொடரும்)**

### அத்தியாயம் முப்பத்திநான்கு

# புதிருக்குள் புதிர்!

நாயர் பேச்சிலிருந்து 'நீ என் கடையண்டை படுக்காதே' என்று சொல்லாமல் சொன்னதைப் புரிந்து கொண்ட சபேசன் கணக்கைக் கூட்டி எழுதிக் கொடுத்துவிட்டுத் திகிலும் தயக்கமுமாக அங்கிருந்து எழுந்து போய் அந்த மன்ரோ சிலையின் அடிவட்ட தளத்தில் தன் கான்வாஸ் பையைத் தலைக்கு அணையாக வைத்துக் கொண்டு படுத்து விட்டான்.

வெகு நேரம் வரையில் அவனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. 'அந்த முரட்டுப் பயல் நச்சி அவ்வெகுளிப் பெண் வேதாவை என்ன பாடுபடுத்தினானோ!' என்ற எண்ணமே அவன் மனத்தில் பெரிதாக எழுந்து குடைந்து கொண்டிருந்தது. அத்துடன், தன்னைப் பற்றி நச்சி என்ன நினைத்து அப்படி ஆவேசமாக அடிக்க வந்தான் என்றும் சிந்தித்துப் பார்த்தான். 'நான்தான் அவளை எங்கோ கொண்டு போய் மறைத்து வைத்திருந்து விட்டு இன்று வெளியில் அழைத்து வந்திருக்கிறேன் என்று நினைத்திருப்பான்.. அல்லது ஊரிலிருந்து அவளுக்கு நான் இரகசியமாகக் கடிதம் எழுதி என்னிடம் ஓடி வந்து விடும்படி செய்து, பிறகு அவளை வைத்துச் சோறு போட முடியாமல் இங்கேயே கூட்டிக் கொண்டு வந்திருப்பதாக எண்ணியிருப்பான். இல்லையானால் என்னைக் கண்டதும் அவனுக்கு அவ்வளவு ஆத்திரம் வந்திருக்குமா?.... எத்தனை கேவலமான சந்தேகங்களுக்கு நான் ஆளாகிவிட்டேன்!' — படுத்திருந்தவன் திடுமென எழுந்து உட்கார்ந்து கொண்டுவிட்டான். அவனாகவே பெருக்கிக் கொண்ட அவமான உணர்ச்சியை அவனால் தாள முடியவில்லை. தலைமயிரைப் பிய்த்துக் கலைத்துக் கொண்டு புழுப்போல் அப்படியும் இப்படியுமாக நெளிந்தான்.

'அந்தப் பெண்கூட ரயிலில் வரும்போது என்னிடம் சரியாகப் பேசவில்லை. பிரயாண நேரம் முழுவதும் ஏதோ கிலி பிடித்தவள் போலவும் எதைப் பற்றியோ இடைவிடாது சிந்திப்பவள் போலவுமே இருந்து வந்தாள். நேற்றிரவு பெங்களூர் கிங்ஸ் பார்க்கில் மிகுந்த உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் நடந்து கொண்ட அவள், அங்கிருந்து புறப்பட்டு நடு வழியில் மழைக்கு ஒதுங்குவதற்காக அந்த அம்மையாரின் வீட்டில் போய் நின்றுவிட்டு வந்த பிறகே அப்படி ஒரு மாற்றத்துக்கு உள்ளாகிக் காணப்பட்டாள். இதற்குக் காரணம் என்னவாயிருக்கும்?'

பல காரணங்கள் தோன்றின அவனுக்கு. ஆனால் அவற்றைத் தன் மனத்துக்குள் இரகசியமாகப் பிரித்துப் போட்டுப் பரப்பிப் பார்க்கவும் அவன் விரும்பவில்லை. 'அதெல்லாம் எப்படியாவது போகட்டும்! நாளைப்பொழுது விடிந்தால் என்னுடைய விஷயம் என்ன? காலையில் முதல் வேலையாக ஏழுமலையான் அச்சக முதலாளி கண்ணபிரானைப் போய்ப் பார்க்க வேண்டும். ஊருக்குப் போனபின் எனக்கு ஏற்பட்ட ஏமாற்றங்களையும், இழப்புக்களையும், இன்னல்களையும் அவரிடம் கூறி, முன்பணமில்லாமல் காகிதஜல்லி கொடுத்து உதவுமாறு கோரவேண்டும். பிறகு அதிலிருந்து பழைய தொழிலை ஒழுங்காக, நியாயமாக, உற்சாகமாகச் செய்யத் தொடங்கி, அதைக் கொண்டு என் எதிர்கால வாழ்க்கையை ஒரு கண்ணியப் பாங்குடன் அமைத்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும்' — அவன் மனம் அமைதியடைந்தது. மெல்லத் தரையில் சாய்ந்து படுத்தான்.

தூக்கம் கண்களில் இறங்கிக் கனக்கத் தொடங்கிய வேளையில் யாரோ தன் பக்கத்தில் வந்து நின்றதை உணர்ந்து மெல்ல இமைகளைத் திறந்தான் சபேசன். அந்தச் சாமந்திப் பூச் சிங்காரிதான் அவன் அருகில் நின்று குனிந்து பார்த்தாள். அவளுக்குச் சற்றுத் தள்ளி ஓர் ஆடவன் பீடி புகைத்தவாறு நின்றிருந்தான்.

''ஓ.... அந்தப் புள்ளாண்டானா?...இன்னுங்கூடப் பிளாட்பாரத்தை உடலே போலிருக்குது!'' என்று சிரித்த அவள், ''பாவம்! குயந்தைப் புள்ளே! தூங்கட்டும், தூங்கட்டும்!...யோவ், நீ வாய்யா, அந்தாண்டை எங்கனாச்சும் போவலாம்!'' என்றவாறு அங்கிருந்து நடந்தாள்.

''இன்னும்மே, இருட்டிலே எங்கே பார்த்தாலும் இஸ்தடிக்கிறே?'' என்று அலுத்துக்கொண்டான் அந்த ஆடவன்.

''அட, சர்த்தான் வாய்யா! என்னமோ ரொம்பக் கொராக்கிப் பண்ணிக்கிறே!''- கும்மாளச் சிரிப்பு; கேலிப் பேச்சு. தொலைவிலே

ஜீவகீதம்

சாமந்திப் பூவின் மணம் காற்றில் கலந்து வந்தது.

அந்த மணத்தை அருவருப்புடன் நுகர்ந்த சபேசனுக்கு ஏதோ சவப் பாடை ஒன்று அவ்வழியாக வந்து அவனைக் கடந்து சென்றது போன்ற பிரமை. இன்றைய சமுதாயப் பண்ணையின் இந்தப் பயங்கர அழுகல் பகுதிக்கு மீண்டும் தான் விஜயம் செய்ய நேரிட்டு விட்டதை எண்ணி மனம் புழுங்கி அழுதான் அவன். இப்போது அவனுக்கு இந்த உலகமே ஓர் இழவுக் களமாகக் காட்சியளித்தது. தொலை தூரத்தில் கடல் அலைகளின் பேராரவாரம். எப்படியோ வெகு கஷ்டப்பட்டுத் தூக்கத்தை வருவித்துக் கொண்டு தூங்கிப் போனான்.

இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் ஆகிவிட்டது. டீக்கடையை ஏறக்கட்டிக் கொண்டிருந்தான் மாதவன் நாயர்.

''இன்னா நாயர், எப்போ வந்தே?''

பாய்லர் நெருப்பை அணைத்து விட்டுத் திரும்பிய நாயர் முகமெல்லாம் சிரிப்பாக, ''வாடா, வா! உன்னைத்தாண்டா இப்ப நினைச்சுக்கிட்டு இருந்தேன்'' என்றான் மகிழ்ச்சிக் குரலில்.

சிகரெட்டை ஒரு ஸ்டைலாக இழுத்துப் புகையைப் பக்கவாட்டில் ஊதியவாறு வந்து பெஞ்சியின் மீது உட்கார்ந்தான் நச்சி.

''இன்னாய்யா, எப்படி இருக்கிறே? மாமியார் ஊட்லே ரேஷன் கீஷன் எல்லாம் சரியாப் போடறாங்களா?''

நச்சியின் இந்தக் கிண்டலான கேள்வியைக் கேட்டு வெட்கத்துடன் நகைத்தவாறு தன் மொட்டைத் தலையைத் தடவிக்கொண்டே நாயர், ''இப்பவெல்லாம் முன்போல இல்லேடா! ரொம்பக் கஷ்டம்! ஆளுக்கு ஆள் அடிக்கிறான். தாங்குகிறதுக்கு உடம்பிலே சத்து இல்லே; வயசு ஆய்ப்போச்சு இல்லேயா? அங்கே இப்ப ஜன்மம் வாங்கினவங்களுக்குத் தான் மதிப்பு! கள்ள நோட்டு, கள்ளச் சாராயம் ஆசாமிகளைக் கண்டாலே பொட்டை நாயைக் காறித் துப்பறாப்பலே துப்பறாங்கள்.



அதனால் இந்தக் கர்மாந்தரக் காரியத்தை ஜாடாவா விட்டுவிடலாம்னு தீர்மானத் தோடு நான் வந்திருக்கிறேன்'' என்றான் கசந்த குரலில்.

''ஓகோ!... 'ஜன்மம்' வாங்கினவன்களுக் குத்தான் மதிப்பா? அப்படீன்னு நானும் அந்த மதிப்பை வாங்கிட வேண்டியது தான்....''

திடுக்குற்றுத் திரும்பிய நாயர் அவசரமாக நச்சியை ஏறிட்டுப் பார்த்து, ''என்னடா, நீ என்ன சொல்றே?'' என்று கேட்டான்.

''ஆமாம், நாயர்! எனக்கு ரொம்ப அலுத்துப் போச்சு! மாமியார் ஊட்லே போய்க் கொஞ்ச காலம் ரெஸ்ட் எடுத்துக் கலாம்னு தீர்மானிச்சுட்டேன்.''

''சீ, கழுதை! வாயை மூடுடா!'' என்று அதட்டிய நாயர், ''இதெல்லாம் விளையாட்டு இல்லேடா!'' என்றான் உரிமை கலந்த கண் டிப்புடன்.

''அது போவட்டும். இங்கே என் தோஸ்து சபேசன் வந்தானா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் நச்சி.

''ஓ....அதுக்குத்தான் இப்ப இங்கே வந் தியா? அதோ, மன்றே கிட்ட படுத்துத் தூங்கறான்.''

எழுந்திருந்து பார்த்துவிட்டுத் திருப்தி யுடன் தலையாட்டிக்கொண்ட நச்சி ''அவன் இங்கேதான் வருவான்னு நினைச்சேன். தூங் கிட்டானா, சரி தூங்கட்டும்! பையனைக் கொஞ்சம் கவனிச்சுக்க, இன்னா?'' என்றான். பிறகு ஏதோ யோசனையுடன், ''நாயர்! இந்தா, காலம்பற இந்த ஒரு ரூபாயை அவன் கிட்ட நாஸ்தாவுக்குக் கொடுத்துவிடு!'' என்றவாறு தன் கால்சராய் ஜேபியிலிருந்து மணிபர்ஸை எடுத்தான். அத்துடன் பளபளப் பான சிறிய புதுக் கத்தி ஒன்றும் வந்தது!

அதைக் கண்டு பயந்துவிட்ட நாயர், ''என்னடா இது, ராத்திரியிலே கத்தி கித்தி எல்லாம் வைச்சிருக்கிறே?'' என்று திகில் நிறைந்த குரலில் வினவினான்.

கத்தியின் கூரிய முனையைத் தடவிப் பார்த்துவிட்டு ஒரு கோணல் சிரிப்புச் சிரித்த நச்சி, ''இதானே? நாளைக்குப் பேப்பர்லே நூஸ் வரும்; படிச்சுப் பார்த்துக்க!'' என்று அலட்சியமாகச் சொல்லி ஜேபியில் போட்டுக் கொண்டு அங்கிருந்து விறைப்புடன் திரும்பி நடந்தான்.

அந்த நள்ளிரவு நேரத்தில் நச்சி வந்து கதவைத் தட்டியது பற்றி அவ்வீட்டி லிருந்த யாரும் ஆச்சரியப்படவில்லை; கோபித் துக் கொள்ளவும் இல்லை. அவர்களுக்குத் தினமும் சகஜமாகிப் போன ஒரு விஷயம் அது. மக்களின் தொண்டருக்குத் தொண்ட ரும் தலைவருக்குத் தலைவருமான மருதமுத்து வின் வீடாயிற்றே!

விசாலமான வராந்தாவின் ஒரு மூலையில் படுத்துக் கிடந்த வேலைக்காரப் பையன் முனகிக் கொண்டே வந்து இரும்பாலான தள்ளுப் படலைத் தள்ளித் திறந்தான்.

''யாரு, சின்னப் பையனா?''

''ஆமாண்ணே!'' என்று கோட்டுவாய் விட்டான் பையன். அவன் பெயரே சின்னப் பையன்தான். அவனுக்கு நச்சியை நன்கு தெரியும். தன் எஜமானருடன் நெருங்கிப் பழகுகிறவன் என்பதும் தெரியும். அவன் தலையைச் சொறிந்து கொண்டு சிரிக்கும் போது நச்சி நாலணாவோ, எட்டணாவோ கொடுத்து விட்டுப் போவதும் உண்டு.

''தலைவர் இருக்கிறாரா?'' என்று ஏதோ மிகவும் அவசரமாகப் பார்க்க வந்திருப்பவன் போல் இரகசியக் குரலில் கேட்டான் நச்சி.

''என்ன அண்ணே, விஷயம்?'' என்று பையனும் தணிந்த தொனியில் வினவினான்.

''தலைவருக்கு ரொம்பவும் வேண்டிய பலான பேட்டையிலே நாலு குடிசைங்க தீப்பத்தி எரியுது.......''

''ஃபையர் ஸ்டேசனுக்குப் போன் பண்ணினீங்களா?''

''நம்ம தலைவர் அந்தக் காரியத்தைச் செய்யணுமின்னுதான் அவர்கிட்ட சொல்ல வந்திருக்கிறேன்.''

''அதுக்குள்ளாற குடிசைகள் எரிஞ்சுப் போயிடுமே, அண்ணே?''

''அட யார்ரவன், விஷயம் தெரியாத வனாயிருக்கிறான்! எரிஞ்சா இன்னா, சாம்ப லாப் போனால் நமக்கு இன்னாடா?.... எரிஞ் சப்புறம் கம்மணுங்காட்டியும் போய்ப் பார்வையிட்டு விட்டு வந்து, 'தீ விபத்தால் விடிமுந்தோர் உதவி நிதி'ன்னு நாலு பணக் காரங்ககிட்டேயும், சினிமா ஸ்டாருங்க கிட்டேயும் பணம் தண்டிப் பாதியை ஜோபியிலே போட்டுக்கிட்டு மிச்சம் மீதி இருக்கிறதை..... சரி, சரி; அதெல்லாம் உனக்கு எதுக்கு, பெரிய விஷயம்? தலைவர் இருக்கிறாரா, அதைச் சொல்லு!''

''மாடியிலே தூங்கறார்; போய் எழுப் பட்டுமா?''

''வேணாம், தொரை! நானே நேரில் பார்த்துப் பேசிக்கறேன்.''

''நீங்களா போறீங்க?...... வந்து......'' என்று தயங்கினான் பையன்.

''ஏன்டா? எசமானியம்மாளும் மேலே தூங்கறாங்களா?''

''இல்லே, அண்ணே! அவங்க எப்பவும் கீழேதான் இருப்பாங்க. பகல்லேகூட மாடிக்குப் போறதில்லே.....''

''அப்புறம் இன்னா கணக்கறே?''

''செக்ரடரி சாருங்க ரெண்டு பேரும் ஊரிலே இல்லே. அதனாலே ஐயா மட்டும் தனியா தூங்கறார்.''

''அப்படியா? ரொம்ப நல்லதாப்போச்சு!''

''தூக்கத்திலே எழுப்பினா......''

''ஒண்ணும் கோவிச்சுக்க மாட்டார். அவர் எழுந்தாத்தானே கோவிச்சுக்கறதுக்கு?''

''என்ன அண்ணே, சொல்றீங்க?''

''அ..... ஒண்ணுமில்லே!..... ஆயிரக் கணக்கிலே வருமானம் வருகிற விஷயமாய் அவரைப் பார்க்க வந்திருக்கிறேன். அதனால் கோவிச்சுக்க மாட்டாருங்கறேன்.''

''அப்படின்னா போங்கண்ணே! இப்படி இந்தப் படி மேலே ஏறிப் போங்க.''

''கதவு சாத்தியிருக்குமோ?''

''சாத்தற பழக்கம் இல்லே. நான்தான் இங்கே காவலுக்குப் படுத்துக்கிடக்கிறேனே!''

''நம்ப தலைவர் ரொம்ப நம்பிக்கையான வர்தான்'' என்று கரகரத்த குரலில் கூறிக்

சரும பாதுகாப்புக்கு

# மைசூர் சந்தண சோப்

இதற்கு இணையாக
வேறு ஒன்றுமே இல்லை

இந்த உற்சாக மூட்டும் வாசனை சோப்பில் உள்ள சந்தண எண்ணெய் உங்கள் சருமத்துக்கு பொலிவும் போஷாக்கும் தருவதோடு. இளமை தோற்றத்தை அளிக்கிறது.

தரம் அறிந்தோர்க்கு ஏற்ற
உயர்தர சோப்பு

**மைசூர் கவர்ன்மெண்ட்
சோப் பாக்டரி**

**பெங்களூர்-12**

---

## பருக்கள் மறைந்து! விடுகின்றன

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாக மறுவின்றியும் அவைதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளேயும், பூச்சிகளேயும் அழிக்க விசேஷமான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளேயும், கிருமிகளேயும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களே மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

---



**பவன் சூர்யன்**
**மார்க் புகையிலை**
**காரைக்குடி**

கொண்டே மாடிப் படிகளில் நிதானமாக ஏறிச் சென்றான் நச்சி.

அந்த வீட்டின் மாடிப் பகுதி அவனுக்கு நன்கு பழக்கமானது அல்லவா?

தட்டுத் தடங்கலின்றி மாடி வராந்தாவுக்கு வந்து சேர்ந்த நச்சி சுவரோரமாக ஒதுங்கி நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். போர்ட்டிகோ தளத்தில் வட்டமாக நாலைந்து பிரம்பு நாற்காலிகளும், நடுவே ஒரு மேசையும் போடப்பட்டிருந்தன. அந்த மேசையின் மேல் காலியான சோடா பாட்டில், கண்ணாடித் தம்ளர்கள், அரைகுறையாகச் சாப்பிட்டு விட்டுப் போட்ட உணவுத் தட்டுகள் முதலானவை அலங்கோலமாகக் கிடந்தன. இரவில் மருதமுத்து கனமான உணவு சாப்பிடுவதில்லையாம்; சும்மா 'லைட் டிபன்'தான் பண்ணுவாராம் — இதை அவரே மேடைகளில் பல முறை சொல்லியிருக்கிறார்!

இருட்டில் மறைந்து நின்ற நச்சியின் கூரிய பார்வை வரவேற்பு அறைப் பக்கம் திரும்பியது. உயர்தரமான சோபா செட்டுடன் அழகாக விளங்கிய அந்த அறையின் நீலவர்ணம் பூசிய சுவர்களில் மருதமுத்துவின் 'அரசியல் பெருவாழ்வை'க் காலம், இடம், சூழ்நிலைகளோடு நினைவுபடுத்தும் புகைப் படங்கள் பல மாட்டப்பட்டிருந்தன.

பதுங்கிப் பதுங்கி அந்த அறையினுள் நுழைந்த நச்சி இன்னும் சற்று முன்னே சென்று அழகிய திரைச் சீலை தொங்கிய கதவு ஒன்றின் அருகில் தயங்கி நின்றான். பிறகு திரையை மெல்ல விலக்கினான். இரட்டைக் கதவுகளில் ஒன்று ஒருக்களித்துத் திறந்திருந்தது. உள்ளே எட்டிப் பார்த்தான். அது படுக்கை அறை. மருதமுத்துவின் பிரத்தியேக அலுவல் அறையும் அதுதான். எங்கோ மறைவாகப் பொருத்தப்பட்டிருந்த 'பெட் ரூம் லைட்' குளிர்ச்சியான பசுமை ஒளியை அவ்வறையெங்கும் இலேசாகப் பூசியிருந்தது. அங்கே, இடதுபுறச் சன்னல் ஓரம் போடப்பட்ட அழகிய கட்டிலில் சுவர்ப் பக்கமாகத் திரும்பிப் படுத்திருந்த மருதமுத்து பல்வேறு ஒலிக் கலவையுடன் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்ததும் பயங்கரமாகத் தன் உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கி ஓசையின்றிப் பற்களைக் கடித்துக் கொண்ட நச்சி, பின்னால் திரும்பிப் பார்த்து விட்டுத் தன் ஜேபியிலிருந்த கத்தியை வெடுக்கென்று எடுத்து அதைக் கீழ்க் குத்தாக இறுக்கிப் பிடித்துக் கொண்டு அறையினுள் ஓரடி எடுத்து வைத்தவன், ஏதோ நெருப்பை மிதித்தவன் போல் ஒரு துள்ளுத் துள்ளிப் பின்னால் நகர்ந்தான். அடுத்த கணம் அவனுடைய வெந்த பெரிய கண்கள் எதிர்ச் சுவரில் மாட்டப்பட்டிருந்த பழைய புகைப்படம் ஒன்றின்மீது போய்ப் பரபரப்புடன் பதிந்தது.

அது ஓர் அழகிய இளம் பெண்ணின் படம். பூந்தொட்டி வைக்கப் பெற்ற உயரமானதொரு முக்காலியின் அருகில் நிற்பதுபோல் முழு உருவத்தில் எடுக்கப்பட்ட படம் அது. அந்தப் படத்திலுள்ள பெண்மணியைத் தான் எங்கோ, எப்போதோ பார்த்திருப்பது போன்ற மிகக் கலக்கமான நினைவு


'சுதர்சன்'

"பட்டணத்துக்கும் போய் ஹாஸ்டலில் நம்ம பையனைப் பார்த்து விட்டு வந்தீங்களே! கொழந்தை எப்படி இருக்கான்?"

"சீக்கிரம் முன்னுக்கு வந்துடுவான். நோட்டு, கையெழுத்து, காலெழுத்து, அடமானம் என்று, ஏதுமில்லாமலேயே, நாலு லக்ஷத்திலே கடன் வாங்கத் தெரிஞ்சுக்கிட்டிருக்கான்!"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஒன்றின் அதிர்ச்சியாலேயே நச்சி அப்படித் திகைப்படைந்து நின்றான். அவனது நெற்றிப் பொட்டின் நரம்புகள் விண்ணென்று புடைத்து எழும்பின.

'இது...இந்தப் படத்திலிருக்கும் பெண்.... ஆமாம்; பல ஆண்டுகளுக்குமுன் நான் சிறுவனாயிருந்தபோது ஒரு நாள் இரவு சென்டிரல் ரயில் நிலையத்தில் பிரம்புப்பெட்டியொன்றை என்னிடம் கொடுத்து விட்டுப் பிறகு மாயமாய் மறைந்தவள் அல்லவா இவள்? அதாவது, அப்பெட்டியில் மூன்று மாதக் குழந்தையாயிருந்த வேதாவின் தாய்?'

வியப்பால் வெலவெலத்துப் போன நச்சி, தன் கையில் வெறியாவேசத்துடன் இறுகப் பற்றியிருந்த கத்தியைத் தன்னையறியாமலே ஜேபியில் போட்டுக் கொண்டு அவசரமாக அங்குமிங்கும் விழித்துப் பார்த்தான். அவனது நெஞ்சில் கனன்று கொண்டிருந்த வெஞ்சினமும், பழிவாங்க வேண்டுமென்ற வெறித் துடிப்பும் இப்போது அடியோடு குலைந்து போய் விட்டன. ஏதோ ஒரு தீர்மானத்துடன் பூனை போல் முன்னேறி அந்தப் புகைப்படத்தை மட்டும் ஓசைப்படாமல் கழற்றி எடுத்துத் தன் சட்டைக்குள் மறைத்து வைத்துக் கொண்டு சரசரவெனக் கீழே இறங்கி வந்தான்.

"என்ன அண்ணே! ஐயாவைப் பார்த்தீங்களா? மாடியில் விளக்கே போடலியே?" உறக்க மயக்கத்தில் உட்கார்ந்திருந்த வேலைக்காரப் பையன் கேட்டான்.

"அட, போடா! தலைவர் நல்லா தூங்கறார். ரெண்டு மூணுவாட்டிக் கூப்பிட்டுப் பார்த்தேன். எழுந்து வரலே. காலம்பற பார்த்துக்கலாம்னு வந்துட்டேன்" என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து வேகமாக வெளியேறினான் நச்சி.

(தொடரும்)

# சிரஞ்சீவிக் கதைகள்...

## 9. கம்ச வதம்



கொடூர மனம் படைத்தவன் கம்சன். அவன் து தந்தை உக்ரசேனரை சிறையில் தள்ளிவிட்டு மதுரா நகரை தான் ஆண்டுவந்தான். நாட்டிலுள்ள நல்லவர்களில் ஒருவரான அக்ரூரரை அனுப்பி பலராமரையும் கிருஷ்ணனையும் மதுரா நகருக்கு அழைத்து வர ஏற்பாடு செய்கிறான்.



வழியில் கம்சனது ஆளான கேசி என்ற ராட்சசன் குதிரை வடிவெடுத்து பலராமனையும் கிருஷ்ணனையும் தாக்கினான். கிருஷ்ணன் பயமின்றி, குதிரை வாய்க்குள் கையைக் கொடுத்து, அது மூச்சு திணறி, வயிறு வீங்கிச் சாகும்படி செய்கிறான்.



மதுராநகரில் கிருஷ்ணனையும், பலராமனையும் கொல்லும்படி இரண்டு பயங்கர மல்யுத்த வீரர்களை கம்சன் அனுப்பினான். கிருஷ்ணனும், பலராமனும் அந்த மல்லர்களை வதம் செய்தார்கள்.



பின்பு, அவர்களைக் கொல்ல ஏற்பாடு செய்யப்பட்டிருந்த குவலயாபீடம் என்ற யானை பலராமனையும், கிருஷ்ணனையும் தாக்கியது. கிருஷ்ணன் யானையின் தந்தங்களில் ஒன்றை முறித்து, அதைக் கொண்டு யானையைக் கொன்றான்.



தனது கோபத்தை மேலும் அடக்கமுடியாமல் கிருஷ்ணன் கம்சன் மீது பாய்ந்து, அவனைச் சிம்மாசனத்திலிருந்து இழுத்துத் தள்ளி வதம் செய்தான்.



பிறகு உக்ரசேனரை சிறையிலிருந்து விடுவித்து அவரை மதுராபுரி மன்னராக்கினான்.



# கும்பகோணத்தில் சதி!

(சிந்தனையிலாழ்ந்தவாறு பாலு நடைபாதையில் வந்து கொண்டிருக்கிறான். எதிர்ச் சாரியில் வந்து கொண்டிருக்கும் அவன் நண்பன் கோபால் பாலுவைப் பார்த்து விட்டு அவனை நோக்கி வருகிறான்)

பாலு (கோபாலைப் பார்த்து): ஆபத்பாந்தவா! அநாத ரட்சகா! சரியான சமயத்திலே பிரத்தியட்ச மானாய்! உன்னைத்தான் பார்க்கணும்னு துடித்துக் கொண்டிருந்தேன்!

கோபால்: என்னடா தலையிலே நிறைய ஐஸ் வைக்கறே! காரண மில்லாமல் நீ இப்படிக் காக்காய் பிடிக்க மாட்டாயே!...என்னவோ கனவு கண்டு கொண்டு நடக்கிறவன் மாதிரி நீ போய்க் கொண்டிருந்தாய்! நான் உன்னைப் பார்த்துவிட்டு எதிரே வந்து நின்றேன். என்னைப் பார்க்கத் துடிப்பதாய்க் கதை விடுகிறாயே! என்னை நம்பச் சொல்றியா?

பாலு: நிஜம்மா! நான் உன்னையே நினைச்சு நடந்து வந்து கொண்டே இருந்ததிலே கண்களை மூடிக் கொண்டு விட்டேன் போலிருக்கிறது. என்ன இருந்தாலும் நாம் ஆப்த நண்பர்கள் இல்லையா? நான் உன்னை எதிர்பார்த்தேன். நீ வந்துவிட்டாய்! கோபால்! இப்போது ஒரு நெருக்கடி! எதிர்பாராத இக்கட்டு.....

கோபால்: ஹோட்டலில் போய்க் காப்பி குடிக்கணுமாக்கும்! கவலைப்படாதே! வா! காப்பி வாங்கித் தருகிறேன். காசை மாத்திரம் நீ கொடுத்துவிடு! ஓசிக்கு யாருக்கும் காப்பி வாங்கிக் கொடுப்பதில்லை என்ற விரதத்தைச் சமீப காலமாக அனுஷ்டிக்கிறேன்!

பாலு: பிறத்தியான் வாங்கிக் கொடுத்தா மாத்திரம் குடிப்பாயாக்கும்?... நான்சென்ஸ் (பையைத் தட்டிக் காண்பித்து) இப்போதே என் கூட வா! நூற்றி எட்டுக் காப்பி வாங்கி உனக்கு அபிஷேகம் பண்ணுகிறேன். ஆனால் நீமாத்திரம் எனக்காக ஒரு சிறு உதவியைப் பண்ண வேண்டும்.

கோபால்: அத்தனை காப்பியையும் வேஸ்ட் பண்ணாமல் குடித்தாக வேண்டும் என்கிறாயாக்கும்! பேஷாகக் குடிக்கிறேன்! ஆனால் கொஞ்சம் நல்ல ஹோட்டலுக்கு அழைத்துக் கொண்டு போகணும்.

பாலு: மனுஷன் இங்கே ஒரு பெரிய டேஞ்சர்லே மாட்டிண்டு மூழ்கிக்கொண்டிருக்கிறேன்! நீ உல்லாசமாகக் காப்பி டிக்காஷனிலே மிதக்கிறாய்?... அப்படி அந்த பஸ் ஸ்டாண்டு நிழலுக்கு வா, பேசுவோம்!

(இருவரும் சற்று நடக்கிறார்கள்)

கோபால் (தணிந்த குரலில்): ஏதும் காதல் டேஞ்சரா பிரதர்? கன்னி எவளாவது கண்ணகியாக மாறி விட்டாளா?

பாலு: அதை விடப் பெரிசு தம்பி! அசல் கல்யாண டேஞ்சர்! நீதான் கைகொடுத்து உதவ வேண்டும்.

கோபால்: சரிதான்! உனக்குப் பார்த்த பெண்ணுக்கு நான் தாலி கட்டப் போனால் உதை கொடுத்து விரட்டியடிப்பான். நம்ப முதுகு தாங்காது! மேலும் இந்த மாதிரி ஒரு ரெடிமேட் மாப்பிள்ளைப் பதவி நமக்கு வேண்டாம்.

பாலு: பரவாயில்லை! நான் சொல்ல வந்ததிலே ஒரு பகுதியை ஓர் அளவு புரிஞ்சுண்டுட்டே! இன்னொரு பகுதியை நான் விளக்குகிறேன்! நீ ஒன்றும் தாலி கட்டப் போக வேண்டாம்! அதைக் 'கான்ஸல்' பண்ணப் போனால் போதும்!.... வந்து....

கோபால்: வாட் வாட்!.. ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் பண்ணி வை என்கிறார்கள். நீ ஓர் அரைப் பொய்யிலே ஒரு கல்யாணத்தையே நிறுத்தச் சொல்கிறாயே!

பாலு: கரெக்ட்! அது அரைப் பொய் இல்லை! ஆசாமிப் பொய்! நாளைக்கு மறுநாள் நீ எனக்குப் பதிலாகக் கும்பகோணத்துக்குப் பெண் பார்க்கப் போகிறாய். கோபாலாகப் போகவில்லை. பாலுவாகப் போகிறாய். நன்றாக மூக்குப் பிடிக்க

கோமதி ஸ்வாமிநாதன்



அப்சரஸிலே 50%
ஊர்வசியிலே 30%
மீதி 20%
ஃபேஸ் பவுடர்!



டிபன் சாப்பிடு. ஆட்சேபணை இல்லை! ஆனால் எப்படியாவது பெண் பிடிக்கவில்லை என்பதை அவர்களுக்கு உணர்த்தி விட்டு வெற்றிகரமாக வாபஸ் ஆக வேண்டும். அப்புறம் அவர்கள் மூச்சுப் பேச்சு என் பக்கம் வீசக் கூடாது.

கோபால்: அப்பா பாலு! இந்தப் படா மோசடியிலே என்னை இறக்கி விட்டுப் பழி தீர்த்துக் கொள்ள எத்தனை நாட்களாகத் திட்டம் இட்டிருந்தாய்? ஒரு வம்புக்கும் நான் உன்னிடம் வந்ததில்லையே!

பாலு: ஓர் ஆப்த நண்பன் பேசுகிற பேச்சாடா இது? எனக்கு ஓர் ஆபத்து என்றால் அதைத் தடுக்க ஓடி வருவது உன் கடமை இல்லையாடா?

கோபால்: உனக்கு ஆபத்து விலகும்! என்னை அதைவிடப் பெரிய ஆபத்து அமுக்கும்! இதென்ன அந்தக் காலத்திலே நாம் காலேஜிலே படித்தபோது ஒருத்தனுக்குப் பதிலா ஒருத்தன் அட்டன்டென்ஸ் கொடுக்கிற விஷயமா?... இது ஆள் மாரூட்ட விஷயம்! அடியேன் தலை கொடுக்கத் தயாரில்லை பிரதர்!

பாலு: நான் ஒன்றும் பயந்துகொண்டு உன்னை ஏவிவிடவில்லை! இப்பவே கும்பகோணம் இருக்கும் திசையைப் பார்த்து 'எனக்குப் பிடிக்கவில்லை! எனக்குப் பிடிக்கவில்லை!' என்று ஏழு தடவைகள் இரைந்து கத்தத் தயார்! ஆனால் நாளைக்கு மறு நாள் எனக்கு இங்கே தலை போகும் வேலை இருக்கிறது. அதனால்தான் உன் காலில் விழுகிறேன்.

கோபால்: இந்த ஞாயிற்றுக் கிழமை இல்லேன்னு அடுத்த ஞாயிற்றுக் கிழமை போய்விட்டு வருகிறது?

பாலு: இந்த மாதிரி ஆபத்துக்களையெல்லாம் ஆரம்பத்திலேயே கிள்ளி எறிந்துவிட வேண்டும்! அப்புறம் அந்த மனுஷன் பெண்ணை இழுத்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்து விட்டால் கஷ்டம்! எங்க அப்பா முன்னாலே தைரியமாக ஒன்றும் சொல்லித் தொலைக்க முடியாது! அது ஒரு நரசிம்மாவதாரம்!

கோபால்: உனக்குப் பதில் நான் போய் நின்றால் அவர்களுக்குத் தெரியாதா?

பாலு: அப்படிக் கேளு நிதானமாக! அங்கேதான் எனக்குச் சாதகமான பாயிண்டு இருக்கு!... எங்கப்பா பத்து நாளைக்கு முன்னாலே திருச்சிக்குப்போனாரா?

கோபால்: நான் கண்டேனா?... அதைச் சொல்லி அழு!

பாலு: திரும்பி வரபோது ஜனதாவிலே நீட்டி நிமிர்ந்து படுத்துக்கொண்டு வந்திருக்கிறார்! எதிர்த்தாற்போலே ஓர் அச்சுப் பிச்சு வளவளன்னு பேசிக்கொண்டே வந்திருக்கு!

கோபால்: நீயும் கூடப் போயிருந்தாயா? என்னவோ நேரில் உட்கார்ந்து அனுபவித்த மாதிரிப் பேசுகிறாயே!

பாலு: எல்லாம் ஊகம்தான். மேலே கேளு! எங்கப்பா வழக்கம்போலே கல்யாண மார்க்கெட்டிலே தன் பிள்ளை ரெடியாக இருக்கான்னு டமாரமடிச்சிருக்கும் போலே இருக்கு! அவ்வளவுதான்! அந்த அச்சுப் பிச்சு கூடவே ஒத்தாதியிருக்கு. அதற்கு ஒரு பெண் இருக்காம்! அப்ஸரஸிலே ஐம்பது பேர்





சண்டையும், ஊர்வசியிலே முப்பது பேர் சண்டையும் சேர்த்து உருவாக்கின மாதிரி இருப்பாளாம்....!

கோபால்: மீதி இருபது பேர்சன்ட் ஃபேஸ் பவுடராக்கும்!

பாலு (எரிச்சலுடன்): சீயக்காய் பவுடர்! சொல்றதைக் கேளு! எங்கப்பா என்னத்தையோ சொல்லிட்டு வந்துட்டார். அது தான் சாக்குன்னு அந்தக் கும்பகோணத்துக் கோமான் இந்த ஞாயிற்றுக் கிழமை பெண் பார்க்க வரும்படி எழுதிவிட்டார்!

கோபால்: உன்னை அந்தக் கும்பகோணத்தார்கள் எந்தக் கோணத்திலிருந்தும் இது வரையில் பார்த்ததில்லை. அந்தத் தைரியத்தில் என்னைப் போகச் சொல்லுகிறாய். அப்படித்தானே?

பாலு: கரெக்ட்! கரெக்ட்! நான் பாலகிருஷ்ணன்; நீ கோபாலகிருஷ்ணன்! ஒரு 'கோ'தான் வித்தியாசம்! எங்கப்பா பேரு, என் தாத்தா பேரு, எங்க வீட்டுச் சுவரிலே மாட்டியிருக்கும் காலண்டர்கள், படங்கள் விவரம் எல்லாவற்றையும் உன் மனத்தில் உருவேற்றும் வகையில் ஒரு கடுதாசியிலே எழுதித் தருகிறேன். ரயிலிலே போகிறபோது பாடம் பண்ணிக் கொள்.

கோபால்: அந்தக் கும்பகோணத்து ஆசாமியின் விலாசத்தைக் கொடு! அப்

புறம் அதை நீ மறந்துட்டியானா நான் ஒவ்வொரு தெருவாகப் போய் 'எந்த வீட்டில் பெண் பார்க்கணும்' என்று கலாய் பூசுகிறவன் மாதிரி அலைய வேண்டியிருக்கும்!

பாலு: என்னடா ஃபூல்! நான் அதை மறந்துடுவேனா? நீதான் உன்னைச் சில மணி நேரங்கள் மறந்து என்னைமாதிரி நடித்துவிட்டு வரவேண்டும். மறந்துபோய்க்கூட 'நான்தான் நரசிம்மன் பிள்ளை பாலுவின் சிநேகிதன்' என்று ஆரம்பித்து விடக்கூடாது.

கோபால்: அப்படியே ஆரம்பித்தாலும் நான் சமாளித்துக் கொண்டுவிட மாட்டேனா? 'நான் அவன் சிநேகிதன் இல்லை! அவன்தான் என் சிநேகிதன்'னு சொல்லிவிடுறேன்!

பாலு (தலையிலடித்துக்கொண்டு): அபத்தம்! அபத்தம்! எதையாவது சமாளிக்கிறேன்னு எதையாவது உளறித் தொலைத்து விஷயத்தைக் குட்டிச்சுவராக்கிவிடக்கூடாது. வாயைத் திறக்காதே!

கோபால்: நல்ல நல்ல டிபனாக வைத்தால் என்னைப் பார்த்துக் கொண்டே சும்மா உட்கார்ந்திருக்கச் சொல்கிறாயா?

பாலு: அட சாப்பாட்டு ராமா! போனால் போகிறது. டிபனுக்காக மாத்திரம் வாயைத் திறந்து தொலை! அது சரி! நீ யாரு?

கோபால்: என்னடா அப்படிக் கேட்டுட்டே!... அடியேன் திருவாளர் அனந்த நாராயணனின் கனிஷ்ட புதல்வன் கோபால கிருஷ்ணன் என்ற கோபால்...கோல்மால் எக்ஸ்போர்ட் இம்போர்ட் கம்பெனியின் ஸ்டெனோ!....அப்புறம்....!

பாலு: களிமண் புதல்வன்! உன்னை நம்பினால் மண் குதிரையை நம்பினாப் போலத்தான்!...'நான் பாலகிருஷ்ணன்' என்று பளிச்சென்று பதில் சொல்ல வேண்டாமோ?

கோபால்: அடேடே!...எனக்கு அதற்குள்ளே பரீட்சை வைத்துப் பார்த்துட்டியா? திரையை வை! நான் அதை எதிர்பார்க்கலே! உங்க அப்பா உன் போட்டோப் படத்தை அனுப்பித் தொலைத்திருப்பார்! நான் போய் நின்றால்...

பாலு: எங்க அப்பா முயற்சி பண்ணினார்! என்னைப் போட்டோ எடுத்துக்கொள்ள விரட்டினார். நல்ல வேளை! நான் டபாய்த்து விட்டேன்!

கோபால்: வெரி குட்...எனக்கு எதிர்பாராத கும்பகோண விஜயம்! எதிர்பாராத டிபன்! ஆல்ரைட்! ஒருவேளை நிஜமாகவே அந்தப் பெண் அப்ஸரஸாக இருந்தால் நீ பிற்காலத்தில் என்னைச் சபிக்க மாட்டாயே!

பாலு: சத்தியம் வேணுமானாலும் பண்றேன். நான் உன்னைச் சபிக்க மாட்டேன்! நான்தான் கல்யாணத்தைப் பொறுத்தவரை வேறு பிளான் வைத்திருக்கிறேனே!

கோபால்: அப்போது நீயோ உனக்குப் பதில் நானோ போக மாட்டோம்! உங்க அப்பாவே போய் விசுவாமித்திரர் போல் கையைத் தூக்கிக் கண்ணை மறைத்துக் கொள்வார். ஜாக்கிரதை!

பாலு: அபசகுனம்! நான் அவளுக்காகத்தானேடா இந்த ஞாயிற்றுக் கிழமை ஒதுக்கியிருக்கிறேன்! இல்லாதபோனா நானே ஹாய்யாக ரயிலில் கும்பகோணம் போயிட்டு வர மாட்டேனா?

கோபால்: அப்படியா விஷயம்? இரண்டு பேருமாகச் சேர்ந்து எங்காவது பிக்னிக் போவதாக உத்தேசமா?

பாலு (பெருமூச்சுடன்): ஹூம்! அதற்கு இன்னும் கொஞ்ச நாள் போகணும். இப்போது எங்கள் காதல் செடிப் பருவத்தில் இருக்கிறது! அது மரமாகிப் பூத்து...

கோபால்: இன்னும் பஸ் ஸ்டாண்டு கட்டத்தில்தான் இருக்கிறது போலிருக்கு. அது பார்க், பீச், கட்டத்தைத் தாண்டி சினிமாக் கொட்டகைப் பருவமாகி....அப்புறம்.... ரொம்ப நாளாகும் போலே இருக்கே பிரதர்!

பாலு: ஹூம்! இப்போ பஸ் ஸ்டாண்டு பருவத்தில்தான் நிற்கிறேன். அதைச் சுருக்குவதற்குத்தான் நாளைக்கு மறுநாள் மகத்தான ஒரு சந்தர்ப்பம் காத்திருக்கிறது. கும்பகோணம் டிரிப்பை அதற்காகத்தான் உனக்கு விட்டுக் கொடுக்கிறேன்.

கோபால்: என்னைக் கும்பகோணத்துக்கு வண்டி ஏற்றிவிட்டு நீ தலைமறைவாகப் போய் விடுவாயா? மறுநாள் உன்னைப் பட்டினத்துத் தெருவிலே உங்க அப்பா பார்த்துத் தொலைத்தால் உன்னை அங்கேயே சினிமா வால்போஸ்டர் மேலே சாணி எறிகிறமாதிரி தூக்கி வீசி விடுவாரே!

பாலு: உனக்கும் மூளை இருக்கு! சரியான கேள்வி கேட்டே! எனக்கும் மூளை இருக்கு. நானும் சரியான ஏற்பாடு பண்ணியிருக்கிறேன். என்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவள்....

கோபால்: உஷ்!...சினிமா டயலாக் எல்லாம் அடிக்காதே!... ஒழுங்காகப் பேசித் தொலை.

பாலு: சரி!... நான் காதலிக்கிற பொண் அவள் சிநேகிதிகளோடே நாளைக்கு மறுநாள் மகாபலிபுரத்துக்கு பிக்னிக் போகப் போகிறாளாம். நானும் அதனாலே மகாபலிபுரம் போகப் போகிறேன். உன்னை ரயிலேற்றி விட்டு விட்டு நாளை ராத்திரி ஹோட்டல் வாசம். ஞாயிற்றுக்கிழமைப் பகல் முழுவதும் மகாபலிபுரம்...திங்கட்கிழமைக் காலை நேரே ஸ்டேஷனுக்கு வந்து உன்னைப் பார்த்து விட்டுத் தலையையும், சட்டையையும் கலைத்துக் கொண்டு வீட்டுக்குப் போவேன்! இப்போ புரிகிறதா ?

கோபால்: பேஷாய்ப் புரிகிறது! இந்த ஆள் மாறாட்ட நாடகத்துக்கு என்ன கூலி?

பாலு! இப்படிக் கிழக்குப் பார்த்து நில்லு! உனக்குப் பத்துத் தோப்புக்கரணம் போடுகிறேன் !

கோ: அதற்கெல்லாம் உன் காதல் மனைவி வரட்டும்! எனக்கு வேண்டாம். உன் தோப்புக்கரணம் ஒரு நயாபைசா பெறுமா? நான் கும்பகோணம் போகணும்னா....

பாலு! என்ன வேணும்! சொல்லி அழு...!

கோ: போன மாசம் வாங்கினியே ஒரு சாக்லெட் கலர் டெரிலீன் ஷர்ட்! அது வேணும்!

# YET ANOTHER FEATHER

Sankar Brand Calcium Carbide–the first make of Indian Calcium Carbide to be exported – has added yet another feather to its cap. It now proudly holds the ISI trademark, another tribute to its superb quality.

With the main use of Calcium Carbide in the manufacture of acetylene gas for welding and various other purposes Sankar Brand Calcium Carbide has made itself indispensable to industry at large.




*SOLE SELLING AGENTS:*

**V. D. SWAMI & CO.**
**PRIVATE LTD.**

Calcutta • Madras • Delhi • Bombay

IS 1040




GRADE 'A'



FDS/VDS-5

3-9-1

# கைத்தறி ஜவுளியை காரிகையர் விரும்புவதேன்?

அணியச் சுகமானது கைத்தறித் துணி. கோடையிலும் குளிர்ச்சி பொருந்தியது. சலவை செய்வது சுலபம். நெகிழ்ந்து நழுவுவதோ, கனத்து அழுத்துவதோ கிடையாது.

காலத்துக்கு ஏற்றதும் கைத்தறி ஜவுளியே. எந்த வித விருப்பத்துக்கும் அது ஈடு கொடுக்கிறது; எல்லாவிதக் கற்பனைகளுக்கும் இடம் தருகிறது.

ஆயிரமாயிரம் ரகங்கள் அதில் உண்டு. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதம். எனவே, எந்தச் சமயத்துக்கும் ஏற்ற புதுச் சோக்கை எளிதாகிறது.

வீட்டில் உடுப்பதாயினும் சரி, விசேஷ சந்தர்ப்பங்களில் அணிவதாயினும் சரி, கைத்தறிப்புடவைகளே காரிகையர் அனைவரும் விரும்பித் தேர்ந்தெடுப்பவை

## ஹாண்ட்லூம் ஹவுஸ்

9, ரத்தன் பஜார்,
சென்னை-3.



RDS. HM 224 TM A

பாலு: அட பாவி! அதைப் போட்டுக் கொண்டுதான்டா மகாபலிபுரம் போகத் தீர்மானித்திருக்கிறேன்.

கோபால்: பேஷ்! அப்படியே கும்ப கோணத்துக்கும் போயிட்டு வந்துடு.

(கிளம்புகிறான்)

பாலு: நில்லு! கழுத்தை அறுக்கறியே! சரி! தந்து தொலைக்கிறேன்! காதல் வெற்றிக்காக ஒவ்வொருத்தன் சாம்ராஜ்யங்களையே தியாகம் பண்ணியிருக்கிறான்! நாற்பது ரூபாய் சட்டையைத் தரவே முழுங்குவதுதானா பிரமாதம்!

கோபால்: நாளைக்கு ஸ்டேஷனுக்கு வர போது கொண்டு வந்துடு! அப்புறம் இப்புறம் என்ற வியவகாரம் வேண்டாம் (குரலைத் தாழ்த்தி) அண்ணா! யாரு அந்த மகாபலிபுர மன்னி? எனக்குக் கொஞ்சம் சொல்லேன்.

பாலு: தம்பி!.... கொஞ்சம் பொறுத்திரு! தன்னாலே தெரியும்! அப்புறம் நீ நாளைக்கு ஆறு மணிக்கு ரெடியாக உன் விட்டில் இரு. நான் வந்து உன்னை 'பிக்' பண்ணிண்டு ஸ்டேஷனுக்குப் போறேன்.

கோபால்: உங்க அப்பா உன்னை அனுப்ப ஸ்டேஷனுக்கு வரமாட்டாரே?

பாலு(பற்களைக் கடித்தபடி): நான் சமாளிக்கிறேன்! நாளைக்கு மற்ற விவரமெல்லாம்!

(போகிறார்கள்)

## காட்சி — 2

பாலுவின் வீட்டுக் கூடம்.

(பாலு தோல் சூட்கேஸில் துணிகளைத் திணித்துக் கொண்டிருக்கிறான். அவன் தந்தை நரசிம்மன் வருகிறார்.)

நரசிம்மன்: என்னடா? ஒரு நாள் தேவைக்கு இத்தனை துணிகள் எதற்கு? எங்கேயாவது ரயிலில் தொலைக்கப் போகிறாய்?

பாலு: இல்லேப்பா! அவசரத்திலே காப்பி கீப்பி சிந்தினாலும் மாற்றிக் கொள்ள உதவியாக இருக்கும்னுதான்....

நரசிம்மன்: கடைசிவரை நீ அவர்களுக்குப் போட்டோ அனுப்ப வில்லே! திடுமெனக்கட்டை மாதிரி நீ போய் நின்னால் உன்னை அவர்களுக்கு எப்படியடா தெரியப் போகிறது?

பாலு: இதென்ன பிரமாதம்?..... திருவாளர் நரசிம்மன் புதல்வர் பாலகிருஷ்ணன் என்ற பாலு பட்டணத்திலிருந்து வந்திருக்கிறேன் என்று பழைய கால பாணியிலே கட்டியம் கூறிக் கொண்டே உன்னை போக மாட்டேனா?

(பாலுவின் தாயார் கல்யாணியும் தங்கை கனகாவும் உள்ளிருந்து வருகிறார்கள்.)

கல்யாணி: இந்தாடாப்பா பாலு! அவர்கள் கொடுக்கும் டிபனை மாத்திரம் பார்த்து விட்டுப் பெண்ணைச் சரியாகப் பார்க்காமல் வந்து நிற்காதே! பக்கத்து வீட்டுக் கிளி போன்ற பெண்ணைக் கொண்டு வந்து காட்டிச் சம்மதம் பெற்றுவிட்டு அப்புறம் காக்காய் போன்ற தன் பெண்ணைத் தலையில் வைத்துக் கட்டி விடுவார்கள்!

நர: கல்யாணி! உங்க அப்பா அப்படித்தான் பண்ணினார்!

பாலு: நீங்க பயப்பட வேண்டாம் அப்பா! சந்தேகத்துக்கு இடமில்லாமல்



''வயிறு எரிகிறது சார்.''

''ஏதாவது காரமான பட்சணத்தை நிறையத் தின்று தொலைத்தீரா?''

''உம்...இந்தப் பொங்கலுக்கும் மாமனார் ஒன்றும் வாங்கித்தர மாட்டாராம்!''

---

அந்தப் பெண்கிட்டேயே 'நீ நிஜம்மா இந்த வீட்டுப் பெண்தானே?' என்று கேட்டு விடுகிறேன்.

கல்: அசடு மாதிரி எதையாவது கேட்டு வைக்காதே! கவனமாக இருன்னு தான் சொன்னேன்!

நர: அப்படி இவன் ஏக்கச்சக்கமாக ஏதாவது கேட்டால் அந்தக் கோதண்டபாணி ஒரு பாய்ச்சல் பாய்ந்து.....

பாலு: பட்டிணம் வரை துரத்திக் கொண்டு வந்து விடுவாராக்கும்!

கனகா: பாலு! மறந்து போயிடாமல் அந்தப் பெண்ணைப் பாடச் சொல்லிக் கேள்!

பாலு: நோ! நோ!.... அப்படியெல்லாம் கேட்டுப்பிட்டு வேண்டாம்னு மனசு கஷ்டம்!..

நர: என்னடா வேண்டாம்கிறது? அதுக்கெல்லாம் இடமே இல்லே; அந்த மனுஷன் அன்னிக்கு ரயிலில் சொன்னதிலிருந்து நிச்சயம் அந்தப் பெண்ணை உனக்குப் பிடிக்கத்தான் போகிறது! நீ வேண்டாம் என்று சொல்லப் போவதில்லை! நீ கும்பகோணம் போய் வருவது எல்லாம் சம்பிரதாயத்துக்குத்தான்! கல்யாணமெல்லாம் அநேகமாக நிச்சயமாகி விட்டது என்றே வைத்துக்கொள். மனுஷன் என் 'டெர்ம்ஸ்'களுக்கு எல்லாம் ஒத்துண்டு இருக்கான். எனக்கு அவனைப் பிடிச்சுப் போச்சு.....!

கல்: இந்தாடாப்பா! எப்படியாவது அவள் குரல் எப்படி இருக்குன்னு நன்னாத் தெரிஞ்சுக்கோ?

கனகா: அம்மாவுக்குப் பயம்! வரப் போகிற நாட்டுப்பெண் எந்தக் குரலில் சண்டை போடுவாளோ என்று!

நர: என்ன பேசி இதெல்லாம்? வீட்டுக்கு வரும் நாட்டுப் பெண் நன்னாயிருக்கணுங்கிற

அக்கறையிலேதான் அம்மா அப்படிச் சொல்ரு....சரி! சரி! மசமசன்னு நிற்காமல் ரயிலுக்குக் கிளம்பு! நாளை மத்தியானமே பஸ் கிஸ் கிடைத்தால் புறப்பட்டு விடு! அநாவசியமாகப் பல்லைக் காட்டிக் கொண்டு நிற்காதே அங்கே!

பாலு: சரி, அப்பா!.... அப்போ நான் கிளம்பறேன்!....

காட்சி — 3

(திங்கட்கிழமை காலை. எழும்பூர் ரயில் நிலைய பிளாட்பாரம். திருவனந்தபுரம் பாசஞ்சர் வந்து நிற்கிறது. கோபால் வண்டியிலிருந்து இறங்குகிறான். பாலு ஆவலுடன் அவனை நெருங்குகிறான்.)

கோபால்: என்ன பாலு! காலை வேளையிலே இங்கே உலாவறே! யார் வருகிறார்கள்?

பாலு: அட, பாவி! யாரைப் பார்த்து என்ன கேள்வி கேட்கிறாய்?.... உனக்கு என்ன வந்தது?

கோ: ஓ! ஐ ஆம் சாரி! உனக்காகத் தானே நான் கும்பகோணம் போனேன். எஸ்! எஸ்! ஏதோ குழப்பம்! மறந்துபோச்சு!

பாலு: ஏய்! அங்கே போய் ஒண்ணும் குழப்பம் பண்ணி உதை கிதை வாங்கலியே!

கோ: அட சீ!.... பிரமாத வெற்றி! இந்த ஜமாவை என்ன நினைச்சே?....பாலு! உன் மேக்கப்—நல்ல கிலேயைக் கலைத்துக் கொண்டு நீ வந்திருப்பது — பிரமாதமாக இருக்கு! நேற்று மகாபலிபுரம் ட்ரிப் எப்படி இருந்தது? படா குஷியா?

பாலு: மண்ணுங்கட்டி புரம் ட்ரிப்!.... கடைசியிலே அவள் வரவே இல்லை! எங்கேயோ ஊருக்குத் தொலைஞ்சுட்டாளாம்! அங்கே கற்சிற்பங்களோடு சிற்பமாக நின்று விட்டு வந்தேன்!..... நீ முதல்லே கும்பகோணம் ட்ரிப்பைப் பற்றிச் சொல்லு!

கோ: அது குஷியான டிரிப்!.... நீ பொறுமைப்பட வேண்டாம்! அந்தக் கோதண்டபாணி இனிமேல் உன் பக்கமே திரும்ப மாட்டார்! உன்னை மறந்துட்டார்னே நீ வைத்துக் கொள்ளலாம்!

பாலு: பலே! பலே! உனக்கு ரொம்ப ரொம்ப தாங்ஸ்!.... நீ என். பாலகிருஷ்ணனாகவே ஜமாய்த்து விட்டு வந்துட்டியாக்கும்? 'பெண் பிடிக்கலே' என்பதை எப்படியடா தெரிவித்தாய்? முதலில் அவள் என்ன புடவை கட்டிக் கொண்டு வந்தாள் என்று சொல்லித் தொலை. எங்க அம்மா இந்தச் சில்லறை விஷயங்களி லெல்லாம் அதிக அக்கறை எடுத்துக் கொள்வாள்!

கோபால் (முகவாய்க் கட்டையைத் தடவிக் கொண்டு): பெண் பிடிக்கலியா? யாருடா சொன்னு அப்படி?

பாலு: ஏண்டா! என் பிராணனை இப்படி வாங்கறே! ரயிலில் சரியாகத் தூங்கலியா? இப்போ உளறாமல் நடந்ததைக் கோவையாகச் சொல்லு!

கோ: அவளை எனக்கு ரொம்பப் பிடிச்சிருந்தது பிரதர்!

பாலு: தாராளமாக அவளுக்குத் தாலி கட்டு சாவகாசமாக! ஆனால் நேற்று நீ. என் பெயருடன் போயிருக்கும் போது அப்படிப் பல்லை இளித்திருக்க முடியாதே!

கோ: உன் பேரோடு நான் எங்கே போனேன்? இல்லையே! கோபாலகிருஷ்ணனாகத்தான் போனேன்!

பாலு: பாவி!.... என்னென்னவோ புதிசாக உளறுகிறேயே! நான் எங்க அப்பாவுக்கு என்ன பதில் சொல்லுவேன்?

(இருவரும் பிளாட்பாரம் பெஞ்சில் உட்காருகிறார்கள்)

கோ: விஷயம் அடிப்படையிலே கோளாறாயிடுத்து பிரதர்! அந்தக் கோதண்டபாணிக்கு என்னைத் தெரியும். எப்பவோ எங்க கம்பெனிக்கு வந்த போது என்னைப் பார்த்திருக்கிறார்! நான் அவர்கிட்டே போய் ஆள் மாறாட்டம் பண்ண முடியுமா? நான் அவரைப் பார்த்தவுடனே திகைச்சுப் போனேன்!

பாலு: என்ன பண்ணினே?

கோபால்: நான் விடுவேனு? ஏதோ விஷயமாகக் கும்பகோணம் வந்ததாகவும் அப்படியே அவரைப் பார்க்க நினைத்ததாகவும் சரடு விட்டேன்!

பாலு: சரடு விட்டிருப்பே! சாப்பிட்டிருப்பே, டிபனை மூக்குப் பிடிக்க. என் விஷயம் என்ன ஆச்சு? நீ அது பற்றி வாயைத் திறந்திருக்க மாட்டாயே!

கோ: கொஞ்ச நாழிகை வாயைத் திறக்கத்தான் இல்லை! அப்புறம் அவள் காப்பி கொண்டு வந்த போது அதிகமாகவே வாயைத் திறந்தேன்.

பாலு: அத்தனை பயங்கரமா? நீ அலறி விட்டாயோ?

கோ: அட அவுரங்கசீப்! அவள் அழகுத் தேவதை! அவள்தான் தாம்பரத்திலேயிருந்து கும்பகோணம் வரை என் வண்டியிலேயே வந்தாள். இறங்கியதும் அவள் வண்டி பிடித்துக் கொண்டு போய் விட்டாள். நான் காப்பி சாப்பிட்டுவிட்டுக் கொஞ்சம் நிதானமாகக் கிளம்பினேன்! அவளே கோதண்டபாணி வீட்டிலே அவர் பெண்ணாக வந்து நின்றால் நான் என் அதிர்ஷ்டத்தை நினைத்து 'ஆஹா! பிரமாதம்!' என்று வாய்விட்டு என்னையே பாராட்டிக் கொள்ள மாட்டேனு?

பாலு: எக்கேடு கெட்டுப் போ! நீ கோதண்டபாணி மாப்பிள்ளையாகப் போவதில் எனக்கு நோ அப்ஜெக்ஷன்! என் வருகைக்காகக் காத்திருந்த அவர் என்ன சொன்னார்?

கோ: அவர் சொல்ற வரை நான் காத்திருப்பேனு? 'பாலு என் நண்பன். அவன் இன்றைக்கு வருவதாக இருந்தான். ஆனால் எதிர்பாராத விதமாக அவனுக்கு வேறே இடத்தில் நிச்சயமாயிடுத்து! அவன் அப்பா கொஞ்சம் பேராசை பிடித்தவர். அவர் சம்பந்தம் உங்களுக்கு வேண்டாம். பாலுவே வருத்தப்பட்டு இதை என்னிடம் சொன்னான். நீங்க இது விஷயமாக அவருக்கு ஒன்றும் எழுத வேண்டாம். வேறே இடம் பார்க்கலாம்' என்று சொல்லிவிட்டேன்.

பாலு: பலே! பலே! நீ சொன்னதை அவர்கள் நம்பினார்களா? ஒருவேளை உன்னை

**என் விரோதி என்று சந்தேகப்பட்டு எதை யாவது இளறப் போகிறார்கள்?**

கோபால்: அந்த மனுஷன் மூஞ்சியிலே அப்படித்தான் சந்தேகக் களை தென்பட்டது. ஆனால் அந்தப் பெண் கொஞ்சம் கெட்டிக் காரி; அப்பாவை நம்ப வச்சுட்டா!

பாலு: ஓஹோ! நான் போய் அப்பா கிட்டே 'பெண் ரொம்ப சுமார்! இந்த விஷயத்தை நீங்கள் மறந்துடலாம்'னு சொல்லிடறேன்.

கோ: ஏன் அப்படிச் சொல்றே? அந்தப் பெண்ணுக்கு வேறே இடத்திலே நிச்சய மாயிடுத்துன்னு சொல்லிடு!

பாலு: இரண்டு பக்கத்திலேயும் பொய் யைச் சம எடையாக வைக்கச் சொல்றியா? நல்ல ஐடியா!.... அந்த கும்பகோணம் 'அட்மாஸ்பியர்'ரைப் பற்றிக் கொஞ்சம் விவரமாகச் சொல்லு! எங்க அப்பா நம்பு கிறபடி கதை அளக்கணுமே!

கோ: அதற்கென்ன? நிறையச் சொல் றேன். அந்தப் பெண்ணின் அழகு இருக்கே!...

பாலு: நாசமாப் போச்சு! நீ சொல்ற தைப் பார்த்தா அவள்கிட்டே கொஞ்சம் அழகும் இருக்கும் போலிருக்கே!

கோ: கொஞ்சம் என்ன கொஞ்சம்? உலகத்தில் உள்ள அழகு அத்தனையுமே அவ கிட்டே டிபாஸிட் ஆயிருக்குன்னேன்! நான் அந்த மகாபலிபுரத்து மன்னியைப் பார்த்த தில்லே. ஆனால் அவள் இவளை எட்டிப் பார்ப் பாளா என்பது சந்தேகம்!

பாலு: நீ பேசறதைப் பார்த்தால் நீயே ஒரு ரெடிமேட் மாப்பிள்ளை ஆகத் தீர்மானம் செய்து விடுவாய் போலிருக்கே?

கோ: போலிருக்கு என்ன? ஆயாச்சு! சும்மா டிபன் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு வருவானேன்னு கோதண்டபாணி பெண்ணை யும் சம்பிரதாயமாகப் பார்த்துக் கல்யாணத் துக்குச் சம்மதமும் தெரிவித்து விட்டேன்! கும்பகோணத்திலே உனக்காக ஒரு சதித் திட்டத்தை நிறைவேற்றப் போனேன்! ஆனால் எனக்கே அங்கு ஒரு சதியைத் தேடிக் கொண்டு விட்டேன்!

பாலு: கங்கராகுலேஷன்ஸ்! நீ பெண் பார்த்ததுக்காக அல்ல! என்னை அந்தக் கோதண்டபாணியின் பிடியிலிருந்து தப்ப வைத்ததுக்காக! அந்த சூட்கேஸைக் கொடு!.... நான் கொடுத்த சட்டையைத் திருப்பி எடுத்துக்கொள்கிறேன்.

கோ: பேசப்படாது பிரதர்! அது அதிருஷ்டச் சட்டை! அதனால்தான் வசந்தா எனக்குக் கிடைத்தாள்!

பாலு: ஹூம்! அவள் பேரும் வசந்தா தானா?

கோ: அடேடே! உன் பிக்னிக் பியூட்டிக் கும் அந்தப் பேரா? ஆனால் எல்லா வசந்தாக் களும் என் வசந்தா ஆயிட முடியுமா? இதிலே என்ன ஆச்சரியம்னா அவளும் இதே பட்டணத் திலேதான் ஒரு கம்பெனியிலே வேலை செய்து கொண்டிருக்கிறாள்! நான் பார்த்ததில்லை.



"அம்மா! உன் மாப்பிள்ளைக்கு இன்னும் கொஞ் சம் சீடை வேணுமாம்."

"அதெப்படி? அவருக்காக ஒதுக்கின 'கோட்டா' தீர்ந்து போச்சுன்னு சொல்லு. இனிமேல், வரும் பொங்கல் பண்டிகைக்குத்தான்!"



பாலு: வாட்? வாட்? நிஜமாகவே நீ யோகசாலிதான்! ஒரு எம்ளாய்ட் கேர்லையே பிடிச்சுட்டே!

கோ: அவள் குப்பு அண்டு சுப்பு கார்ப்ப ரேஷனில்தான் ஸ்டெனோவாம். சைதாப் பேட்டையில் உள்ள......

பாலு: குப்பு அண்டு சுப்பு......

கோ: ஆமா! அதே கம்பெனிதான்! சைதாப்பேட்டை அத்தை வீட்டில் இருக் கிறாள். அவளும் பிள்ளை பார்க்கச் சனிக்கிழமை ராத்திரி தாம்பரத்தில் வந்து வண்டிஏறினாள். ஏண்டா, அப்படிப் பார்க்கிறாய்?

பாலு: அட பாவி! குடியைக் கெடுத் தாயே...... அவள்.....

கோ: நன்றாகத்தான் இருக்கிறாள்..... இப்போ பொறாமைப்பட்டு என்ன பிரயோசனம்?... நீ ஏதோ மகாபலிபுரக் குப்பையை நினைச்சுண்டு.....

பாலு: ஐயையோ!.... அந்தக் குப்பை தாண்டா குப்பு சுப்பு கம்பெனி வசந்தா.....! அவள் மகாபலிபுரம் வராத காரணம் இப்பத் தாண்டா புரிகிறது.... குடிகெட்டது போ!... நான் கோட்டை விட்டுட்டேன்! (தலையிலடித் துக் கொண்டு): எந்த வேளையிலே உன்னை உதவிக்குக் கூப்பிட்டேனோ தெரியவில்லை! அடிமடியிலே பெருச்சாளியைக் கட்டிக் கொண்டு போன கதையாப் போச்சு!

கோ: ஒருத்தன் கொஞ்சம் ஏமாந்தால் தானே இன்னொருவன் பிழைக்க முடியும்? அதுதானே யுகதர்மம்!

பாலு: அது என் கர்மம்!....

**(சூட்கேஸைப் பிடுங்கிக்கொண்டு வேகமாக நடக்கிறான்)**




## இந்த வேஷத்துக்கு ஏற்றவர் யார்?

ஔவை ஷண்முகம் ஔவையார் வேடத்தில் தாம் நடிக்கப் போகிறோம் என்று கனவில்கூட நினைத்ததில்லையாம்.

ஔவையாராக யாரைப் போடுவது என்ற கேள்வி எழுந்த போது கே. ஆர். ராமசுவாமி இவர்கள் கம்பெனியில் இருந்தார். பெண் வேடமும் புனைந்து திறமையாகப் பாடக்கூடியவராகவு மிருந்தார். அவரை அணுகியபோது 'ஐயையோ! நான் பெண் வேடம் புனைந்து நீண்ட காலமாகிவிட்டது. அந்தப் பழக்கம் இப்போது எனக்கு வராது. நான் நடித்தால் நன்றாகவுமிருக்காது' என்று உறுதியாகச் சொல்லிவிட்டாராம்.

ஷண்முகத்துக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அவர் அண்ணா முத்துஸ்வாமி நாடகங்களில் நடிப்பதை நிறுத்திச் சில வருடங்களானாலும் இறுதி வரை பெண் வேடத்திலேயே நடித்தவர். அவரை அணுகிக் கேட்டார் ஷண்முகம். திகைப்படைந்த அவர் சகோதரர் 'சே சே! என்னால் அது முடியாது' என்று சொல்லித் தட்டிக் கழித்துவிட்டார்.

ஷண்முகமோ விடாமல் அவரை வேண்டினார். இடைமறித்த முத்துசுவாமி, 'என்டா! இவ்வளவு தூரம் இந்தப் பாத்திரத்தைப் பற்றி என்னிடம் விளக்குகிறாயே, நீயே ஔவையாராக நடித்தால் என்ன?' என்று ஒரு போடு போட்டாராம்.

ஷண்முகத்துக்கு அதிர்ச்சியாகி விட்டது. ஏதேதோ சொல்லி மறுத்தார். சிறிதுநேரம் வாதமே நடந்தது. இறுதியாக 'வேடத்தை நீ புனைவதாக இருந்தால் நாடகத்தை நடத்துவோம். இல்லாவிட்டால் இந்த நாடகத்தையே கைவிட்டு விடுவோம்' என்று அடித்துச் சொல்லி விட்டார் முத்துசாமி.



வேறு வழியின்றி ஷண்முகமே ஔவையாகப் பாத்திரத்தை ஏற்கத் துணிந்தாராம்.

ஆதாரம்: ஔவை மலர்.
தகவல்: ஏ. சீனிவாசன்.

## உழைப்பால் உயர்ந்தவர்!

படிக்க வேண்டிய பருவத்தில் 8-9 வயதுக்குள் ளாகவே - அவன் சம்பாதிக்கத் தொடங்கி விட்டான். முதலில் மாலைக்காலத்தில் இரவுப் பள்ளியில் படித்துக்கொண்டு, கோடையில் மந்தைகளைப் பராமரித்து வந்தான். இரவுப் படிப்பைச் சிறப்பாக முடித்தவன், சற்று வயதானதும் பணக்கார நிலச்சுவான்தாரின் நிலங்களிலே உழைத்தான்.

பதினைந்தாவது வயதில் தன் தந்தையிடம் சென்று பொறியியல் ஆலையில் கடைசல் தொழிலாளியிடம் வேலை பயின்று, பிறகு சுரங்க இயந்திரங்களில் பழுது பார்ப்பவனாகவும், ஆனைக் கரி ரசாயன ஆலையிலும் வேலை செய்து வந்தான்.

படிப்படியாக முன்னேறிச் சுரங்கங்களில் ஒன்றின் நிர்வாகியாக நியமிக்கப்பட்டான். சிறந்த நிறுவன அமைப்பாளர் என்று நிரூபணமாகவே, அந்தச் சுரங்கத்தைச் சேர்ந்த நிறுவனம், அந்த இளைஞனைத் தொழில் துறைக் கல்லூரியில் தொழிலாளர் பிரிவில் படிப்பதற்காக அனுப்பி வைத்தது.

அவனும் ஊக்கத்துடன் படித்து முன்னேறினான். வாழ்க்கைப் பள்ளியில் புடம் போடப்பட்டுத் தக்க கல்வியும் அனுபவமும் பெற்று, மேலும் அரசியல் அனுபவத்துடன் கூட, பொருளாதார நிர்மாணத்திலும் விரிவான தேர்ச்சியுடையவனானான். அந்த யுவன் மேலும் மேன்மையுற்று அந்நாட்டின் மிகச் சிறப்பான பதவி வகித்தபோது பத்திரிகைகள் சில அவரைப் பற்றி இப்படி எழுதின:

முன்பு ஆடு பராமரித்து வந்த சிறுவனாகவும், சுரங்கத் தொழிலாளியாகவுமிருந்தவன் இன்றைய உயர்ந்த பதவிக்கு வந்தது விந்தைதான்.

இவ்விதம் உழைப்பால் உயர்ந்தவர் யார்?

(48ம் பக்கம் பார்க்க.)

## பிச்சைக்காரர் புராணம்!

சென்னையில் பிச்சைக்காரர் ஒருவரின் பிள்ளை வேலை பார்த்து மாதம் ரூ. 120 சம்பாதிக்கிறார். அவருடைய மகள் ஒருத்தி ஒன்பதாவது வகுப்பு வரை படித்திருக்கிறார்.

பிச்சைக்காரர்களில் 46 சதவிகிதத்தினர் சொந்த வீடுகளில் அல்லது வாடகை வீடுகளில் வசிக்கின்றனர். 88 சதவிகிதத்தினருக்குப் பிச்சைக்காரர் விடுதிகளில் தங்க விருப்பமில்லை. வேலை தங்களுக்குக் கொடுக்கப்பட்டாலும் வேலை செய்ய விரும்ப மாட்டோம் என 60 சதவிகிதத்தினர் தெரிவிக்கின்றனர். பிச்சைக்காரர்களில் பெண்களை விட ஆண்கள் இரண்டு மடங்காக உள்ளனர். 40 சதவிகிதத்தினர் கிழவர்கள். 4 சதவிகிதத்தினர் தங்கக் கட்டுப்பாடு உத்தரவினால் வேலை இழந்தவர்கள். 32 சதவிகிதத்தினர் ஹோட்டல்களில் காசு கொடுத்து உணவு சாப்பிடுகிறார்கள். 20 சதவிகிதத்தினர் வழக்கமாக சினிமாப் பார்ப்பவர்கள்.

(சென்னை சமூக ஊழியர் பயிற்சிப் பள்ளி ஆராய்ச்சிக் குழுவினர் 'சென்னை நகரப் பிச்சைக்காரர்கள்' பற்றி நடத்திய சர்வேயிலிருந்து மேற்கண்ட அதிசயத் தகவல்கள் வெளிப்பட்டன.) - காழி ஜெயா

## தாகசாந்திக்கு அமிலமா? ஐயையோ!

'தாகமாயிருக்கிறது. கார்பாலிக் அமிலம் ஒரு பாட்டில் கொடேன்' என்று ஒருவர் கடைக்காரரிடம் கேட்பதாக வைத்துக் கொள்வோம்.

கடைக்காரர் விஞ்ஞான அறிவு உடையவராயிருந்தால் திகைக்க மாட்டார்; விழிக்க மாட்டார். சட்டென்று சோடா பாட்டில் ஒன்றை எடுத்துப் பட்டென்று உடைத்துப் புஸ்புஸ் எனக் குமிழிகள் தோன்ற நீட்டுவார் அவரிடம்.

ஆமாம், சோடா என்று உடைத்து உடைத்து அருந்துகின்றோமே, அந்தத் திரவம் வேறென்ன?

கரியமில வாயு, தண்ணீர் இரண்டையும் சேர்த்து ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட கார்பாலிக் அமிலம் என்ற ஒருவிதத் தீங்கில்லாத அமிலம் தான்! - எம்மாரெஸ்.

## தாய்க்குத் தகுந்த பதில்!

பத்து வயதேயுள்ள ஒரு சிறுவன் நூல் நிலையத்துக்குச் சென்று பிள்ளை வளர்ப்பு முறை என்னும் நூலை வாங்கி வந்தான். அப்போது அவனுடைய தாய், 'பேஷ் போடிப் பயலே! உனக்கேன்டா அது?' என்று கேட்டாள். 'இல்லேம்மா அதில் சொன்னபடி நான் வளர்க்கப்படுகிறேனா என்பதைப் பார்க்க' என்றான் சிறுவன். -தங்க சக்கரபாண்டியன்

## விளக்கு அணைந்தது!




உலகம் முழுதும் — இல்லந்தோறும் ஒளிவீசும் மின்சார பல்பைக் கண்டுபிடித்தவர் தாமஸ் ஆல்வா எடிஸன் என்ற விஷயம் பச்சைக் குழந்தைக்கும் தெரியும்.

1931ம் ஆண்டில் தமது 84வது வயதில் எடிஸன் உடல் நிலை ரொம்பவும் மங்கத் தொடங்கியது. படுத்த படுக்கையாக விழுந்து விட்டார். அவரது அந்திம நேரம் அதிக தூரத்தில் இல்லை எனக் கேள்வியுற்ற பத்திரிகை நிருபர்கள் எடிஸனின் இல்லத்துக்குப் படையெடுத்தனர். "விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது" என்பதாக அவ்வப்பொழுது எடிஸன் குடும்பத்தினர் நிருபர்களுக்குத் தகவல் கூறிவந்தனர். அக்டோபர் மாதம் 18ம் தேதி விடியற்காலை, "விளக்கு அணைந்து விட்டது" என்ற துயரச் செய்தி அறிவிக்கப் பட்டது. ஆம், உலகெங்கும் ஒளிபரப்பிய விளக்கு அணைந்து விட்டது.

எடிஸனின் இறுதி யாத்திரை தினத்தன்று அமெரிக்க ஐக்கிய நாடுகள் முழுதும் ஒரு நிமிட காலம் மின்சார ஓட்டத்தைத் தடைப் படுத்துவது என முதலில் தீர்மானித்தனர். மின்சார பல்பைக் கண்டுபிடித்த மேதைக்குப் பொருத்தமான அஞ்சலியாக இது அமையும் என்று அமெரிக்க மக்கள் முடிவு செய்திருந்தனர். இதனால் ஏராளமான பொருள் நஷ்டமும் பெருத்த சேதமும் விளையலாம் என்ற காரணத்தின் பேரில் இந்த யோசனை கைவிடப் பட்டது. ஒரு நிமிஷ நேரம் மின்சார ஓட்டத்தைத் தடை செய்ய அன்று யோசித்தது அமெரிக்கா. ஆனால் இன்று, மின்சாரத் துறையில் எவ்வளவோ முன்னேற்றம் ஏற்பட்டிருக்கும்போது திடுமென்று சென்ற நவம்பர் இரண்டாவது வாரத்தில் ஒரு நாள் அங்கும் கனடாவின் ஒரு பகுதியிலுமாக எண்பதாயிரம் சதுர மைல் விஸ்தீரணத்துக்கு மின்சார ஓட்டம் அடியோடு நின்று போய்விட்டது. ஏதோ இயந்திரக் கோளாறு காரணமாக. பன்னிரண்டே நிமிஷங்களில் பரவிவிட்ட இந்த இருட்டடிப்பு சில இடங்களில் ஒன்றரை மணி நேரமும் வேறு சில இடங்களில் பதின் மூன்றரை மணி நேரமும் நீடித்து, முப்பது மிலியன் மக்களைப் பாதித்தது. இதுவரையில் அதன் சரித்திரத்திலேயே இத்தனை பயங்கரமான இருட்டடிப்பைக் கண்டிராத அமெரிக்காவுக்கு இதனால் ஏற்பட்ட நஷ்டம் தொழில் வர்த்தகத் துறையில் நூறு மிலியன் டாலர்கள்! ஆனால் மெழுகுவர்த்திகள் மட்டும் ஒவ்வொன்றும் ஒரு டாலருக்கு (ரூ. 5) விற்றன! — என். சீனிவாசன்

ஃ ஃ ஃ

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை அவர்கள் பன்மொழி தெரிந்தவராக மட்டுமின்றிப் பன்மொழிப் புலவராகவே விளங்க எதனால் முடிந்தது? புத்தகங்களைப் படிப்பதிலே அவருக்குத் தளராத ஆர்வம்; பகாசுரப் பசி! காரியாலய நேரம் தவிர நாள் முழுதும் நூல் நிலையத்திலேயே அவர் இருப்பார். காலையில் நூலகம் திறக்கப்படும்போது வாசலில் தயாராகக் காத்து நிற்பார். நூலகத்தைப் பூட்டிக் கொண்டு கிளம்ப வேண்டும் என்று 'லைப்ரேரியன்' கெஞ்சாத குறையாக அவரை மாலையில் வெளியே கிளப்புவார். அவர் யௌவனப் பிராயத்தவராக இருந்த சமயம் அவரது படிப்பார்வம் கண்டு நெகிழ்ந்த ஒரு நூல் நிலைய அதிகாரி அவர்மீது கருணை கொண்டு அவரை நூல் நிலையத்தின் உள்ளேயே வைத்துப் பூட்டிக் கொண்டு போய் விடுவாராம். இரவு நீண்ட நேரம் படித்து விட்டு நூலகத்திலேயே உறங்குவார் அப்பாதுரை!

(தமிழ் எழுத்தாளர் மகாநாட்டில் திரு ந. சஞ்சீவி கூறியது.)

## கோலாகல கான சங்கீத சபா

### டிசம்பர் மாத நிகழ்ச்சி விவரங்கள்

| | |
|---|---|
| 5-12-65 | குமாரி சலங்கை குமாரி குழுவினரின் 'ஹரிச்சந்திரா' — நாட்டிய நாடகம்' |
| 12-12-65 | ஸ்ரீமதி தாராபாயின் ஜில் ஜிலாஞ்சலி அளிக்கும் 'மெட்ராஸ் குறவஞ்சி' நாட்டிய நாடகம். |

13-12-65 முதல் 14-1-66 வரையில் சபாகட்டடத்தைப் பழுது பார்க்க உத்தேசித்திருப்பதால், கலை நிகழ்ச்சிகள் எதுவும் கிடையாது. — எஸ். வி.

## நல்ல ஜனநாயகம்

பிரிட்டனில் மாக்மிலன் பிரதமராக இருந்த சமயம்.

மாக்மிலன் அரசாங்கத்தின் போக்கை வன்மையாகக் கண்டித்து, அரசாங்கத்தின் கட்சியான கன்ஸர்வேடிவ் கட்சி உறுப்பினர் ஒருவரே பேசியபோது, பாராளுமன்றத்தில் பரபரப்பு ஏற்பட்டது. நேரான வழி எது என்று தெரியாமல், அரசாங்கம் தன் மனம் போனபடி நடக்கிறது என்று அந்த உறுப்பினர் குற்றம் சாட்டினார். அந்த உறுப்பினர் வேறு யாருமில்லை; பிரதமரின் சொந்த மகன் மாரிஸ் மாக்மிலன்! ஹாலிபாக்ஸ் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர் இவர்.


மாக்மிலன்

அடுத்த நாள் பாராளுமன்றத்தில் கேள்வி நேரத்தின் போது பிரதமர் மாக்மில்லனிடம் இச் சம்பவம் குறித்துச் சில உறுப்பினர்கள் கேட்டனர்.

ஹாலிபாக்ஸ் தொகுதி உறுப்பினருக்கு அறிவும் துணிச்சலும் இருக்கின்றன. அவற்றை அவர் எப்படி எங்கிருந்து பெற்றார் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை என்றார் மாக்மிலன்.

-ஆதாரம்: ரீடர்ஸ் டைஜெஸ்ட்
-தகவல்: காமராஜுலு



உழைப்பால் உயர்ந்த அந்த மனிதர் இவர்தான் — குருஷேவ்

தகவல்: ஏ. சீனிவாசன்

## ஒரு ரயிலின் வருகை

உலகத்தின் முதல் சினிமாவின் பெயர் தான் ஒரு ரயிலின் வருகை (தி அரைவல் ஆப் எ ட்ரெய்ன்) 1895ம் வருஷம், பிரான்சின் தலைநகரமான பாரிஸில் இந்தப் படம் திரையிடப்பட்டது. அங்குள்ள கிராண்ட் கேப் என்ற ஹோட்டலில் ஆகஸ்ட் 28ம் தேதி அந்தப் படத்தைப் பொதுமக்களுக்குப் போட்டுக் காட்டியிருக்கிறார்கள். அகஸ்டி, லூயிஸ் லூமிரி என்ற இருவர் சேர்ந்து தயாரித்தது அது. அப்பொழுது அந்தப் படத்தைப் பார்த்தவர்களின் எண்ணிக்கை முப்பத்துமூன்று. ஓர் ஆளுக்கு வசூலிக்கப் பட்ட கட்டணம்: ஒரு பிராங்க் (ஒரு பைசா.).

1923ம் வருஷம் மார்ச் 13ம் தேதி நியூயார்க்கில் திரையிடப்பட்ட படம்தான் உலகத்தின் முதல் பேசும் படம். அதைத் தயாரித்தவர் டாக்டர் டி-பாரஸ்ட்.

இது வரை வந்த சினிமாக்களிலேயே மிக நீளமானது தி ஹ்யூமன் கண்டிஷன் என்ற படம்தான். ஜப்பானிய தயாரிப்பாளரான ஜம்பி கோபி என்பவர் இதைத் தயாரித்தார். இது ஓடிய நேரம்: 8 மணி 50 நிமிஷங்கள். 1961 அக்டோபர் மாதம் இந்தப் படம் முதன்முதலாக டோக்கியோவில் திரையிடப்பட்டது. நுழைவுக் கட்டணம்: 250 யென் (ரூ. 2.50) ஒரே படத்தில் மிக அதிகப் பணம் சம்பாதித்த நடிகர், காரி கிராண்ட் என்பவர்; லாபத்தில் 75 சதவீதம் என்ற நிபந்தனையோடு 'ஆபரேஷன் பெட்டிகோட்' என்ற படத்தில் நடித்த இவருக்கு 1962ம் வருஷம் மே மாதம் வரை கிடைத்த தொகை: 5,250,000 டாலர்கள். (ரூ. 2,62,50,000.)

தகவல் : — கே. ராமச்சந்திரன்

## அன்பின் ஆழம்!

கம்பி மேல் சைக்கிள் விட்டுக் கொண்டிருக்கும்பொழுது தவறிக் கீழே விழுந்து இறந்து போனான் போலந்தைச் சேர்ந்த சர்க்கஸ்காரி ஒருத்தி. இதை உணர்ந்த சர்க்கஸில் உள்ள சிங்கம், புலி, கரடி, குரங்கு முதலியன பல நாட்கள் வரை ஆகாரமே சாப்பிடவில்லை. வருத்தத்துடன் அதனதன் இடத்தில் முடங்கிக் கிடந்தன!

ஆதாரம்: லிஸ்னர் - காழி ஜெயா




## முதலும், முடிவும்!

அந்த வீட்டு மேல்மாடியில் குடியிருந்தான் ஓர் இளைஞன். தினம் வேளா வேளைக்கு வீட்டுக்கு வருவதும், தொப், தொப் பென்று பூட்ஸ்களைக் கழற்றிப் போடுவதும் அவன் வழக்கம். கீழே வீட்டுக்காரர் குடியிருந்தார். 'சார், இனி மேல் பூட்ஸை மெல்லப் போட்டுத் தொலையுங்கள். மாடியில் வீசி எறிவது என் மண்டைமேல் போடுவதைப்போலிருக்கிறது' என்று எச்சரிக்கை விடுத்தார்.

அன்றும் வழக்கம் போல் பாதி ராத்திரியில் வீடு திரும்பிய அந்த இளைஞன் தன் பூட்ஸில் ஒன்றை வீசியெறிந்தான் தொப் பென்று. அப்போதுதான் வீட்டுக்காரர் விடுத்த எச்சரிக்கை நினைவில் வந்தது. இரண்டாவது பூட்ஸை மெதுவாகக் கழற்றிச் சத்தம் போடாமல் வைத்தான்.

சிறிது நேரம் சென்றது. அவன் அறைக் கதவு தட்டப்பட்டது. திறந்தால் வீட்டுக்காரர் நின்றுகொண்டிருந்தார்!

'ஏன் ஐயா! இன்னும் இரண்டாவது ஷூவை வீசி எறியாமல் என்ன செய்து கொண்டிருக்கிறீர்? அந்தச் சத்தத்தையும் கேட்டுத் தொலைத்துவிட்டுத் தூங்கலாம் என்று பார்த்தால் ஆளை விடமாட்டீர்கள் போலிருக்கிறதே!' என்றார். - விமலா ரமணி

## பொருள் பொதிந்த சொல்!

மாப்பிள்ளைகள் தங்கள் மாமனார் வீட்டை வேட்டகம் என்கின்றார்கள். வேட்டகம் என்ற சொல்லைப் பற்றி ஓர் ஆராய்ச்சி:

கைக்கடிகாரம், வைர மோதிரம், டிரான்ஸிஸ்டர் இத்தியாதி விஷயங்களுக்காக மாப்பிள்ளைகள் மாமனாரை வேட்டை ஆடுகிறார்கள். இந்த வேட்டையை நடத்துமிடம் வேட்டகம் என அழைக்கப்படுதல் சரிதானே? இந்த விளக்கம் நீடாமங்கலம் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பாகவதர் ஓர் உபந்யாசத்தில் கூறியது. 'போடா, வேலையில்லாதவனே, தீபாவளி கழிஞ்சு இரண்டு வாரங்கள் ஆகியும் அந்தண்டை இந்தண்டை நகராமல் உட்கார்ந்திருக்கான் மாப்பிள்ளே. என்ன வேட்டு வெச்சா அவன் கிளம்புவான்னு தெரியாமல் நான் முழிக்கிறேன்' என்று எரிந்து விழுந்தார் ஒரு சம்சாரி, நான் அவரிடம் விளக்கம் கேட்ட போது! -- எம்மாரெஸ்

## 'நான் நீர்க்குரங்கில் பிறந்தேன்!'

*''நீங்கள் எப்பொழுது பிறந்தீர்கள்?''*

*'' நீர்க் குரங்கில் பிறந்தேன்'' என்கிறார் ஒருவர்.*

*''அக்கினி எருதுவில் பிறந்தேன்'' என்கிறார் இரண்டாமவர். ''பூமிச் சுண்டெலியில் பிறந்தேன்'' என்கிறார் மூன்றாவது நபர்!*

*தீச்சுண்டெலி, தீப் பறவை, பூவராகம், பூமிப் புலி, பூமி முயல் இவற்றில் பிறந்தேன்-இன்னும் பலர்.*

*என்னவென்று விளங்குகிறதோ?*

*திபெத்தில் லாமாக்களின் பஞ்சாங்கப்படி ஒவ்வொரு வருடமும் பன்னிரண்டு மிருகங்களையும், பஞ்ச பூதங்களையும் பலவிதமாகக் கலந்த பெயரைக் கொண்டிருக்கும்.*



*புத்தாண்டு பிப்ரவரியில் பிறக்கும். அதன்படி:*

| | | | |
|---|---|---|---|
| நீர்க்குரங்கு | 1932 | தீப் பறவை | 1957 |
| அக்னி எருது | 1937 | பூவராகம் | 1959 |
| பூமிசுண்டெலி | 1948 | பூமிப்புலி | 1938 |
| தீச்சுண்டெலி | 1936 | பூமி முயல் | 1939 |

*ஆதாரம் : 'மூன்றாவது கண்' என்ற நூல்.*

தகவல் : — எஸ். சேஷாத்திரி

வாய்ப்பாட்டு என்ற சொற்றொடருக்கும் பொருத்தமாக இன்று இசை அநேகமாக வாயிலிருந்து வருகிறதேயன்றி உள்ளத்திலிருந்து வராமலிருப்பதே போல், 'கண் காட்சி' எனப்படுபவையும் பொதுவாக நேத்திரானந்தமாக மட்டும் அமைகின்றனவே தவிர உள்ளத்துக்கு ரஸாநுபவத்தை அளிப்பதில்லை. இதற்கு ஒரு விதிவிலக்கு சென்னை புதைபொருள் இலாகாவினர் ராஜாஜி மன்றத்தில் நடத்திய திருக்கோயில் கண்காட்சி. இதைக் கண்காட்சி என்பதை விடக் கண்கொள்ளாக் காட்சி என்பதே பொருத்தமாகும்.

சுமார் ஆயிரத்து நானூறு ஆண்டுகளாக நமது முந்தையர் ஆலயங்களில் செய்த கலை விந்தைகளை யெல்லாம் அற்புதமான புகைப்படங்களின் மூலம் இக்காட்சியில் ஒருசேரத் திரட்டித் தந்தார்கள். சிலைகளின் பளபளப்பு அழகைப் போலவே, பொரபொரப்பு அழகையும் விடாமல் புகைப்படத்தில் கொண்டுவந்திருந்த சாதுரியம் பாராட்டுக்குரியது. சில செப்புப் படிமங்களையும் ஆங்காங்கு வைத்து அழகு செய்திருந்தார்கள். சர்க்கார் இலாகா ஒன்று கூட இவ்வளவு திறம்படவும், ரசிக உணர்வுடனும் ஒரு காரியத்தைச் செய்திருக்கிறதே என்ற ஆச்சரியமுண்டாயிற்று. இதைவிட மகத்தான புனிதமான சொத்தெதுவும் நமக்கில்லை—நமக்குத் தேவையுமில்லை — என்ற எண்ணமே காட்சியைச் சுற்றி வரும்போது மேலோங்கி நின்றது.

தனித் தனியாக விமரிசனம் செய்வது சாத்தியமில்லை. கோபுரங்கள், விமானங்கள், பிராகாரங்கள் மூர்த்தங்கள் இவற்றின் புகைப்படங்கள் நானூறுக்கு மேல் இடம் பெற்ற காட்சியில் ஒவ்வொன்றுகத் தனிப்படச் சொல்வதெனில், எதைச் சேர்ப்பது, எதை விடுவது என்றே முடிவு செய்ய இயலாது தானே? மொத்தத்தில் ஒரு சொப்பன சௌந்தரிய உலகில் சஞ்சரித்தோம். ஆயினும் பிரத்தியட்ச உலகைவிட அழுத்தம் வாய்ந்த அமுத சொப்பனம் அது. நுட்பத்திலும் அதிநுட்பத்தைச் செய்யும்போதே தெளிவையும் எளிமையையும் தரும் அற்புதக் கலைப் படைப்புக்களைக் கண்டோம். எத்தனை மதுரங்கள்! எத்தனை மகோன்னதங்கள்! எத்தனை கம்பீரங்கள்; எத்தனை எளிமைகள்! எத்தனை முக பாவங்கள்! எத்தனை அங்க அசைவுகள்! வடிவின் ஒவ்வோர் அணுவிலும் ஒரே ரஸத்தைத் தேக்கித் திளைக்கும் படைப்புகள் எத்தனை! மொத்தத்தில் ஆலயம் என்பதே லயபிண்டம் — அழகு அம்சங்கள் யாவும் சங்கீத மயமாக இழைந்து ஒன்றும் அதிசயம் என்பதைக் கண்டோம். சிற்பங்கள் யாவுமாகச் சேர்ந்து ஒரு பரத நாட்டிய லோகத்தையே சிருஷ்டித்துவிட்டதாகக் கண்டோம். இவற்றில் பரதம் சிற்பத்தின் பிரதிபலிப்பா, சிற்பம் பரதத்தின் பிரதிபலிப்பா?



## தெய்விகக் காட்சி

இத்தனையும் செய்த சிற்பிகள் யார்? அவர்கள் பேரென்ன? ஊரென்ன? அவர்களுடைய சிலை ஏதுமே இங்கு காணுமே! இதை யெல்லாம் நோக்கும் போது 'அவர்கள் புகழ் வெளிச்சத்தை நாடாமல் அப்படி அநாமதேயமாக இருந்ததால் தான் இப்படிப்பட்ட சிற்பங்களைச் செய்ய முடிந்ததோ' என்று எண்ணி விம்மிதமடைந்தோம். கோயில்களைக் கட்டிய மன்னர்கள் இந்த அளவுக்கு அநாமதேயமாக இல்லாவிடினும் அவர்களும் தங்கள் காரியத்தைப் பெரிதாகச் செய்து தங்களைச் சிறியவர்களாகவே காப்பாற்றிக்கொண்ட பண்பை வியந்தோம். மன்னர்கள் - ராணிகளின் சிற்பப் புகைப்படங்களை மன்றத்துக்குள் சேர்க்காமல் வெளிவராந்தாவில் வைத்திருந்ததிலும்கூட இந்தப் பொருத்தம் தானுகவே அமைந்து விட்டதாகத் தோன்றியது.

கோயிலைக் கட்டி முடித்த மன்னர் அதன் பின்னர், நந்தனாரின் பாவத்தில் அதற்குள் தான் வருகலாமோ என்று தயங்கி விநயமும் பக்தியுமாகக் கைகூப்பி நிற்கும் பான்மையை— அதிலும் கூடத் தொனிக்கும் கம்பீர பாவத்தை — என்னவென்பது?

இன்று இந்தப் பரம்பரையும் சொப்பனமாக மறைந்து விட்டதை எண்ணினால் கிலேசம்தான் உண்டாகிறது. கண்காட்சியைக் கண்டவுடன் இதனை மாவட்டத் தலைநகர் எல்லாவற்றிலும் நடத்த வேண்டுமென யோசனை கூறத் தோன்றியது. உடனேயே, யோசனைகள் கூறிவிட்டால் மட்டும் ஆயிற்று? அது செயலாக முகிழ வேண்டாமா? அப்படியே செயலாக முடிந்தாலும், அதற்கு வரவேற்பு இருக்குமா என்கிற சந்தேகமும் ஒரு தாபமாக எழுந்தது.

நம் பழம் செல்வத்துக்கு ஈடாக இன்று நாம் புதிதாகச் செய்ய முடியாவிடினும், அதை ரஸிக்கும் திண்மையும் நுண்மையும்கூட அல்லவா இல்லை? நமது கவனக் குறைவால் சிதிலமான சிற்பங்களைப் பார்த்து நாம் துக்கிக்கும்போது அவை நம்மைப் பார்த்து வேதனையுடன் சிரிக்கின்றன: 'நான் பழுதானது இருக்கட்டும்; நீங்கள் இப்படிப் பண்பில் பழுதுபட்டு நிற்கிறீர்களே! இதற்கு நிவாரணம் அறிவீர்களா? அன்றைய மன்னர்களையும் சிற்பிகளையும் போல் ஈசவரார்ப்பணம் செய்வீர்களா?' என்று அவை கேட்காமல் கேட்கின்றன!

# பாரெல்லாம் போற்றும்
# பிரிட்டிஷ் எழுத்தாளர்

இரண்டாம் உலக யுத்தம் மூண்டபோது அப்போது ஃபிரான்ஸில் இருந்த ஸாமர்ஸெட் மாம் பிரிட்டனுக்குத் தொண்டாற்றத் தாம் தயாராக இருப்பதாகச் சொன்னார். பிரிட்டிஷ் அரசாங்கம் அலட்சியமாக இருக்கவில்லை; துப்பாக்கி ஒன்றை எடுத்துக் கொடுத்து, அவரைப் போர்முனைக்கு அனுப்பி வைக்கவுமில்லை.

ஃபிரான்ஸிலே தங்கியிருக்கும் அவர் ஆங்கிலோ — ஃபிரெஞ்சு நல்லுறவுக்கு உகந்த விதத்தில் எழுதவேண்டும் என்று கோரியது. அவ்விதமே ஸாமர்ஸெட் எழுதினார்; எழுதி எழுதித் தள்ளினார்! யுத்த காலத்திய ஃபிரான்ஸின் நிலையை அவர் அற்புதமாக வர்ணித்ததன் விளைவாக பிரிட்டிஷ் மக்கள் பிரெஞ்சு மக்களிடம் பெருமளவுக்கு அநுதாபம் கொண்டு அவர்களுக்காகப் பாடுபட முன்வந்தனர். ஜெர்மானியப் படையெடுப்பின்போது ஃபிரான்ஸில் இருந்த தமது உடைமைகளையெல்லாம் விட்டுவிட்டுப் பல அகதிகளுடன் ஓர் அகதியாக பிரிட்டனுக்கு வந்து சேர்ந்தார் ஸாமர்ஸெட். நாஜிகளிடமிருந்து தாம் தப்பி வந்த இந்தக் கதையையும் அவர் சுவைபட எழுதினார். பின்னர் யுத்தம் முடியும்வரையில் அமெரிக்காவில் தங்கியிருந்து அமெரிக்க — பிரிட்டிஷ் நல்லுறவை வளர்க்கும் விதத்தில் நிறைய எழுதித் தன் அருமைத் தாய்நாட்டுக்கு அருந்தொண்டாற்றினார்.

எழுத்தாளர்களை யுத்தசமயத்தில் எப்படிச் சிறந்த முறையில் பயன்படுத்திக்கொள்ளலாம், யுத்த மேகங்கள் சூழும்போது எழுத்தாளரின் பணி எப்படிச் சிறக்க முடியும் என்பதற்கு ஸாமர்ஸெட் மாமின் வாழ்க்கை ஒரு நல்ல எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

புகழ்பெற்ற வழக்கறிஞர்கள் பரம்பரையில் பிறந்தவர் ஸாமர்ஸெட் மாம். ஆனால் இவர் தேர்ந்தெடுத்தது டாக்டர் பட்டத்துக்கான படிப்பை; எனினும் விரும்பி ஏற்றது எழுத்தாளன் தொழிலை. சிறந்த தொரு சிறுகதை ஆசிரியராகவும் நாவலாசிரியராகவும் நாடகாசிரியராகவும் ஒருங்கே விளங்கிய ஸாமர்ஸெட் மாம் பள்ளிப் படிப்பின் போதே ஏராளமான புத்தகங்களை அடுத்தடுத்துப் படித்துப் போடுவதில் பேரார்வம் கொண்டிருந்தார். டாக்டருக்குப் படித்துக் கொண்டிருக்கும்போதே ஏற்பட்ட அநுபவங்களின் விளைவாக 'லாம்பெத்தின் லிஸா' என்ற நாவலை எழுதினார். இந்த முதல் நாவலே அவருக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தது. டாக்டர் பட்டம் பெற்றவரை, முழு நேர எழுத்தாளராகவே ஆக்கிவிட்டது.

ஆனால் அடுத்தாற்போல் அவர் எழுதிய பல கதைகள், நாவல்கள் பெரும் தோல்வியில் முடிந்தன, பொருளாதார ரீதியில். 'மறுபடியும் வைத்தியத் துறையில் புகுந்து தொலையத்தான் வேண்டும் போலிருக்கிறதே' என்று அவர் அலுத்துக் கொள்ளத் தொடங்கிய சமயத்தில் ஒரு திருப்பம் ஏற்பட்டது அவர் வாழ்வில்.

லண்டனில் ஒரு தியேட்டரில் அப்போது நடந்து கொண்டிருந்த நாடகம் வெற்றி பெறாது போக அவர்கள் அவசரம் அவசரமாக வேறு ஒரு நாடகத்தைத் தேடித் தயாரிக்க வேண்டிய நிலையில் இருந்தார்கள். சட்டென்று அவர்களுக்கு அகப்பட்டதும், குறைந்த செலவில் முடிக்கக் கூடியதுமான நாடகம் ஸாமர்ஸெட்டினுடையதுதான்.

ஆனால் அவர்களே ஆச்சரியப்படும் விதத்தில் லேடி ஃபிரெடரிக் என்ற அந்நாடகம் அமோக வெற்றி பெற்றது. ஸாமர்ஸெட் வைத்தியத் துறையை அறவே மறந்துவிடத் தீர்மானிக்கவும் உதவியது. அடுத்த மூன்று மாதங்களுக்குள் அவரது நான்கு நாடகங்கள் லண்டனில் ஒரே சமயத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்தன!



ஸாமர்ஸெட் மாம்

உலகின் பல பாகங்களுக்கும் விரிவாகச் சுற்றுப் பயணம் சென்றுள்ளார் ஸாமர்ஸெட். அவர் எழுதிய நாவல்கள் பெரும்பாலும் சொந்த அநுபவங்களின் அடிப்படையில்எழுந்தவையே. ஏறக்குறைய அவரது சுயசரிதை என்றே சொல்லக் கூடிய ஆஃப் ஹ்யூமன் பாண்டேஜ் (Of Human Bondage) அது எழுதப்பட்டு இருபது வருஷங்களுக்குப் பிறகே மிகச் சிறந்ததோர் இலக்கியப் படைப்பு என்று போற்றப்பட்டது. அதுவரையில் அதைக் கவனிப்பார் இல்லை!

முதல் உலக யுத்தத்தின் போது பிரிட்டிஷாருக்காக அந்த அரசாங்கத்தின் அங்கீகாரமின்றியே ருஷ்யாவிலும் ஸ்விட்ஜர்லாந்திலும் வேவு பார்த்து வந்தார் ஸாமர்ஸெட் மாம். இப்படிப் பலதரப்பட்ட சூழ்நிலைகளையும் வாழ்க்கை முறைகளையும் கண்ட அவர், தமது நாவல்களில் அவற்றைக் கொணர்ந்து சிறப்புப் பெற்றார். எழுத்துத் துறையிலே இருந்து அவரைப் போல் சம்பாதித்தவர்கள் சொற்பம் பேர்களே. தமது சொத்தைத் தாராளமாக நல்ல காரியங்களுக்கு வழங்கினார். அவற்றில் மாணவர்களின் உபகாரச் சம்பளத்துக்காக அவர் ஏற்படுத்திய நிதியும், வருஷந்தோறும்; முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் சிறந்ததோர் இளம் பிரிட்டிஷ் எழுத்தாளர் உலகைச் சுற்றி வந்து அநுபவம் பெற உதவும் வகையில் அவர் ஏற்படுத்திய ஒரு நிதியமும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவை.

ஸாமர்ஸெட் மாமின் எழுத்தாற்றல், கருத்தாழம் இவற்றை விளக்கும் வகையில் அவரது ஒருசில சிந்தனைத் துளிகளைக் கீழே தருகிறோம்:

**வாய்ப்பு மட்டும் கிட்டுமாயின் எந்தப் பெண்ணுமே ஆன்மத் தியாகம் செய்வாள்; ஏனெனில் தன்னைத் தானே பேணி வளர்த்துக் கொள்வதில் அவளுக்கு மிகவும் பிடித்தமான மோஸ்தர் தன்னையே இழந்து கொள்வதுதான்.**

ஃஃஃ

**வாழ்க்கையின் தேவைகளை ஒரு சமூகம் எந்த அளவுக்குப் புறக்கணிக்கிறது என்பதைக் கொண்டுதான் அதன் நாகரிகத்தைக் கணிக்க முடியும்.**

ஃஃஃ

**விமரிசனம் வேண்டும் என்று மக்கள் கேட்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் விரும்புவது புகழ்ச்சியைத்தான்.**

ஃஃஃ

**ஒன்றுமே படிக்காதிருப்பதைக் காட்டிலும் கால அட்டவணையையோ 'காட்லாக்'கையோ கூடப்படிக்க நான் தயார். இப்போதெழுதப்படும் நாவல்களில் பாதிப் பாகத்தைவிட அவை சுவாரசியமாக உள்ளன.**

ஃஃஃ

**இயற்கையில் தங்களுடைய நிலை என்ன என்பது பற்றித் தவறாக எண்ணுவதில் மக்களுக்கு அசாதாரணமான திறன் உள்ளது. தவற்றை ஒருகாலும் சீர்திருத்தவும் முடிவதில்லை.**

ஃஃஃ

**என் நடத்தையின் பல அம்சங்களை நான் விசித்திர உணர்வுடன் பார்க்கும் சந்தர்ப்பங்களுண்டு. பல மனிதர்கள் சேர்ந்து நான் உருவாகியிருக்கிறேன் என நான் உணர்கிறேன். இந்த வினாடியில் என்னுள்ளே ஆதிக்கத்திலுள்ள மனிதனும் நிச்சயமாக இன்னொருவனுக்கு இடம் ஒழித்துத் தந்து விட்டுப் போகத்தான் வேண்டும். இவர்களில் யார் உண்மையான நான்? எல்லோருமா? அல்லது ஒருவருமே இல்லையா?**

படித்துப் பாருங்கள்

## சாந்தலை

''தேவி! நீ இறந்த பின் என்ன நடந்தது? நீ என்ன பார்த்தாய்? உன் அநுபவம் எப்படி இருந்தது?''

''தேவா! என் ஆத்மாவுக்கு எவ்விதமான துன்பமும் நேரவில்லை; நோயும் இருக்கவில்லை. ஆனால் உடல் மட்டும் நொறுங்கிவிட்டது: அது ஆத்மா வசிக்கத் தகுதியற்றதாய் ஆகிவிட்டது!''

''தேவி! நீ எனக்குப் பேருதவி செய்திருக்கிறாய். என்னைக் கரை ஏற்றுவதற்காக உன் ஆத்மா லக்ஷ்மியின் உடலில் நுழைந்திருக்கிறது. இது அற்புதம்! இரண்டு ஆத்மாக்கள் ஒன்றை ஒன்று புரிந்து நடந்து கொண்டால், சமமான அன்பையும், நம்பிக்கையையும் வளர்த்துக் கொண்டால் ஒரே ஆத்மாவாக முடியுமா?''

''முடியும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது, பிரபோ!''

சாந்தலையின் இந்த முடிவை இன்றைய 'ரியலிஸ' பக்தர்களான பலர் ஒப்புக்கொள்ள முடியாமல் போகலாம். ஆனால் அபரிமிதமான தூய காதலிலும், அதன் தெய்வீகத் தன்மையிலும் நெருக்கமான, இணைபிரிக்க முடியாத உன்னதமான நட்பிலும் நம்பிக்கை கொண்டுள்ள கணக்கற்ற வாசகப் பெருமக்களுக்குச் சாந்தலையின் இந்தக் கூற்று நெஞ்சை நெகிழச்செய்து கண்களில் நீர் மல்க வைக்கும், நூலை முழுமையாகப் படிக்கும்போது.

இதுபோன்ற, அதீத கற்பனை என்று கருதப்படக்கூடிய விஷயங்களில் உள்ளத்தைக் கடுமையாக்கிக் கொண்டு அணுகுவோரும் கூட, இந்த நாவலில் ஆசிரியரின் கதை சொல்லும் திறன், சரித்திர காலத்திலிருந்து வந்த பல சம்பிரதாயச் சடங்குகளை அவர் உள்ளார்த்தத்துடன் விளக்கி வர்ணிக்கும் அழகு, பேலூர் சென்ன கேசவப் பெருமாள் கோயில் எழும்பிய விதத்தையும், அதன் கலை அழகுச் சிறப்பையும் அவர் விரிவாக எடுத்துக் கூறும் விதம் போன்ற வேறு பல அம்சங்களை வெகுவாக ரசிப்பார்கள்.

ஹொய்ஸல மன்னன் விஷ்ணுவர்த்தனனின் பட்டத்தரசி சாந்தலையைப் பற்றிய சரித்திர நாவல் இது. பிரபல கன்னட ஆசிரியர் கே. வி. ஐயரின் இந்தப் படைப்பை சாகித்ய அகாதமியின் ஆதரவில் சீதாதேவி நல்ல தமிழில் நெருடல் இல்லாத வகையில் மொழிபெயர்த்திருப்பது பாராட்டத் தக்கது.

பிரசுரம்: கலைமகள் காரியாலயம், சென்னை-4; விலை ரூ. 5.00

(கறுப்பர்களின் ஆட்சியுரிமையைப் பறித்ததுடன் ஒருதலைப்பட்சமாக சுதந்திரப் பிரகடனம் செய்துள்ளார் ரொடீஷியப் பிரதமர் ஐயான் ஸ்மித். இதைத் தொடர்ந்து சில ஆப்பிரிக்க நாடுகள் பிரிட்டன் இவ்விஷயத்தில் தீவிர நடவடிக்கை எடுக்கத் தயங்குவதாகக் கோபம் கொண்டு அத்துடன் ராஜீய உறவுகளைத் துண்டித்துக் கொண்டுள்ளன. காமன்வெல்த்திலிருந்து விலகுவதாகப் பயமுறுத்தியுள்ளன. ரொடீஷியாவுக்கு எதிராகப் படைதிரட்டி யுத்த முஸ்தீபுகளும் செய்து வருகின்றன. இத்தகைய ஒரு நெருக்கடியான நிலைமையில் ரொடீஷியாவின் சரித்திரத்தைச் சுருக்கமாக அறிந்துகொள்வது பயனுள்ளதாயிருக்கும்.)

# ரொடீஷியா

"ஆரெஸ்ஸஸ்"

1888ம் வருடம் பிப்ரவரி மாதம் பதினொன்றும் தேதி. உலகத்தினர் அச்சத்தோடு 'இருண்ட கண்டம்' என்று குறிப்பிட்ட ஆப்பிரிக்காவின் இருதயம் போன்ற பிரதேசம். உங்குவாஸா நதியின் கரையிலே ஒரு விசித்திர நாடகம் நடைபெறுகிறது. அந்த நாடகம், ஆப்பிரிக்க வரலாற்றில் ஒரு திருப்பு முனை. அதை நாம் புரிந்துகொள்ளச் சரித்திர ஏடுகளை பின்புறமாகத் திருப்பியாக வேண்டும்.

வட அமெரிக்கக் காலனிகளுக்கு வெய்யிலுக்கு அஞ்சாத 'மனித மிருகங்கள்' தேவைப்பட்டன. குடும்பம் குடும்பமாகக் கறுப்பர்கள் ஆப்பிரிக்காவிலே இருந்து கடத்தப்பட்டனர். அடிமை வியாபாரம், 'தங்க வியாபாரம்' என்று வர்ணிக்கப்பட்டது. 'தங்க வியாபாரம்' என்றே புத்தகம் எழுதினான் ஜாப்ஸன் என்ற துரை.

அடிமைகளைக் 'கொள்முதல்' செய்ய ஆப்பிரிக்கக் கண்டத்தின் கடற்கரை ஓரங்களில் கோட்டைகள் எழுந்தன. கோட்டைகளிலே போர்ச்சுகீஸியர், ஸ்பானியர், டச்சுக்காரர், இங்கிலீஷ்காரரின் கொடிகள் மாறி மாறிப் பறந்தன. அவற்றைச் சுற்றி நடந்த போர்களில் இரத்த ஆறுகள் பாய்ந்தன.

1663ல் ஆப்பிரிக்காவின் தேசப்படம் உருவாயிற்று. ராபர்ட் வாகன் தீட்டிய படத்தை பீட்டர் ஹேலின் அச்சிட்டு வெளியிட்டார்.

அந்தத் தேசப்படத்திலே பல குறைகள். ஸாம்பஸி நதியின் போக்கு என்ன? புகழ்வாய்ந்த டிம்பக்டு நகர் எங்கே உள்ளது? நைல் நதியின் உற்பத்தி எங்கே? இப்படிப் பல பூகோளப் புதிர்கள்.

இயற்கை விடுத்த இந்தச் சவாலை வெள்ளையர் உலகம் ஏற்றது. மங்கோபார்க், ஸ்டான்லி; ரிச்சர்ட் பர்ட்டன், ஜான் ஸ்பெக், காமரான், ஜேம்ஸ் ப்ரூஸ், ஸர் சாமுவேல் பேகர், டேவிட் லிவிங்ஸ்டன், ஆகிய தீரர்கள் புறப்பட்டார்கள்.

தலைசிறந்த விக்டோரியா நீர்வீழ்ச்சியும், மிகப் பெரிய தங்கனிக்கா, விக்டோரியா, நயாஸா ஏரிகளும், அபிஸீனியாவும் சூடானும் ஆப்பிரிக்கப் படத்திலே ஏறின. பொன்னும் வைரமும், காடும் கழனியும், கால்நடைகளும், வேட்டை மிருகங்களும் செறிந்த 'அற்புத ஆப்பிரிக்கா' உலகுக்கு வெளிச்சமாயிற்று.

'பூகோளக் கண்டுபிடிப்புகளின் முடிவு மதமாற்றும் தொண்டின் ஆரம்பம்' என்றார் டேவிட் லிவிங்ஸ்டன். கிறிஸ்துவின் பதாகையைத் தாங்கிப் பாதிரிகள் ஆப்பிரிக்காவில் நுழைந்தார்கள். தொடர்ந்து துப்பாக்கிகளைத் தோளிலே தூக்கிக்கொண்டு காலனிகள் காணப் பல்வேறு ஐரோப்பியரும் தொடர்ந்தனர்.

'கேப் முனை முதல் கெய்ரோவரை பிரிட்டிஷ் சாம்ராஜ்யம்' என்று ஊழித் தீப்போலச் சிந்தித்தார் ஒருவர். அவரது சாகஸச் சிந்தனை வெள்ளையரையே திடுக்கிட வைத்தது. பீமசேனனைப் போல் கிரேக்கப் புராணங்களில் வரும் கலாஸஸ்ஸுடன் இவரை ஒப்பிட்டார்கள்.

ஆரம்பத்தில் நாம் குறிப்பிட்ட உங்குவாஸா நதி நாடகத்தின் சூத்திரதாரி அவரே. அவர்தான் ஸர் ஸிஸில் ஜான் ரோட்ஸ். நாடகக் கதாநாயகன்: போர்க்குணம் செறிந்த மட்டபீலிகள் என்ற ஆப்பிரிக்க மக்களின் மன்னன், லோ பெங்குலோ.



ஸ்மித்

நாடகத்தின் விளைவாகப் பிறந்தது : ரொடீஷியா.

உங்குவாஸா நதி நாடகத்தை நாம் பரிபூரணமாக உணர்ந்து ரசிக்க இந்த இருவரைப் பற்றியும் நன்றாகத் தெரிந்து கொண்டாக வேண்டும்.

இங்கிலாந்திலே ஸ்டார்ட்போர்ட் என்றொரு சிற்றூர். அதன் பாதிரியாரின் ஏழாவது குழந்தையாக ஒரு மகன். நுரையீரலில் அவனுக்குத் தீராத நோய். 'தென் ஆப்பிரிக்காவுக்குச் சென்றால் அது குணமாகலாம்' என்று வைத்தியர்கள் சொன்னார்கள். 1870ம் வருடம் ஜூன் மாதம் அவன்

புறப்பட்டான். அவனிடம் அப்பொழுது இருந்தவை ஒரு பக்கெட், ஒரு மண்வெட்டி, சில அரிய புத்தகங்கள், ஒரு கிரேக்க அகராதி!

பிற இளைஞர்களைப் போல் அவன் குடிக்கவில்லை; குமரிகளை நாடி ஓடவில்லை. எந்நேரமும் ஒரே சிந்தனை. வாளியைக் கவிழ்த்துப் போட்டுக் கொண்டு யோசித்துக் கொண்டே யிருந்தான்.

வியாபார நுணுக்கங்களிலே அவன் தேர்ந்துநின்றான்; பைபிளையும் கரைத்துக் குடித்திருந்தான்; வேதாந்தம், தத்துவம் பேசினான்; புதிராகவே பலருக்கும் இருந்தான்.

பத்து ஆண்டுகள் பறந்தன. 1880ல் 'டீ பீர்ஸ் மைனிங் கார்ப்பொரேஷ'னை அவன் நிறுவினான். மூலதனம்: இரண்டு லட்சம் பவுன்கள். அது மாத்திரமா? மிகப் புத்திசாலியான பார்னே பார்னட்டோ என்ற யூதனின் போட்டிக் கம்பெனியும் தன்னோடு இணையும்படி பணிய வைத்தான். கிம்பர்லி வைரத் தொழிலின் முடிசூடா மன்னனாக உயர்ந்தான். அந்த இளைஞன் : ஸர் ஜான் ஸெஸில்ரோட்ஸ்.




பணம் குவிப்பது ரோட்ஸின் இலட்சியம் அல்ல. 'விரிந்த ஆப்பிரிக்கா' என்ற இலட்சியத்தை அடையவே அவர் பொருளீட்டினார். அவருடைய நண்பர் ஜெனரல் கோர்டன் என்பவர் சீன அரசு தனக்கு ஒரு புரட்சியை அடக்கியதற்காக ஓர் அறை நிறையப் பொன் கொடுத்ததாகவும், அதை அவர் மறுத்து விட்டதாகவும் சொன்னார். ரோட்ஸ் கூறினார்: 'கோர்டன்! எனக்கு அப்படி யாராவது கொடுத்திருந்தால், எத்தனை ⁶ அறைகள் அளவு நிதியாக இருந்தாலும் ஏற்றுக் கொண்டிருப்பேன். பெரிய திட்டங்கள் இருந்தால் போதுமா? டப்பு இல்லாமல் அவைகள் என்ன ஆகும்?''

''ஆண்டுக்கு 25 லட்சம் பவுன் வரை ரோட்ஸுக்கு வருமானம். ஆனால் வருஷக் கடைசியில் கணக்கில் 'ஓவர் டிராப்டாகவே' இருக்கும். எத்தனையோ பேர்களுக்கு அவர் அள்ளி, அள்ளிக் கொடுத்தார்'' என்று ரோட்ஸின் பாங்கரும், அவர் சுயசரிதையை எழுதியவருமான மிட்சல் குறிப்பிடுகிறார்.

ரோட்ஸ் பணக்காரரானதும் அரசியலிலே குதித்தார். அப்பொழுது — டச்சுக்காரர்களின் வழிவந்த போயர்களின் ஆதிக்கத்தில் டிரான்ஸ்வால் மாநிலம் இருந்தது.... டிரான்ஸ்வாலுக்கு வடக்கேயிருந்த ஸ்டெல்லா லாண்ட், கோஷன் லாண்ட், பெச்சுவானா லாண்ட், | மாஷோனா லாண்ட், மட்டபீலி லாண்ட் ஆகியவை போயர்களுக்கா அல்லது தென் ஆப்பிரிக்க பிரிட்டிஷாருக்கா என்ற போட்டி எழுந்தது.

டிரான்ஸ்வாலின் போயர் தலைவரான பால்க்ருகரை விடத் தாம் சிறந்த இராஜதந்திரவாதி என்பதை ரோட்ஸ் கொஞ்சம் கொஞ்சமாக நிரூபித்தார். ஸ்டெல்லா லாண்ட், கோஷன் லாண்ட் ஆகியவை ஒன்றன்பின் ஒன்றாக பிரிட்டிஷ்காரருடன் ஒப்பந்தங்கள் செய்து கொண்டு விட்டன. ரோட்ஸின் பார்வை, அதற்கும் வடக்கே பாய்ந்தது.

ஆப்பிரிக்கச் சுதேசிகளில் போர் வீரத்துக்குப் புகழ் கொண்டவர்கள் — ஜூலுக்களும், மட்டபீலிகளுமே. அவர்கள் பிரதேசம் மட்டபீலி லாண்ட், மாஷோனா லாண்ட் என்று வெள்ளையர்கள் குறித்தவை. மட்டபீலிகளின் புகழ் வாய்ந்த அரசனே — லோ பெங்குலோ.

லோ பெங்குலோவின் நாடு, சுரங்க வளத்திலே சிறந்திருக்க வேண்டும் என்பது வெள்ளையர்களின் ஊகம்.. கடல் மட்டத்தை விட உயர்ந்த அந்தப் பீடபூமி, ஐரோப்பியர் வாழ்வுக்கு ஏற்றது என்பதும் அவர்கள் அறிந்ததே.

லோ பெங்குலோவின் தலைநகரம், புலவாயோ. மட்டபீலி மொழியில், 'படுகொலைக் களம்' என்று அதற்குப் பொருள்!

ரோட்ஸ் புலவாயோவுக்கு ஒரு தூதுக் குழுவை அனுப்பினார். சென்றவர் லோ பெங்குலோவிடம் கேட்ட உரிமை : மட்டபீலி, மாஷோனா பகுதிகளில் உலோகப் பொருள்களை வெட்டும் உரிமை !

உங்குவாஸா நதி ஆடாமல் அசையாமல் நின்றிருந்தது. ஆழ்ந்த சிந்தனையில் அமிழ்ந்து கிடந்த லோ பெங்குலோவின் முன்பு ஒப்பந்தப்பத்திரம் விரிந்துக் கிடந்தது. மட்டபீலி வீரர்களின் கவசங்கள் பளபளத்துக்கொண்டிருந்தன. நெஞ்சைக் கையிலே பிடித்துக் கொண்டு வெள்ளையர்கள் நின்றிருந்தார்கள்.

பெங்குலோ நினைத்தான்: ''இது மட்டபீலிகளின் துக்க நாள்..... இந்த ஒப்பந்தம் அவர்களின் அடிமை சாஸனம்.....என்றாலும் இந்த வெள்ளையர் காபீர்கள், ஜூலுக்கள் எல்லோரையும் ஒழித்து விட்டார்கள். போரிடுவதை விடத் தழைந்துதான் இவர்களைச் சமாளிக்க வேண்டும்...... அதோடு பணம் கிடைக்கிறதே பணம்! அதை எப்படி விட்டு விடுவது?'

பெருமூச்சு இழைய, கடைசியில் கையெழுத்திட்டான், லோ பெங்குலோ. அவனுக்குக் கிடைத்தது: · மாதம் 100 பவுன்கள் 'பென்ஷன்'. 1000 துப்பாக்கிகள். 1,00,000 துப்பாக்கி ரவைகள். பீரங்கிகள் பொருத்திய ஒரு ஸ்டீம் படகு; அதற்கு விலையாக 500 பவுன்களை பெங்குலோ தர வேண்டும்!

இந்த அற்ப விலைக்கு வெள்ளையர்கள் பதிலாகப் பெற்றது: சுமார் ஐந்து லட்சம் சதுர மைல்களில் ஏகபோக சுரங்க உரிமை!

'மனம் மாறி மட்டபீலிகள் தாக்குவார்களோ?' என்று அஞ்சிக் கொண்டே ஒரு மாதம் பிரயாணம் செய்து 11–9–1890ல் தற்பொழுது தலைநகர் ஸாலிஸ்பரி உள்ள இடத்தை அடைந்தார்கள். அன்றைய பிரிட்டிஷ் பிரதமரின் பெயரை அந்த முதல் நகருக்குச் சூட்டினார்கள். ஸாலிஸ்பரி வேகமாக வளர்ந்தது. ஒரு வருடத்தில், அங்கே மூன்று பாங்குகள், ஒரு ஸ்டாக் எக்ஸேஞ்ச், ஒரு டவுன் ஹால், ஒரு தபாலாபீஸ், ஓர் ஆஸ்பத்திரி, நான்கு சர்ச்சுகள், நான்கு ஹோட்டல்கள், ஒரு ரேஸ் கோர்ஸ் !

பெங்குலோ தனது ஆட்சி வேகமாக வீழ்வதைப் பார்த்தான்; போருக்கு ஆயத்தங்கள் செய்தான்; போர் நடந்தது. வெள்ளையர்கள் அவன் தலைநகராகிய புலவாயோவை 4-11-1893ல் பிடித்தார்கள். லோ பெங்குலோ ஸாம்பஸியின் சதுப்பு நிலங்களுக்குத் தப்பி ஓடி, அங்கே மடிந்து போனான்.

பெங்குலோ இறந்தபொழுது 'உங்களுக்குக் காலம் வரும்; காத்திருங்கள்; முழு நிலா முளைக்கும் பொழுது உங்கள் தலைவன் வருவான்' என்று கூறியிருந்தான். 1896ல் மட்டபீலி வீரர்கள் 17,000 தயாரானார்கள். புலவாயோ சுற்றுப்புறங்களில் கொள்ளை, கொலை நடத்தினார்கள். 'தலைவன் வரட்டும். போர்! போர்!' என்றிருந்தார்கள். ஆனால் தலைவன் வரவேயில்லை !

சிஸில்ரோட்ஸ் அப்பொழுது அரசியலிலே தளைந்து போயிருந்தார்; என்றாலும் துணிவாகச் செயலில் இறங்கினார். தன்னந்தனியாக மட்டபீலிகளின் போர்முகாம் அருகில் கூடாரம் அடித்துத் தங்கினார்.

மட்டபீலிகள் அவரைக் கண்டு அஞ்சினார்கள். 40, 42 நாட்கள் கடந்தன. பிறகு மட்டபீலித் தலைவர்கள் ஒருவர்பின் ஒருவராக வந்தனர். ரோட்ஸ் சமாதானத்தை அவர்களிடம் வலியுறுத்தினார்.

அஞ்சாநெஞ்சுடன் ரோட்ஸ் நிராயுதபாணியாக மட்டபீலிகளிடம் சென்றார். அவர்களது கொலைகளையும், கொள்ளையையும் கண்டித்தார்; 'சமாதானம் நிலைநிற்க வேண்டும்' என்று முழங்கினார்.

தனிமனிதனின் நெஞ்சுரம் மட்டபீலிகளின் போர்க் குணத்தை நொறுக்கிவிட்டது. மட்டபீலிகள் ஆயுதங்களைக் கீழே எறிந்தார்கள். சுதேசிகளின் வீழ்ச்சி பரிபூரணமாயிற்று.

ரோட்ஸின் பெயரால் அமைந்த ரொடீஷியா வளர்ந்தது. இரயில்வேக்கள் வந்தன; சுரங்க வளம் பெருகியது.

1923ல் சார்ட்டர்ட் கம்பெனியின் ஆட்சி முடிந்தது. வட ரொடீஷியா, தென் ரொடீஷியா, நியாஸாலாந்து மூன்றும் சேர்ந்து 'பெடரேஷன் ஆப் ரொடீஷியா அண்ட் நியாஸாலாண்ட்' என அமைந்தது. இங்கிலாந்தின் மேற்பார்வையோடு ஆட்சி நடந்தது.

ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட புதிய விழிப்பின் விளைவாக, 24–10–1964ல் வட ரொடீஷியா, 'ஸாம்பியா' என்ற பெயருடன் விடுதலை அடைந்தது. ஜனாதிபதி : டாக்டர் கென்னத் கௌண்டா.

தென் ரொடீஷியாவின் பரப்பு: 1,50,000 சதுர மைல்கள்; தினை, புகையிலை, பழங்கள் முக்கிய விளைபொருள்கள்; சுமார் 30 லட்சம் கால்நடைகள் உள்ளன.

நிலக்கரி, அஸ்பெஸ்டாஸ் உற்பத்தி அதிகம். தென்கிழக்காசியாவுக்கே தென் ரொடீஷியாதான் பெரும்பாலும் அஸ்பெஸ்டாஸ் அளிக்கிறது. 1956ல் 23 மில்லியன் பவுன்கள் பெருமானமுள்ள கனிப்பொருள்கள் இங்கு வெட்டப்பட்டன. அதிலே தங்கத்தின் பங்கு: ஆறே முக்கால் மில்லியன் பவுன்கள்.

கடற்கரை இல்லாத உள்நாட்டுப் பகுதி தென் ரொடீஷியா; ஜாம்பியா, மொஸாம்பிக், பெச்சுவானா லாண்ட், தென் ஆப்பிரிக்கா இவை அதனைச் சூழ்ந்த நாடுகள். மக்கள் தொகை பதினெட்டு ஆப்பிரிக்கருக்கு ஒரு வெள்ளையர் என்ற விகிதத்தில் உள்ளது.

ஆப்பிரிக்க மக்களில் ஒரு பகுதியினருக்கு மட்டுமே ஓட்டுரிமை என்பதுடன் அவர்கள் மொத்தமுள்ள 65 சட்டசபை ஸ்தானங்களில் 15க்கு மட்டுமே ஓட்டுப் போட முடியும்! ஒருதலைப்பட்சமாகச் சுதந்திர அறிவிப்பைத் தென் ரொடீஷியப் பிரதமர் ஐயான்ஸ்மித், 11–11–1965ல் அறிவித்து விட்டார்.

ஆட்சி உரிமையைக் கைப்பற்றியுள்ள சிறுபான்மை தென் ரொடீஷிய வெள்ளையரைப் பார்த்து, உலகமே பொங்கி நிற்கிறது. ஆப்பிரிக்கா இணைந்து உறுமுகிறது.

மட்டபீலி அரசன் லோ பெங்குலோ குறிப்பிட்ட 'பூரண சந்திரோதயம்' ஆப்பிரிக்காவில் நிகழக்கூடிய காலம் நெருங்குவதாகவே தோன்றுகிறது. ஆனால் அதற்கு முன்பு ஏற்படப் போகின்ற நிகழ்ச்சிகளை நினைத்தாலே, நெஞ்சம் நடுங்குகின்றது.



# காலச் சக்கரம்




## அத்தியாயம் 15

## மனமாற்றம்

தங்கப்பன் சத்திய சந்தனாக இருக்க நினைப்பது குறித்து உஷா பல தடவைகளில் அவனைக் கேலி செய்திருக்கிறாள். அவன் நேர்மையாளனாக இருப்பதே அவளிடம் பொறாமையை வளர்த்து அவள் கோபமுறவும் காரணமாக அமைந்திருக்கிறது. அவனை நெறிதவறி நடக்கச் செய்யும் உத்தேசத்துடன் அவள் கவர்ச்சியான சிரிப்பை உதிர்த்து அவனுடன் பேசியிருக்கிறாள்; தங்கப்பன் உறுதியாகவே நின்றிருக்கிறான். அவனுடைய தொழிலகத்தில் தகராறுகளை உருவாக்கியும் தேர்தல் பிரசார சமயத்தில் பல சதிகளைச் செய்தும் பார்த்திருக்கிறாள்; அவன் அசைந்து கொடுத்ததில்லை.

ஆனால் தேர்தலின் முடிவில் அவன் சகா விலைக்கு வாங்கப்பட்ட செய்தி கேட்டு ஏற்பட்ட பேரதிர்ச்சியும் அதையடுத்து அவனும் தோல்வியுற்ற செய்தியைத் தாங்கி வந்த மாருதி, ''தம்பி! சத்தியம் செத்து விட்டது'' என்று கதறியபடியே அவன் மடியில் மனமுடைந்து விழுந்து இறந்து போனதும் அவனை அடியோடு மாற்றி விட்டன. உஷாவின் வசீகர விழிகளோ, ஏளன மொழிகளோ அல்லது சூழ்ச்சிச் சதிகளோ சாதிக்காததை இவை சாதித்து விட்டன. தங்கப்பன் இப்போது பழைய நேர்மையாளன் அல்ல! எந்த அளவுக்கு அகப்பட்டுக் கொள்ளாமல் தகிடுதத்தங்கள் செய்யலாமோ, அவ்வளவையும் செய்தான் அவன்!

கணக்கு வழக்குகளை வைத்துக் கொள்ளுற விதத்தில் ஏமாற்றவும் லஞ்சம் கொடுக்கவும் அவன் தயாரானபிறகு இப்படி நடந்து கொண்டு முன்னுக்கு வருவதும் பணம் பண்ணுவதும் மிகவும் எளிது எனக் கண்டான் அவன். அறிவைப் பயன்படுத்தியும் உழைத்துப் பாடுபட்டும் செல்வம் சேர்த்து வாழ்க்கையில் உயர்வது திறமைசாலிகளுக்குக் கூடக் கடினமான காரியம்தான். ஆனால் இப்போது அவன் நடந்துகொள்கிற விதத்துக்கு அதிகமாகச் சிரமப்பட வேண்டியதுகூட இல்லை! கொஞ்சம் சாமர்த்தியம் தேவை, அவ்வளவுதான்.

கடினமான உழைப்பால் அவன் சாதிக்க முடிந்தது சொற்பமே. தொழிலகத்தின் அபிவிருத்திக்கு எத்தனையோ இடையூறுகள், தொல்லைகள், சிரமங்கள். ஆனால் இன்று தாமரைத் தொழிலகம் வெகு விரைவாக விரிவடைந்து கொண்டே போயிற்று! கறுப்பும் வெளுப்புமாகப் பணம் தாராளமாகக் குவிந்தது.

மிருணாளினியின் போதனையின்பேரில் அவன் ஓர் அதிதீவிர கம்யூனிஸ்டாக மாறிய பிறகு அவனுக்கு ஆட்சியிலிருந்தோரிடம் கொஞ்ச நஞ்சமிருந்த நம்பிக்கையும் விசுவாசமும் மதிப்பும் அடியோடு மறைந்து விட்டன. அதன் பின், இப்படிச் சட்டத்துக்கு விரோதமாக நடக்கிறோமே என்ற மனச்சாட்சி உறுத்தல் கூட அவனுக்கு ஏற்படவில்லை. உள்ளத்துக்குள் ஒரு தீவிர கம்யூனிஸ்டாகவும் பிறர் கண்களுக்கு ஒரு முதலாளி — தொழிலதிபனாகவும்— விளங்கும் தன் விசித்திர நிலையை எண்ணிப் பார்த்து அவன் தனக்குள் சிரித்துக் கொள்வான். மிருணாளினி விரும்பியதும் இதைத்தான். ஏதோ ஓர் உள் நோக்கத்தோடுதான் அவன் ஒரு கம்யூனிஸ்ட் என்பதே வெளியே யாருக்கும் தெரியக் கூடாது என்று அவன் கூறியிருந்தாள். அத்துடன் எந்த வழிகளைப் பின்பற்றியேனும் பணம் பண்ண அவன் தயங்கக் கூடாது என்றும் அவன் எவ்வளவு சம்பாதித்துத் தந்தாலும் அது அவர்களுடைய

தேவையின் ஒரு சிறு பகுதியைக் கூடப் பூர்த்தி செய்யாது என்றும் சொல்லி யிருந்தாள்.

தொழிலகத்தின் விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் தங்கப்பன் பெர்மிட் என்றும், லைசென்ஸ் என்றும் ஏதாவது ஒரு காரணத்துக்காக அடிக்கடி புதுதில்லி போக வேண்டியிருந்தது. அப்போதெல்லாம் அவனை மிருணாளினி வந்து சந்திப்பாள். உற்சாகமாகப் பேசுவாள். வெகு சீக்கிரமே நாட்டுக்கு நல்ல காலம் பிறக்கவிருக்கிறது என்பாள். ஒரு முறை தங்கப்பன் அவளிடம் தன்னிடம் இருந்த ஐயாயிரம் ரூபாய் கறுப்புப் பணத்தைக் கொடுத்தான். 'இது எந்த மூலைக்கு?' என்பது போல் அவள் அதனை அலட்சியமாக வாங்கிக் கைப் பைக்குள் போட்டுக்கொண்டாள். அவளுடைய எதிர்காலத் திட்டங்கள் என்ன என்பதை அவனுக்கு அவள் விவரித்துச் சொல்லவில்லைதான். ஆனால் இந்தத் தேசத்தில் ஒரு பெரிய மாறுதலை உருவாக்கப் போகிற மகத்தான திட்டம் அது என்ற வரையில் தங்கப்பன் உணர்ந்திருந்தான்.

அவளுடைய எண்ணங்கள், நோக்கங்கள், திருஷ்டி எல்லாம் உயர்ந்தவை, பரந்தவை, தீர்க்கமானவை. இப்போதும், தங்கப்பன் புதுதில்லிக்குப் பயணப்பட்டுக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் கோவையிலிருந்து ப்ளூமவுண்டனில் சென்னை நோக்கிச் சென்று கொண்டிருக்கையில் திருஷ்டியை விரிவு படுத்திக் கொள்ள வேண்டியதன் அவசியத்தைப் பற்றி மிருணாளினி கூறியிருந்தது அவனுக்கு நினைவு வந்தது. சென்ற முறை அவன் தில்லி சென்றிருந்த போது நடந்த சம்பாஷணை அது. சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பிரும்மாண்டமான கட்டடங்களும் நவீன காலத்திய மாபெரும் கட்டடங்களுமாக ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு கம்பீரமாக உயர்ந்து நின்று பார்ப்போரைப் பிரமிக்க வைக்கும் தலைநகரின் வீதிகளில் அவர்கள் வாடகைக் காரில் சென்று கொண்டிருந்த போதிலும் பேச்சு சுற்றுப்புறத்தைப் பற்றியதாக இல்லாமல் அவர்களைப் பற்றியதாகவே இருந்தது. பேச்சுவாக்கில், ''நாடே திருந்தாவிடினும் லட்சிய சூனியன் ஒன்றினை அமைக்க வேண்டும் என்பதற்காக என் தொழிலகத்தில் நான் மேற்கொண்டிருந்த சிறு முயற்சி வெற்றி பெற்றிருந்தால் போதும், நான் திருப்தியடைந்திருப்பேன்'' என்றான் தங்கப்பன்.

மிருணாளினி சிரித்தாள்: ''ராஜாவுக்குத் தினமும் முக க்ஷவரம் செய்த நாவிதன், தன்னிடமுள்ள ஒரு சிறு தங்கக் கட்டியையே நினைத்துக் கொண்டு ஊரிலே எல்லாருமே சௌக்கியமாக இருப்பதாக அரசனிடம் சொல்லி வந்தானே, அந்தக் கதை தெரியுமில்லையா உங்களுக்கு? ஒரு நாளைக்கு மந்திரி அந்தத் தங்கக் கட்டியை நாவிதன் அறியாமல் எடுத்து ஒளித்துக் கொண்டார். மறு நாளே அந்த நாவிதன் தேசத்தில் எல்லாரும் கஷ்டப்படுகிறார்கள், நேர்மை, ஒழுக்கம், எல்லாவற்றுக்கும் பஞ்சம் வந்து விட்டது என்று முறையிட்டான் தன் அரசனிடம். அப்படித்தான் இருக்கிறது, உங்கள் கதையும்! குறுகிய மனப்பான்மையுடன் உங்கள் லட்சிய சூனியன் பாமானைப் பற்றி மட்டுமே எண்ணிக் கொண்டிருக்காதீர்கள். உங்கள் வீடு, உங்கள் தொழிலகம், அதிகம் போனால் உங்கள்



தொகுதி மக்கள்! உங்கள் சிந்தனே எப்போது விரிவடையப் போகிறது? நாட்டைப் பற்றி மொத்தமாக நினைத்துப் பாருங்கள். இந்தத் தேசம் முழுவதிலுமே இன்று ஒரு சீர்திருத்த வேகம் பரவ வேண்டும் கட்டாயமாக. அதற்கு என்ன செய்யலாம் என்று யோசியுங்கள். எனக்குத் தெரிந்து இதற்கு ஒரே வழிதான் இருக்கிறது...''

'மனத்தை விசாலப்படுத்திக் கொண்டு, பரவலான முறையில் எதையும் நினைத்துப் பார்க்க எனக்குக் கற்றுக் கொடுத்தவளே அவள்தான்' என்று நன்றியோடு எண்ணிஞன் தங்கப்பன். 'இன்று நான் சட்ட வரம்புகளை மீறித் தவறுகள் இழைத்தாலும், மோசடிகள் செய்து பணம் சேர்த்தாலும் நாளை இவை யெல்லாம் ஓர் உன்னத லட்சியத்துக்குப் பயன்படப் போகின்றன. இந்த நாட்டி லிருந்து லஞ்ச ஊழல்களும் ஏமாற்று வித்தை களும் விடைபெற்றுக் கொண்டு ஓடப் போகின்றன; மனத்திலும் வாக்கிலும் செய லிலும் சுத்தமான சமூகமும் அரசாட்சியும் உருவாகப் போகின்றன. உழைப்பும் நேர் மையும், அறிவாற்றலும் அவற்றுக்குரிய நியாயமான உயர்நிலையை அடைந்து பயன் தரப் போகின்றன!' — இப்படியெல்லாம் பெருமிதத்துடன் எண்ணியபடி சென்ட்ரல் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் ரயிலே விட்டு இறங்கிஞன் தங்கப்பன்.

## அத்தியாயம் 16

# தீர்மானம்

''வா தம்பி! ரொம்ப நாளாச்சு பார்த்து. சௌக்கியந்தானே?''

தங்கப்பன் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிஞன். 'இவர் எங்கே என்னைத் தேடிக் கொண்டு வந்தார்?' என்று எண்ணியவஞக. தாய் மாமன் முருகேசனுக்குப் பின்ஞல் செல்லமும் அவன் அப்பா சபாபதியும் நின்று கொண் டிருந்தார்கள்.



''சௌக்கியந்தான் மாமா! நீங்க எப்படி இருக்கீங்க? வீட்டிலே மாமி, மீஞட்சி, மாப்பிள்ளை எல்லோரும் சுகமா?''

''எல்லாரும் நல்லாத்தான் இருக்காங்க. மீஞட்சியோட கல்யாணத்துக்குக் கூட உனக் குக் கடிதாசு போட நினேச் சேன்; என்னமோ உனக்கு அவளைக் கட்டிக் கொடுக்க முடியலையே என்ற கோபம். அழைப்புக் கூட அனுப்பாமல் இருந்து விட்டேன். கிடக்கு, அந்தப் பழைய கதையை யெல்லாம் மறந்துடு தம்பி! வா, போகலாம்.''

''மாமா! எனக்காகவா நீங்க ஸ்டேஷனுக்கு வந் தீங்க?''

''ஏன் வரக்கூடாதா?''

''அனாவசிய சிரமம்.''

''சும்மா இருக்கட்டும், பரவாயில்லே. வீட்டிலே எல் லோரையும் அழைச்சுக்கிட்டு நேற்று மாம்பலம் போயிருந் தேன். செல்லத்தைப் பார்த்து ரொம்ப நாளாச்சுன்னு மீஞட்சி குறைப்பட்டுக் கிட்டா. அங்கே போனப்போ பேச்சு வாக்கிலே நீ இன் னிக்கு வருகிறதா சொன் ஞங்க. உடனே நான் கார் கொண்டு வரேன்னுட்டேன்! காலையிலே 'அலாரம்' அடிச் சதும் எழுந்திருச்சு நேரே மாம்பலம்! இவங்களையும் காரிலே ஏற்றிப் போட்டுக் கிட்டுத் தம்பியை வரவேற்க

வந்தாச்சு. ஒண்ணே ஒண்ணுதான் மறந்துட்டேன்!''

''என்னது?''

''பூமாலே!''

''விண்டல் செய்யறீங்களா?''

''விண்டல் என்ன தம்பி? சீக்கிரமே மாலைக்குக் கழுத்தை நீட்ட வேண்டியவன் தானே நீ? செல்லத்தின் கையாலேயே போடச் சொல்லி இப்போ ஒத்திகை பார்த்திருக்கலாம்.... போர்ட்டர்!''

''வேண்டாம் மாமா! நானே தூக்கிக்கிடறேன். ஒரே பெட்டிதான்'' என்றான் தங்கப்பன்.

முருகேசன் அட்டகாசமாகச் சிரித்தார். ''இத்தனை பெரிய முதலாளியானதற்கப்புறமும் உன்னைப் பழைய பழக்கங்கள் விடமாட்டேங்குது இல்லையா?'' என்று கேட்டவாறே முன்னால் நடந்தார்.

''செல்லம்! நீ எப்படி இருக்கே? அம்மா நலம்தானே?'' என்று விசாரித்துக்கொண்டே அவளுடன் முருகேசனையும் சபாபதியையும் பின்பற்றிச் சென்றான் தங்கப்பன்.

கார் மாம்பலம் போய்க் கொண்டிருக்கையில், ''தம்பி டில்லி போகிறதாகக் கேள்விப்பட்டேன்; என்ன விஷயம்? சதாசாரா?'' என்றார் முருகேசன்.

''அப்படின்னு?''

''என்ன தம்பி, ஒண்ணுந் தெரியாத மாதிரி புருடா விடறே?'' என்றார் முருகேசன் அவனை நம்பாதவராக. ''சதாசார்னு எவன் எந்த அர்த்தத்திலே எதுக்குப் பேர் வைச்சானோ எனக்குத் தெரியாது. சதாசாருக்கு என்னையும் உன்னையும் போன்றவங்களுக்குத் தெரிஞ்ச அர்த்தம் ஒண்ணே ஒண்ணுதானே? இப்ப என்னையே எடுத்துக்க. சதாசார் பண்ணுமே நான் இப்படி அம்பாஸிடர் காரும் பங்களாவுமா வாங்கி உசந்திருக்க முடியுமா? அன்றைக்கு 'என் நிலத்திலே இனிமே கால் வைக்காதே, என் வீட்டிலே இனிமேல் அடி எடுத்து வைக்காதே'ன்னு துரத்தி அடிச்சையே, அதுக்காக உன் மேலே ரொம்பக் கோபப்பட்டேன். ஆனால் அன்றைக்கு எனக்கு நீ எத்தனை நன்மை செய்தேங்கிறது போகப் போகத்தான் புரிஞ்சுது. நம்ப உஷா கிட்டப் போய், மந்திரி நிழலிலே அப்படி ஒண்டிக்கிட்டேனா? அவன் சொன்ன வேலையைச் செய்துக்கிட்டிருந்தேன். உன்னுடைய தொழிலாளிகளிடையேயும் தேர்தல் சமயத்திலே உனக்கு ஆதரவு கொடுக்க முன்வந்த பணப் புள்ளிங்க கிட்டேயும் மற்றவங்களிடமும் உனக்கு எதிராகவே உஷா சொன்னபடியே ரகசியமாப் பிரசாரம் செய்துக்கிட்டிருந்தேன்....''

''அதெல்லாம் எனக்குத் தெரிஞ்ச விஷயம் தான், மாமா!''

''உனக்குத் தெரியாதுங்கிறதுக்காகவா சொல்ல வறேன் நான்? பாக்கிக் கதையைக் கேளு. எப்படியானாலும் அவங்க பதவியிலே இருக்கிறவங்க; நாம போடுகிற கும்பிடு வீணாகாதுன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன். நம்பிக்கை பொய்யாகலே. கொஞ்ச நாளிலே தீனதயாளுவோட கடாட்சம் நம்ப பேரிலே விழுந்தது. சரியான இடத்திலே, சரியான நேரத்திலே, சரியான ஆசாமிகிட்டே, அவர் சரியான ஒரு வார்த்தையைப் போட வேண்டியதுதானே? அப்புறம் நாம் முன்னுக்கு வர எல்லாம் தன்னாலே நடக்குது!

''மவுண்ட் ரோட்டிலே ஒரு பிளாட் கிடைச்சது தம்பி, அதிலே அல்ட்ரா மாடர்னா ஒரு தியேட்டர் எழுப்பினேன். அதன் பக்கத்திலேயே ஒரு பில்டிங் கட்டினேன். அதை ஒரு சர்க்கார் காரியாலயத்துக்காக வாடகைக்கு எடுத்துக்கிட நம்ப மினிஸ்டரே தனுக்கா ஏற்பாடு செய்துட்டாரு. வாடகையைச் சொன்னா நீ மயக்கம் போட்டு விழுந்துடுவே! அந்த வாடகையை அப்படியே வட்டிக்கும் அசலுக்குமா மாதா மாதம் கொடுத்திடறேன். தியேட்டரிலே எனக்குத் தாராளமாக ஒரு சம்பளம் போட்டுக்கிட்டிருக்கேன். மேற்கொண்டும் நல்ல வரும்படி. இன்னும் இரண்டு வருஷங்களிலே என் கடனெல்லாம் தீர்ந்துடும். ரொம்ப லாபம் இல்லாம கவனிச்சுக்கிடறேன். அப்புறம் இன்கம் டாக்ஸுக்கு எவன் அழறது? துணிஞ்சு இந்தக் காரியத்தில் நான் இறங்கியபோது பைசா விடாமெ எண்ணியிருந்தாக்கூட என்னிடம் ஐந்நூறு ரூபாய் தேறியிருக்காது. இப்போ என் மதிப்பு என்ன தெரியுமா? பதினஞ்சு லட்சம்! எதுக்குச் சொல்ல வந்தேன், என்னை நம்பி எப்படி, எவன், ஏன் கடன் கொடுத்தான்? சதாசார் பண்ணலேன்னா இதெல்லாம் நடக்குமா?''

'என் உறவை அப்போது துண்டித்துக் கொண்டாயே, இப்போது என் உயர் நிலை

வருகிற ஜனவரி மாதம் மகர ஸங்கராந்தி யன்று ஒவ்வொருவரும் காலையில் ஸ்நானம் செய்துவிட்டுச் சமீபத்திலுள்ள விஷ்ணு கோவிலுக்குச் சென்று கோபுரத்வாரத்தின் வெளியில் வடக்கு முகமாக உட்கார்ந்துகொண்டு துளஸி தீர்த்தத்தினால் மூன்று முறை ஆசமனம் செய்து பகவானின் பாதங்களை நினைத்துக் கொண்டு, "நாராயண" என்னும் பகவந்நாமத்தை மூன்று தடவை மனத்தில் நினைத்துக் கொண்டு, மறுநாள் முதல் தனது வாழ்நாள் முழுவதும் தினமும் காலையில் ஸ்நானம் செய்துவிட்டு, நூற்றெட்டு தடவை இந்த நாமத்தை ஜபித்து வரவேண்டும். பகவானிடம் பக்தி நிறைந்த ஒவ்வொரு ஹிந்து குடும்பத்தின் வம்சத்தினரும் இந்த நாம ஜபத்தை ஜன்ம விரதமாகக் கொள்ள வேண்டும்.



இந்த யுத்த காலத்தில் ஜபம் முடிந்தவுடன் விசேஷமாக பகவானை உத்தேசித்து நமஸ்காரம் செய்து நாட்டிற்கு ஜயமும், சமாதானமும், சுபிக்ஷமும், லோக க்ஷேமமும் உண்டாக பகவானைப் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டுமென்றும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

யைப் பார்!" என்று குத்திக் காட்டுவதற்காக அவர் இப்படியெல்லாம் பேசவில்லை என்றும், அகப்பட்டவர்களிட மெல்லாம் இப்படிப் பெருமை அடித்துக் கொண்டு தம்மைச் சிறுமைப்படுத்திக் கொள்ளும் இயல்பினர் தான் என்றும் தங்கப்பனுக்குப் புரிந்தது.

"லஞ்சம் கொடுப்பதைச் சொல்றீங்களா சதாசார் பண்ணுவதென்று?"

"அத்துடன் மோசடியையும் சேர்த்துக் கொள் தம்பி! ஃப்ராடு, அத்தனையும் ஃப்ராடு!"

'என்ன துணிச்சல் இந்த மனிதருக்கு?' என்று மலைத்தான் தங்கப்பன். 'அந்த நாளிலேயே என் தாயாரை ஏமாற்றி, பொய்க் கணக்கு எழுதி நிலத்திலிருந்து வரும் வருமானத்தின் பெரும் பகுதியை விழுங்கி ஏப்பம் விட்டவர்தானே?'

"என்ன செய்யலாம்?" என்று மிகுந்த மனக் கசப்புடன் பேசினான் தங்கப்பன். "இன்றைய ஆட்சியில் லட்சுமி தேவியே சுதந்திரம் இழந்து விட்டாள்! ஆட்சியாளர் சொல்கிற இடத்துக்குத்தான் இவள் போய்ச் சேர வேண்டும்!"

"தம்பி! அழகாகச் சொல்லிட்டே! நூற்றிலே ஒரு வாக்கு! 'லட்சுமி கடாட்சம் பின்னே, மந்திரி கடாட்சம் முன்னே' என்றுகூட 'பிஸினஸ்' வட்டாரத்திலே ஒரு புதுமொழி உருவாகியிருக்கு. டில்லியிலே தினதயாளுவிடம் தான் தண்டம் சமர்ப்பித்ததாகச் சொல்லு!"

"இந்த வருஷத்திலே நான் டில்லிக்குப் போவது இது மூன்றாவது தடவை. பெர்மிட்டும், லைசென்ஸும் ஆட்சி நடத்துகிற இந்தக் காலத்திலே எவன் டில்லிக்குப் போகாமல் தொழில் நடத்த முடியும்? எந்த விமானத்திலே இடங்கள் காலியாக இருந்தாலும் டில்லிக்குப் போகிற 'பிளேன்'களில் மட்டும் எப்பவும் எல்லா ஸீட்டுகளும் இரண்டு வாரங்களுக்கு முன்னதாகவே 'புக்' ஆகிவிடுகின்றனவே! பம்பாயிலிருந்து ஒரு நாளைக்கு மூணு விமானங்கள் டில்லிக்குப் புறப்படுகின்றன. அதுவும் போதவில்லை. எத்தனை கம்பெனிகள் டில்லியிலே நிரந்தரமா ஹோட்டல்களில் அறைகள் 'ரிஸர்வ்' செய்து வைத்திருக்கின்றன. டில்லியில் ஒரு விசேஷப் பிரதிநிதி இல்லாத பெரிய ஸ்தாபனம் ஏதேனும் இருக்க முடியுமா?" தங்கப்பன் வருத்தம் மிகப் பேசினான்.

"தம்பி! என்றைக்குக் கிளம்பறே நீ? எத்தனை மணிக்குப் பிளேன்? நான் ஏர்போர்ட்டுக்குக் கார் எடுத்துக்கிட்டு வரேன்."

"உங்களுக்கு ஏன் தொந்தரவு? நான் ரயிலில்தான் போகப் போகிறேன்."

"அதுவும் நல்ல யோசனைதான். ஏ. ஸி.யிலே மூணு நாள் நிம்மதியா ஒரு 'ஹாலிடே'யை அனுபவிச்சுக்கிட்டுப் போகலாம்."

"நான் பஸ்ட் கிளாஸிலேதான் போகப் போகிறேன்" என்றான் தங்கப்பன்.

"நான்தான், நீ 'போர்ட்டர் எதுக்கு'ன்னு கேட்டபோதே சொல்லிட்டேனே; உனக்கு இன்னும் பழைய சிக்கனப் புத்தியெல்லாம் மாறலேன்னு! ஏன் தம்பி, நம்மைப் போல் பெரிய மனுஷங்க இந்த மாதிரி சில்லறையை எண்ணிக்கிட்டு உட்கார்ந் திருக்கலாமா? சேச்சே! நீ இப்படி நடந்துக்கிறது எனக்கு வெட்கமா யிருக்கு!"

"நம்மைப் போல் பெரிய மனிதர்கள்" என்று அவர் தம்மையும் அவனுடன் சேர்த்துக் கொண்டு பேசியது தங்கப்பனுக்கு என்னவோ போலிருந்தது. 'சீச்சீ! இவன் அந்த அளவுக்கு என்னிடம் உரிமை கொண்டாடும் விதத்தில் அவ்வளவு தாழ்ந்தா போய்விட்டேன் நான்?'

''மாமா! தயவுசெய்து கொஞ்சம் செல்லத்தையும் சபாபதி மாமாவையும் பேச விடுங்க; நீங்களும் நானுமே வம்பளந்துகிட்டிருந்தா எப்படி?'' என்று அவன் கேட்டுக் கொண்டான்.

கூடவே, 'இன்றைக்கு நீ அனுபவிப்பது போன்ற உழைப்பையே உணராமல், உயருகிற நிலைக்குச் சீக்கிரமே முடிவு காலம் நெருங்குகிறது' என்றும் நினைத்துக் கொண்டான் தங்கப்பன். அப்புறம், 'இவரைச் சொல்லி என்ன பயன்?' என்ற எண்ணமும் அவனுள் எழுந்தது. 'ஏன், நானே முன்னேற முடியாமல் தவித்து இறுதியில் தகிடுதத்தங்களில் இறங்கிய பின்னர்தானே இத்தனை வேகமாகப் பொருள் ஈட்டத் தொடங்கி இருக்கிறேன்? அபரிமிதமான வரிகளாலும் கட்டுப்பாடுகளாலும் செயல் திறன், அறிவுத் திறன், ஒழுக்கத் திறன் ஆகியவற்றுக்குப் பொருளாதார ரீதியில் மதிப்பே இல்லாமல் செய்திருக்கிறார்களே? ஏமாற்றினால்தான், லஞ்சம் கொடுத்தால்தான் பணம் பண்ணலாம் என்ற நிலைமை உருவாகி விட்ட பின் இந்தச் சமூகம் எப்படி உருப்பட முடியும்? என்னையும் முருகேசனையும் போல் எத்தனை பேர்கள் இந்நாட்டில் இருப்பார்கள்? சிறிதும் பெரிதுமான எத்தனை தொழிலகங்களிலும் வர்த்தக நிலையங்களிலும் இந்த அருவருக்கத் தக்க நிலை பரவியிருக்கும்? இதை எப்பாடு பட்டேனும் நல்லதோ, கெட்டதோ, எந்த முறையைக் கையாண்டேனும் மாற்றி யமைக்க வேண்டும்.

'இங்கு நன்றாக வேரூன்றி விட்ட இந்த ஊழல்களையும், அதற்குக் காரணமானவர்களையும் ஜனநாயக முறையில் அகற்ற முயல்வது வீண் பிரயாசை. ஆனாலும் எப்படியேனும் இதைச் செய்தே ஆகவேண்டும். அதற்காக எந்தத் தியாகத்தையும் புரிய வேண்டியதுதான். ஜனநாயகத்தையே தியாகம் செய்ய வேண்டுமானாலும் சிறிதும் தயங்காமல் அதற்கும் தயாராக வேண்டியதுதான்!'

(தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

# பின்னைப் புதுமைக்கும்....

தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி

—திருவாசகம்

இவ்விதழ் அட்டையில் சிவபெருமானின் திருக்கோலத்தைக் காண்கிறோம். அண்டபகிரண்டமெலாம் நீக்கமற நிறைந்திருப்பவன் இறைவன் என்பதை உணர்த்துவது போல் சிவபெருமானின் உருவம் நமது அட்டை முழுவதும் வியாபித்திருக்கும் வண்ணத்தைக் காண்கிறோம்.

அத்துடன் இந்த இதழ் வெளியாகும் திருவாதிரை நாளையும் நினைக்கையில் இயல்பாகவே எண்ணங்கள் யாவும் ஆனந்தக் கூத்தனிடம் செல்கின்றன. சிதம்பரத்திலே மெய்யடியார்கள் அந்த ஆடிய திருவடியை மெய் சிலிர்க்கக் கண்டு தொழும் காட்சி நினைவுத் திரையில் எழுகிறது. அத்துடன் மணிவாசகப் பெருமானின் மேற்குறிப்பிட்ட அடிகளும் நினைவுக்கு வருகின்றன. தில்லைமூதூரில் (சிதம்பரத்தில்) மட்டும் சிவபெருமான் நடனமாடவில்லை. ஒவ்வோர் உயிரிலும் அவன் நட்டம் பயில்கிறான். — இன்றுமட்டுமல்ல; என்றென்றும்; அனவரதமும்.

இதுதான் மாணிக்க வாசகப் பெருமானின் தனித்தன்மை. தில்லையில் நடராஜ மூர்த்தியின் முன் நிற்கையிலே அவர் உள்ளம் சர்வ வியாபியை நினைவு கூருகிறது. சர்வ வியாபியின் நினைவு எழுகையில் எங்கோ ஒரு மூலையில் ஓர் உருவத்திலோ உயிரிலோ இறைவன் எழுந்தருளும் பாங்கை நினைத்து உருகி விடுகிறது.'

அதனால்தான் அவர் பாடல்களில் பக்தியைக் கண்டு ரஸிப்பவர்களும், பகுத்தறிவுக்குப் பிரதானம் கொடுப்பவர்களும் இருவருமே ஈடுபடுகிறார்கள். இந்த அம்சத்தை அவரது திருவெம்பாவையிலும் காண்கிறோம்.

**கூத்தன் இவ் வானும் குவலயமும் எல்லோமும்**
**காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி**

என்று பாடலைப் பாடி வரும்போது சிவபெருமான் திருக்கூத்தை நம் கண் முன்னேயே கண்டு மெய் புளகித்து விடுகிறோம்.

அதே சமயம், சந்திர மண்டலத்தைப் பிடிக்க முயலும் விஞ்ஞானிகள் வான வெளியை ஆராய ஆராய இன்னும் என்னவெல்லாமோ புதுமைகள்தான் கிடைக்கின்றன என்று கூறுகின்றனர். இதையே பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு எவ்வளவு துல்லியமாக உணர்ந்து, மாணிக்கவாசகப் பெருமான் திருவெம்பாவையில் பக்தியுடன் பாடுகிறார்!

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்
பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப்
பெற்றியனே!

'பேர்த்தும் அப் பெற்றியனே!' — எவ்வளவு கணக்காகச் சொல்லி விட்டார்!

இவ்வடிகளைப் படிக்கும்போது காலத்தையும் இடத்தையும் கடந்து நிற்கும் தன்மையன் கடவுள் என்பதைச் சந்தேகமறச் செய்து விடுகிறார்.

இம் மார்கழி மாதத்திலே திருப்பாவையும் திருவெம்பாவையும் தேசமெங்கும் முழங்கச் செய்ய வேண்டும் என்று பணித்தார்கள் காமகோடி ஆசாரியர்கள். பக்திக்கும் பகுத்தறிவுக்கும் ஈடுகொடுக்கும் இந்த இரண்டு பற்றுக் கோல்களைப் பற்றிக் கொண்டு வெகு எளிதிலே பற்றற்றான் திருவடி அமுதத்தைப் பருகிவிடலாம். இதுதான் தமிழனாய்ப்பிறந்த ஒவ்வொருவனின் பெரும் பாக்கியம்.

# உங்களுக்காகத்தான்

— மயிலை மூர்த்தி



**மீ**னு இயந்திர கதியில் தன் துணிமணிகளையெல்லாம் எடுத்துப் பெட்டியில் அடுக்கிக் கொண்டிருந்தாள்.

தன் இச்சை என்று ஒன்று இல்லாமல், தன்னை ஓர் உணர்ச்சியுள்ள இனமாகவே மதிக்காமல், வெறும் உறவை மட்டும் ஏற்படுத்தி, அதனால் ஏற்பட்ட கடமைக்காக ஊருக்காக வாழ்ந்து வந்த அந்த வாழ்க்கையை இயந்திரத்துக்கு ஒப்பிடுவதை அவள் ஆட்சேபிக்கப் போவதில்லை.

காலையில் கணவன் கூறிச் சென்ற வார்த்தைகள் அவள் காதில் இன்னும் ஒலித்துக்கொண்டிருந்தன.

எந்தப் பெண்ணுக்குத்தான் பிறந்த வீட்டுக்குச் செல்வதில் விருப்பம் இருக்காது? ஆனால், ரத்தினச் சுருக்கமாக, அவள் செல்ல வேண்டியதன் நோக்கத்தை, அவசியத்தை ராகவன் தெரிவித்தபோது, திகைத்தாள் அவள். மௌனமாகக் கண்ணீர் உகுப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய இயலவில்லை, அவளால்.

ஒரு வாரமாகக் கணவன், மனைவியிடையே குமுறிக் கொண்டிருந்த எரிமலை, அன்று காலை வெடித்தே விட்டது. தன்னுடைய அவசரத் தேவையான முந்நூறு ரூபாய்க்காக மீனு தன் பிறந்த வீட்டவர்களிடம் சென்று எப்படியாவது பணத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்பது ராகவனுடைய தீர்மானம்.

பிறந்த வீட்டில் போட்டிருந்த எல்லா நகைகளையும் ஒவ்வொன்றாய், இதே போன்று 'அவசரங்களுக்காக' ஏற்கனவே ராகவனிடம் சமர்ப்பித்து விட்டாள் மீனு. நினைவிலிருந்து நீங்காத அந்தப் பழைய சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அவள் மனத் திரையில் நிழலாடின.

நான்கு வருஷங்களுக்கு முன் அவள் ராகவனைக் கைப்பிடித்த சமயம் எல்லாப் பெண்களையும் போல் பெரிய பெரிய இன்பக் கோட்டைகளையெல்லாம், தன்னுடைய சிறிய உள்ளத்திலே உருவாக்கி, அந்தக் கனவோடு இன்ப வெள்ளத்திலே நீந்தி, இல்லறத்தில் கால் வைத்தாள் அவள். எந்த ஒரு விஷயத்திலும் சிறு மனத்தாங்கல் ஏற்படுவதைக் கூட நினைக்க முடியாத ஒரு நிலை.

இரண்டு வருடங்களாகப் போற்றி, பாதுகாத்த அந்த இன்பக் கோட்டையிலே எங்கோ ஒரு சிறு விரிசல். இனம் புரியாத ஒரு கலக்கம்.

இரவு இருவரும் சேர்ந்து சாப்பிடுவது என்ற நிலை மாறி, நேரம் கழித்து வீடு திரும்பும் கணவனை, காத்திருந்து வரவேற்று அவர் சாப்பிட்ட பின் அவள் சாப்பிடுவது, வழக்கமாக மாற ஆரம்பித்தது.

பிரிவு, தனிமை, சுயநலம் — இவையெல்லாம் கணவன் மீது கோபத்தைத்தான் ஏற்படுத்தின அன்று. எண்ணச் சலனத்திலே மற்றொரு கோணம்.

கையில் கதம்பப் பொட்டலத்துடன் வீடு திரும்பிய கணவனை ஆர்வத்தோடு வரவேற்கிறாள் அவள்.

''என்ன இவ்வளவு சீக்கிரம்?''

அவர் பதில் சொல்வதற்கு வேண்டிய வினாடி நேரத்துக்குள் கோடி இன்பக் கற்பனைகளில் ஈடுபடுகிறது அவள் மனம்.

''மீனு, சீக்கிரம் டிரஸ் பண்ணிக்கொண்டு புறப்படு. எல்லாம் வழியில் சொல்கிறேன்'' என்கிறார் அவர்.

அடுத்த பத்து நிமிஷங்களில் தயாராகிறாள் மீனு. இருவரும் டிபனைச் சாப்பிட்டுவிட்டு அன்று வெளி வந்திருந்த அந்த ஆங்கிலப் படத்துக்குச் சென்றனர். வழியெல்லாம் ஏதேதோ பேசினர். படம் முடிந்தது. ஹோட்டலில்தான் இரவுச் சாப்பாடு.

நிறைந்த மனத்தோடு வீடு திரும்பினர் இருவரும்.

வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு அந்த அறையிலே நுழைந்த மீனு, தலையில் துண்டை இறுகக் கட்டிக் கொண்டு, வேதனையில் முனகும் தன் கணவனைக் கண்டதும் திடுக்கிட்டாள். பதற்றத்தோடு அவர் அருகில் சென்று உடலைத் தொட்டுப் பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை. அவளுடைய வற்புறுத்தலின் பேரில் நீண்ட நேரத் தடுமாற்றத்துக்குப் பிறகு உண்மையைக் கூறினார் அவர்.

''ஒன்றுமில்லை மீனு, என் ஆப்த நண்பர் மூர்த்தி ஒரு பெரிய சங்கடத்தில் இருக்கிறான். அவன் மனைவியைப் பிரசவத்துக்காக நர்ஸிங் ஹோமில் சேர்த்து விட்டான். கையில் பணமில்லாமல் அவன் தவிப்பதைப் பார்த்து, எப்படியாவது அவனுக்கு நாளை நூறு

பொங்கல் விசேஷ விற்பனை !

புதுமாதிரி

# காஞ்சீபுரம், பனாரஸ் பட்டு சேலைகள்

காஞ்சீபுரம் விலைக்கே கிடைக்குமிடம்:

# P.B. லக்ஷ்மணஸா & பிரதர்ஸ்

ஏர்-கண்டிஷண்ட் ஷோ-ரூம்

PHONE: 86966

**பட்டு ஜவுளி உற்பத்தியாளர்கள், வியாபாரிகள்**
109, ஐயா முதலி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

தயாரிப்பு கிளை: 15. மேட்டுத்தெரு, காஞ்சீபுரம்.

---

அவளுடைய சமையலில்
அப்படி என்ன விசேஷம்!



# சுதா

உபயோகத்தினால்
ருசி அதிகரிக்கிறது

**அவர் முகத்தில் மகிழ்ச்சி புன்னகை**

சுதா சமையலுக்கு அதிக ருசியளித்து
இல்லத்தில் இன்பம் நிலவச் செய்கிறது

இப்பொழுது 2 & 4 கிலோகிராம்
கவர்ச்சியான டின்களில் கிடைக்கும்

**கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்**
ஹைட்ரோஜனேஷன் பாக்டரி டிவிஷன்
கோழிக்கோடு - 5, கேரளா

ஐம்பது பைசா தபால் தலைகள் அனுப்பி சுதா சமையல் குறிப்பு என்ற புத்தகத்தை பெற்றுக்கொள்ளுங்கள் மேற்படி புத்தகம் இப்பொழுது ஆங்கிலம், தமிழ், கன்னடம் மற்றும் மலையாளம் ஆகிய மொழிகளில் கிடைக்கும்

டீலர்கள் : சென்னை நகரம், வட-ஆர்க்காடு, செங்கற்பட்டு, பாண்டிச்சேரிக்கு : மெஸர்ஸ் லாலா கோபி கிருஷ்ண கோகுல்தாஸ், 114, தங்கசாலைத் தெரு, சென்னை-1 ○ திருச்சி ஜில்லாவுக்கு : மெஸர்ஸ் கிருஷ்ணா டிரேடர்ஸ், அருணாசல மன்றம், மெயின் கார்டு கேட், திருச்சிராப்பள்ளி ○ திண்டுக்கல் நகரம், நிலக்கோட்டை, மேலூர் மற்றும் திருமங்கலம் தாலுகா & மதுரைக்கு : மெஸர்ஸ் வாசவி ஸ்டோர்ஸ், 7, கச்சேரி தெரு, திண்டுக்கல். ○ திண்டுக்கல் நகரம், பழனி, கொடைக்கானல் மற்றும் பெரியகுளம் தாலுக்காக்கள் : மெஸர்ஸ் சந்திரா டிரேடிங் ஏஜன்ஸிஸ், 72, கச்சேரி தெரு, திண்டுக்கல். ○ நீலகிரி மற்றும் கோயமுத்தூர் ஜில்லாக்கள்: டிஸ்டிரிபியூஷன் ஸ்டோர்ஸ், ராஜா தெரு, கோயமுத்தூர்

---

பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

**ஆரோக்கியத்திற்கும் பலத்திற்கும்**

ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட் மதராஸ்-17

ரூபாய் தருவதாக வாக்களித்து விட்டேன். அந்த விஷயம் இப்போதுதான் நினைவுக்கு வந்தது. நாளைக் காலைக்குள் நூறு ரூபாய்க்கு எங்கு போவது?'' வேதனையோடு முகத்தைத் திருப்பிக் கொண்டார் அவர். அப்போது அவன் கூறிய பதில் கூட, பசுமையாக இன்னும் அவன் நினைவிலே நின்றது.

''இதற்காகவா கவலை? நான் இருக்கிறேன் உங்களுக்கு உதவி செய்ய. நல்ல காரியத்துக்கு முதலில் உதவுங்கள். என்றாவது ஒருநாள் நமக்கும் அதே நிலை ஏற்பட்டால், ஆண்டவன் உதவிக்கு யாரையாவது அனுப்பி வைப்பார்.''

காலையில் எழுந்ததும் சொன்னதைச் செயல்படுத்தினான் அவன். கையிலிருந்த தங்க வளையல்களில் ஒன்று அவர் கைக்கு மாறியது.

அடுத்தடுத்து, இதே போன்று நண்பர் பெண் கல்யாணத்துக்காக, ஏழைச் சிறுவனுக்குப் படிப்பு வசதி, மலிவாக வந்த நிலத்தை வாங்கிப் போடுவது போன்ற நல்ல காரியங்களுக்காகத் தன்னிடம் உள்ள நகைகள் ஒவ்வொன்றாகப் போக ஆரம்பித்தபோதுகூட ஏன், எதற்கு என்று கேட்கவில்லை அவள். நல்ல காரியங்கள் என்றாவது பலன் தரும் என்ற நம்பிக்கைதான் அதற்குக் காரணம்.

இனிமேல் கொடுப்பதற்கு அவளிடம் ஒன்றும் இல்லை என்ற நிலையில்தான், அவனுடைய சித்தப்பா நீண்ட நாட்களுக்குப் பிறகு அவனைப் பார்க்க வந்தார். வரும் வழியில் அவரை ஆபீஸிலேயே சந்திக்க விரும்பிச் சென்றபோது, அவர் அவசரம் அவசரமாக டாக்ஸியில் ஏறிக் கொண்டிருந்தாராம். அவருடன் இரண்டு, மூன்று பேர்கள்.

சித்தப்பாவைப் பார்த்துவிட்டு ''நீங்கள் வீட்டுக்குப் போங்கள், வருகிறேன்'' என்று கையாட்டிவிட்டுப் போய் விட்டாராம்.

பஸ் ஸ்டாண்டில் சித்தப்பா நின்றுகொண்டிருந்தபோது, அவருடனேயே நடந்து வந்த, அதே கம்பெனியைச் சேர்ந்த ஊழியர் ஒருவர்தான் விஷயத்தைச் சொன்னாராம்.

''உங்க பையனு சார், ராகவன்? உங்களைப் பார்த்து நான் மிகவும் அனுதாபப்படுகிறேன் சார். உங்களைவிட 'ஜெண்டி' பந்தயம் அவ்வளவு முக்கியமாகப் போய்விட்டது அவனுக்கு. வர வர ஆளே மாறிப் போய் விட்டான், சார்.''

அவர் பேசி முடிப்பதற்குள் பஸ் வந்துவிடவே சித்தப்பா வந்துவிட்டாராம்.

எல்லாவற்றையும் அவளிடம் சொல்லி விட்டு அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார் சித்தப்பா. என்ன நினைத்துக்



கொண்டாரோ, அன்று இரவு வண்டிக்கே கிளம்பி விட்டார்.

சித்தப்பா தலை மறையும்வரையில் அவர் வீடு வந்து சேரவில்லை.

திடீரென்று நினைவுச் சலனத்திலே ஒரு திரை; ஒரு சூன்யம்.

மீரா பெருமூச்செறிந்தாள். இப்போது எல்லாமே காலங் கடந்த செய்கையாகி விட்டது. அவருக்கு வேண்டியது பணம், பணம், பணம் ஒன்றுதான். குமுறிக் குமுறி அழுவது ஒன்றுதான் அவளால் செய்ய முடிந்தது இப்போது.

'பிறந்த வீட்டுக்குப் போக வேண்டுமாம்!' நினைக்கையிலேயே சிரிப்புத்தான் வந்தது. அந்த நிலையிலும்.

'பிறந்த வீடு' என்று உலக ரீதியில் அவள் கூறிக்கொள்ள வேண்டுமானால், மதுரையில் உள்ள அவளுடைய ஒன்றுவிட்ட சகோதரன் வீட்டைத்தான் அவள் குறிப்பிட வேண்டும். ஏதோ இருந்ததைக் கொண்டு கௌரவமாக அவளை ராகவன் கையில் பிடித்துக் கொடுத்த அந்தச் சித்தப்பாவும் மூன்று மாதங்களுக்கு முன் காலமாகி விடவே, அவருடைய ஒரே மகனான அந்தஅண்ணனும், அவன் மனைவியும் தான், அவளுக்குப்பிறந்தவீட்டு உறவினர்கள். அவர்களிடமா உதவியை எதிர்பார்ப்பது?

ஆனால் பற்றற்ற இயந்திர கதியில் இயங்கிய, இந்த நிலையை நீடிப்பதை விட ஓர் இடமாறுதலை வரவேற்றது அவள் உள்ளம்.

மாலையில் ராகவன் வீடு திரும்பும்போதே டாக்ஸியை அழைத்து வந்துவிட்டான். எல்லாம் மின்னல் வேகத்தில் நடந்தேறின.

திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் புறப்பட்டுக் கொண்டிருந்தது. பெண்கள் வண்டியில் அவளை ஏற்றிவிட்டு, ராகவன், வண்டியோடு சற்றுத் தூரம் நடந்து வந்தான்.

''உங்கள் உடம்பை...''

எஞ்சினிலிருந்து கிளம்பிய அலறல் சப்தத்தில், வார்த்தைகள் வாயிலேயே தங்கி விட்டது போன்ற ஓர் உணர்வு. தூரத்தில் அவன் சென்று மறையும்வரையில் பளபளத்த கண்ணீருக்கிடையே, அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் மீரா.

இதே மாதிரி வாழ்க்கையில் எவ்வளவோ இன்னல்களை ஏற்று, மனத்தில் எண்ணற்ற குழப்பங்களோடு பிரயாணம் செய்த அவ்வளவு பேரையும் சமமாகப் பாவித்துத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு அமைதியாக ஓடிக் கொண்டிருந்தது அந்தத் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ். இயந்திரமாக இருந்ததால் அதற்கு உணர்ச்சி யில்லை. ஆனால் மனிதர்களிலும் உணர்ச்சியற்ற இயந்திரங்கள் அமைதியாக இயங்குவதைக் கண்டாள் மீரா.

இரண்டு மாதங்கள் உருண்டோடின.

மனைவியிடமிருந்து ஒரு தகவலும் கிடைக்காத ராகவன் முகத்தில் இரண்டு வருஷங்களுக்குப் பிறகு முதன் முறையாகக் கவலையின் சாயல் தோன்றியது. தன்னுடைய சூழ்நிலை மாற ஆரம்பித்ததை அவனே உணர்ந்த சமயம் அது. வாங்கிய சம்பளத்தை அப்படியே பிடுங்கிக்கொள்ளும் கடன்காரர்கள் போக மீதும் வெகு சொற்பத் தொகை அவனுக்கே போதவில்லை. இந்த நிலையில் நண்பர்களை எப்படிக் கவனிப்பது? கிண்டியின் பக்கம்தான் எப்படித் திரும்புவது?

குளம் வற்றியதும் பறந்துவிடும் நாரைகள் போல் சதா அவனைச் சூழ்ந்து அவன் சுகங்களில் பங்கு கொண்ட நண்பர் குழாம், கொஞ்சம் கொஞ்சமாகக் கலைய ஆரம்பித்தது. ஆப்த நண்பர்கள் என்று சொன்னவர்கள் கூட அருகே வரப் பயந்தனர்.

தன் நிலையை உணர்ந்த ராகவன் அதே சமயம் முதல் தடவையாகத் தன் மனைவியின் நிலையை உணர ஆரம்பித்தான். ஓயாத சிந்தனையின் பலனாக அவன் உடல் நலம் நிஜமாகவே கெட ஆரம்பித்தது. ஆரம்பத்தில் பணத்துக்காக 'உடல் நலக் குறைவு' என்று நடித்தது அவன் நினைவுக்கு வந்தது. நினைத்ததை வெளியே சொல்ல முடியாத ஒரு நிலை. அமைதியை நாடி, அலுவலகத்தில் விடுமுறை எடுத்துக் கொண்டு வீட்டிலேயே தங்கிவிட்டான், ராகவன். மனைவிக்குக் கடிதம் எழுத சுய கௌரவம் குறுக்கே நின்றது.

அன்று அந்த நிலையில்தான் தபால்காரர் அவனுடைய பெயருக்கு வந்திருந்த கவரைக் கொடுத்துவிட்டுப் போனார். கடிதத்தை ஆவலுடன் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான் ராகவன்:

''மதுரைக்குப் புறப்பட்ட நான் திருச்சியில் பள்ளி ஆசிரியையாகப் பணி ஏற்றது எப்படி என்பதை எவ்வளவோ முயன்றாலும் விளக்க முடியவில்லை. ஏதோ ஒரு வேகம். கடவுள் துணையும் இருந்தது என்பதை மட்டும் கூறிக் கொள்கிறேன்.

''எனக்கு அபயக் கரம் நீட்டி, ஆதரவு கொடுத்த என் தோழி விமலாதான், நான் வேலை பார்க்கும் இந்த அநாதைக் குழந்தைகள் ஆசிரமத்தின் தலைவி. அழகைக் கொண்டு, இயற்கையால் வஞ்சிக்கப்பட்ட அவளுக்கு ஆண்டவன் காட்டிய வழி அது.

''என்னைத் திடீரென்று சந்தித்ததில் அவளுக்கு எவ்வளவு பெருமை தெரியுமா? 'உண்மையைச் சொல்லடி. எங்கே இவ்வளவு தூரம்? உங்களவருக்கு இந்தப் பக்கம் எங்காவது மாற்றலாகி விட்டதா?'

''கையைப் பிடித்துக் கொண்டு அவள் மகிழ்ச்சியோடு குலுக்கும்போது, என் மனம் கூடத்தான் துள்ளியது. உண்மையிலேயே அந்த நிலையைக் கற்பனை செய்து, ஆனால் ஏற்கனவே தயாரித்து வைத்திருந்த உண்மையைத்தான் சொன்னேன், அவளிடம்.

''அவரைத் திடீரென்று வடக்கே மாற்றி விட்டார்கள், விமலா. வருவதற்குச் சில மாதங்கள் ஆகும். அதுவரை நீ என்ன செய்வாய் என்று கேட்டார். நான் உன்னைப் பற்றிச் சொல்லி, அவர் வரும்வரை உன்னுடன்தான் தங்கப் போகிறேன் என்று சொல்லிவிட்டேன். திடீரென்று வந்து உன்னை வியப்பில் ஆழ்த்த வேண்டும் என்ற எண்ணத்தினால்தான் கடிதம் போடவில்லை' என்றேன்.

''மகிழ்ச்சியோடு துள்ளினாள் அவள். இங்கு நீ எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் தங்கலாம், மீரா. உனக்குப் பொழுது போக்குக்காக வேலை வேண்டுமானாலும் தாற்காலிகமாகத் தருகிறேன் என்றாள்.

''விஷயத்துக்கு வருகிறேன். இரண்டு மாத உழைப்பில் நூறு ரூபாய்வரை சேர்த்து விட்டேன். இன்னும் ஒரு மாதம்தான் வேலை இருக்கும். அதற்குள் எப்படியும் உங்களுக்குத் தேவையான தொகையைச் சேமித்துவிடுகிறேன். மறுபடியும் நான் கடிதம் போட்டதும் நீங்களே வந்து என்னை அழைத்துச் செல்ல வேண்டும், என் தோழி விமலாவுக்காக. அவள் உங்களைப் பார்க்க மிகவும் ஆவலாக இருக்கிறாள்.''

கடிதத்திலிருந்து தலையை நிமிர்த்தினான் ராகவன். 'அப்பப்பா, பெண்மைக்கு அவ்வளவு சக்தியா?' விழியோரம் துளிர்த்த நீரைச் சுண்டிவிட்டுத் தொடர்ந்தான்.

''கடைசியாக ஒரே ஒரு வேண்டுகோள். அண்ணாவிடமிருந்து வரும் கடிதங்களில் என்னைப் பற்றி விசாரித்தால், நான் அங்கு சௌக்கியமாக ஒரு குறையும் இல்லாமல் இருப்பதாக எழுதிவிடுங்கள். உங்களுக்காகத் தான் சொல்கிறேன். மீனு.''

'மீனு!' — ராகவன் கத்தியே விட்டான்.

கடமையில் தவறிவிட்டானா அவன்? மனத்தின் அடித்தளத்திலே வெடித்துக் கிளம்பிய அந்தக் கேள்வி, பார்க்குமிடமெல்லாம் எதிரொலித்தது.

இல்லை! இல்லை, இல்லவே இல்லை!—

பிரமை பிடித்தவன் போல் தனக்குத் தானே பேசிக் கொண்ட ராகவன், பரபரப்போடு பெட்டியில் துணி மணிகளைத் திணிக்க ஆரம்பித்தான். ஆம், இயந்திரமாக இயங்கியவன், மனிதனாக மாறிவிட்டான். — எல்லாம் அவளுக்காகத்தான்.

## மார்கழித் திருநாள்

கணகணெனக் கோவில்தோறும் மணியினோசை முழங்குது;—''ஆதி
காலைப்பூசை வேளையிது; கைதொழுவீர்!'' என்குது!
துணைகளோடு பறவையினம் தொடரவானில் கிளம்புது;—மனம்
துள்ளிவரும் மகிழ்ச்சியுமே கடர்முகத்தில் ததும்புது!

பாட்டிவாயும் திருவெம்பாவை பாராயம் ஆக்குது;—தெருப்
பாலுக்காரன் வருமுன்னமே பஜனைச்சத்தம் கேட்குது!
கூட்டிமெழுகி வீட்டிலக்கா கோலமும்தான் போடுது;—அந்தக்
கோலமெல்லாம் பரங்கிப்பூதான் குலுங்கிக்குலுங்கி ஆடுது!

பக்தர்கூட்டம் தெருமுனையில் பாடிக்கொண்டே செல்லுது;—கொட்டும்
பனியிலோவாய் மேலும் கீழும் பற்களைத்தான் மெல்லுது!
முத்துகூடப் புல்மீதெல்லாம் மெத்தஇறைத் திருக்குது;—மின
முத்தத்திலே அத்தனையும் மொத்தம்கண்ணைப் பறிக்குது!

சாவடியில் ராமநாம சங்கீர்த்தனம் ஒலிக்குது;—பெரும்
சாலையெல்லாம் தோரணமாய்ச் சகலமுமே ஜொலிக்குது!
காவடியும் சன்னிதிக்குக் கரகம்ஆடி வருகுது;—எங்கும்
கண்கொள்ளாத காட்சிஅது; கண்விருந்தே தருகுது!

ஊர்களித்து உறவுகளித்து உலகமெல்லாம் களிக்குது;—அதில்
உயிர்களித்துப் பயிர்களித்து உள்ளன்புமே செழிக்குது!
சீர்கொழித்துப் பேர்கொழித்துச் செல்வமும்தான் கொழிக்குது;—
தெய்வச்
சிறப்புகொஞ்ச மார்கழியும் திருவிழாவாய்த் தழைக்குதே!

— தமிழழகன்



# காதல் இல்லையேல் காதல்



## சோ

காட்சி 29
சுரேஷ் அறை

(ஒரு நாற்காலியில் நாகராஜன் கயிற்றால் இறுகக் கட்டப்பட்டுக் கிடக்கிறான். முகத்திலே உக்ர தாண்டவம் - எதிரே சுரேஷ் சர்வ சாதாரணமாக நிற்கிறான்.)

நாக: இதுக்கெல்லாம் நீ சரியா அனுபவிக்கப் போறே.

சுரே: இன்னொரு தடவை உன் ஓட்டை வாயைத் திறந்தால், டர்க்கி டவலை வாயிலே அடைச்சுப்புடுவேன், ஜாக்கிரதை.

நாக: டேய்... இது நியாயமாடா...என்னை ரூமுக்குக் கூட்டி வந்து இந்த மாதிரி கட்டிப் போட்டுப்பிட்டியே...

சுரே: நியாயம், அநியாயத்தைப் பார்க்கிற சமயம் இது இல்லே. உன்னை வெளியிலே விட்டால் என் திட்டமெல்லாம் கோவிந்தா ஆகிவிடும்.

நாக: நன்றி கெட்ட ராஸ்கல்! உன் திட்டத்துக்கு என்னைப் பயன்படுத்திக் கொள்ளப் பார்க்கிறியா?... இங்கே யிருந்து தப்பிச்ச உடனே...

சுரே: என்ன செய்வியோ, செய்துக்க. அதுவரைக்கும் பேசாமல் கிட!

நாக (உரக்க): இங்கே யாருமே இல்லையா? என்னை இவன் கட்டிப் போட்டுவிட்டான். யாராவது வாங்க.... ஐயோ...மாலதி...

சுரே: வாயை மூடிக்கிட்டுக் கிடுன்னு... கத்தறியா? (ஒரு டவலை எடுத்து அவன் வாயில் திணிக்கிறான்.) இப்பக் கத்துடா! நான் நினைச்சபடி காரியத்தை முடிச்ச பிறகு தான் உனக்கு விடுதலை.

(நாகராஜன் டவலை எடுக்குமாறு சுரேஷுக்குச் சொல்லுகிறான்.)

சுரே: டவலை எடுக்கணுமா? ஏன்?

நாக: உம்...இம்...ம்...ம்.....

(எப்படியோ தட்டுத் தடுமாறிச் சைகை செய்கிறான். தான் ஒரே ஒரு விஷயம் சொல்ல விரும்புவதாகக் கெஞ்சுகிறான்... கண்களில் தண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடுகிறது)

சுரே: தொலேங்க போ... என்ன சொல்லணுமோ அதைச் சுருக்கமாச் சொல்லி முடி. நான் போய் என் வேலையைக் கவனிக்கணும்.

(நாகராஜன் வாயில் அடைக்கப்பட்டிருக்கும் துணியைச் சுரேஷ் எடுக்கிறான். நாகராஜன் பேசாமல் இருக்கிறான்)

சுரே: என்னவோ சொல்லணும்னு அழுதியே, சொல்லித் தொலே. எனக்கு நேர மாகுது.

நாக: ஒண்ணுமில்லே. ஒரே ஒரு விஷயம். கனகசபை, சபேசன் மாதிரி நல்லவங்களை நான் ஏமாத்த நெனைச்சதுக்குக் கடவுள் சரியா எனக்குத் தண்டனை கொடுத்து விட்டார். உன் மாதிரி அயோக்கியன்கிட்ட மாட்டிக்கிட்டேன். இது எனக்கு வேண்டியதுதான்...அவ்வளவுதான். துணியை அடை.

(வாயைத் திறக்கிறான்)

சுரே (துணியை நாகராஜனின் வாயில் அடைத்து): கரெக்ட்! தண்டனையை நல்லா அனுபவி!

காட்சி 30
சபேசன் வீடு

(மாலதி தனியே அமர்ந்திருக்கிறாள்...சுரேஷ் வருகிறான்.)

சுரே: மிஸ் மாலதி!

மாலதி (திரும்பிப் பார்த்து): நீங்க...

சுரே: நான்தான் சுரேஷ். நாகராஜன் செநேகிதன். நீங்க அன்னிக்கு அந்தப் பொதுக் கூட்டத்திலே பார்க்கலே?

மால: ஆமாம்! நாகராஜன் கூட உங்களைப் பத்தி எங்கிட்ட சொல்லியிருக்கார். உட்காருங்க.

சுரே: பரவாயில்லே, பரவாயில்லே!

(இவ்வாறு கூறிக்கொண்டு உட்காருகிறான்)

மாலதி: நீங்க மிஸ்டர் சபேசனைப் பார்க்க வந்திங்களா?

சுரே: இல்லே. உங்களைத்தான் பார்க்க வந்தேன்.

மாலதி: என்னைப் பார்க்கவா?

சுரே: ஆமாம். சொல்லப் போனால் உங்ககிட்ட மன்னிப்புக் கேக்கறதுக்காகத்தான் வந்தேன்.

மாலதி: மன்னிப்பா, எதுக்கு?

சுரே: தியாகராஜனை இந்த வீட்டிலே நான்தானே அறிமுகப்படுத்தி வைச்சேன். அவன் உங்ககிட்ட தாறுமாறாகப் பேசிட்டதுக்கு நானும் பொறுப்பாளியாயிட்டேன். அதனாலேதான்....

மாலதி: மிஸ்டர் சுரேஷ்! மன்னிப்பு இன்னிப்புன்னு பேசி, தியாகராஜன் மேலே

எனக்கு இருக்கிற அபிப்பிராயத்தை மாத்தலாம்னு நினைச்சு நீங்க இங்கே வந்திருந்தால், அந்த எண்ணத்தை மறந்துடுங்க. இனிமேல் அந்தத் தியாகராஜன் முகத்திலே கூட நான் முழிக்க மாட்டேன். சுத்த அயோக்கியன்.

கரே: கரெக்ட். நீங்க சொல்றது நூத்துக்கு நூறு உண்மை. நானே அவனை ரொம்ப நல்லவன்னு நினைச்சு ஏமாந்துபோய் விட்டேன். அதனாலேதான் உங்ககிட்ட மன்னிப்புக் கேட்க வந்தேன்.

மாலதி: நிஜமாவா சொல்றீங்க?

கரே: யெஸ்... நாகராஜன் எவ்வளவு தங்கமானவன்! அவனுக்குப் போய் இவன் தம்பியா வந்து சேர்ந்தானே!

மாலதி: இந்த மாதிரி விபரீதமான படைப்புக்களைக் கடவுள் ஏன்தான் செய்யறாரோ?

கரே: கடவுள் எங்கே படைச்சார்? இது நம்ம சிருஷ்டிதானே?

மாலதி: என்ன சொல்றீங்க?

கரே: ஒண்ணுமில்லே... வந்து... கடவுள் எல்லோரையுமே நல்லவங்களாத்தான் படைக்கிறார். சுத்தியிருக்கிற உலகம்தான் சில பேரைக் கெட்ட வழியிலே இழுத்து அயோக்கியனாக மாத்திடறது.

மாலதி: ஓ! அதுக்குச் சொன்னீங்களா?

கரே: யெஸ்.. வந்து.. ஒரு முக்கியமான விஷயம் உங்ககிட்ட சொல்லணும்...

மாலதி: என்ன அது?

கரே: ஒண்ணுமில்லே...எனக்கு ஒரு சந்தேகம். அது தவறாகவும் இருக்கலாம், சரியாகவும் இருக்கலாம். எனக்கே ஒண்ணும் புரியலே. ஒரே குழப்பமாக இருக்கு. அந்தச் சந்தேகம் ஏற்பட்டதுலேயிருந்து எனக்குத் தூக்கமே வரலே. இந்தச் சந்தேகம் என் மனசிலே தோன்றிய பிறகு நான் தூங்கவே இல்லே.

மாலதி: அது என்ன சந்தேகம்?

கரே: வந்து நீங்க அதைத் தப்பித் தவறிக் கூட யார்கிட்டேயும் சொல்லக் கூடாது.

மாலதி: நீங்களே இன்னும் எங்கிட்டச் சொல்லலியே.

கரே: கேட்டா நீங்களும் தூங்க மாட்டீங்க.

மாலதி: பரவாயில்லே. சொல்லுங்க.

கரே: நான் எப்படிச் சொல்றது?

மாலதி: சரி, உங்க இஷ்டம்.

கரே: பரவாயில்லே. சொல்லலாம். வந்து நம்ம நாகராஜனைப் பத்தின விஷயம்தான்.

மாலதி: என்ன சொல்லுங்க.

கரே: எனக்கு அதுலே ஒரு சந்தேகம்.

மாலதி: அதான் அப்பவே சொல்லிட்டீங்களே. என்ன சந்தேகம்?

கரே: இல்லே, இல்லே. அது வேறே சந்தேகம் — இது வேறே சந்தேகம்.

மாலதி: இது என்ன சந்தேகம்?

கரே: ஒரே ஒரு சின்னச் சந்தேகம்.

மாலதி: இது என்ன மூணாவது சந்தேகமா?

கரே: இல்லே... இல்லே... ரெண்டாவது சந்தேகம்தான்.

மாலதி: சொல்லுங்க.

கரே: இரண்டாவது சந்தேகத்தை முதலிலே சொல்லிடறேன்.

மாலதி: எனக்கு ஒரு சந்தேகம்.

கரே: என்ன?

மாலதி: நீங்க உங்க சந்தேகத்தைச் சொல்லாமலே போயிடுவீங்களோங்கிற சந்தேகம்தான்.

கரே: இல்லே... வந்து, என் சந்தேகத்தைச் சொன்னா நீங்க என்னைப் பத்தியே சந்தேகப்படுவீங்களோன்னுதான் ஒரு சின்னச் சந்தேகம். அதான் ரெண்டாவது சந்தேகம்.

மாலதி: நான் அந்த மாதிரியெல்லாம் ஒண்ணும் நினைக்க மாட்டேன்.

கரே: இந்த மெயின் சந்தேகம் — அதாவது முதல் சந்தேகம்...

மாலதி: அதான் தூக்கம் வராத சந்தேகம்.!

கரே: யெஸ். அது இந்த நாகராஜன் எப்படிச் செத்தான்கிற சந்தேகம். அவனை யாரோ கொலை பண்ணியிருக்காங்கன்னு நான் நினைக்கிறேன்.

மாலதி (திடுக்கிட்டு): என்ன?

கரே: ஆமாம். நிச்சயமா அவனை இந்தத் தியாகராஜன்தான் கொலை பண்ணியிருக்கணும்.

மாலதி (பதறி): ஏன் அப்படி நினைக்கிறீங்க?

கரே: காரணத்தோடதான் சொல்றேன். நாகராஜன் பம்பாய்க்கு வந்த பிறகு நான் அவனைப் பார்க்கவேயில்லே.



மாலதி: உங்களோடதானே பம்பாய்க்கு வரதாச் சொன்னர். ஏதோ பணம் சம்பாதிக்க நீங்களும், அவருமா திட்டம் போட்டதாகச் சொன்னரே.

சுரே: வாஸ்தவம்தான். அவன் கவிதையைப் பிரகரிச்சு, அமர்க்களப்படுத்திப் பணம் சம்பாதிச்சுடலாம்னு திட்டம் போட்டோம். இதே பம்பாயிலே உங்க கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நடத்தலாம்னு கனுக் கண்டேன். கனவாகவே போயிடுச்சு!

(கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொள்கிறன்)

மாலதி (கண்களில் கண்ணீர் வழிய): எதனுலே உங்களுக்கு இந்தச் சந்தேகம் ஏற்பட்டது?

சுரே: நீங்களே நினைச்சுப் பாருங்க. நாகராஜன் பம்பாய்க்கு வந்த உடனே தம்பியைப் பார்க்கப் போனன். அதுக்கப்புறம் அவன் யார் கண்ணிலேயும் படலே. அவன் மாரடைப்பிலேதான் செத்தான்னு தியாகராஜன் சொல்லித்தான் எனக்குத் தெரியும். தியாகராஜன் எந்த டாக்டரையும் கூப்பிடலே. இறந்த உடனே அன்னிக்கே வேறே யாரையுமே கூப்பிடாமே நாகராஜனே ...ஐ மீன்... அவன் பிரேதத்தை எரிச்சுட்டான்.

(மாலதி விக்கி விக்கி அழுகிறள். சுரேஷ் தொடர்ந்து சொல்கிறன்)

மாரடைப்பாலே செத்துட்டான்னு ஊர் பூரா செய்தியை அவன்தான் பரப்பினன். நாகராஜன் செத்ததாலே திரட்டப்பட்ட நிதி யெல்லாம் தியாகராஜனுக்குத்தான் போறது. சபேசனே பண உதவி செய்யறர். உங்க கிட்ட வேறே தாறுமாருகப் பேசியிருக்கான். இதையெல்லாம் நினைச்சுப் பார்த்தா எனக்கு என்னமோ ரொம்ப சந்தேகமா இருக்கு.

மாலதி: நீங்க அப்படி நடந்திருக்கும்னு நம்பறீங்களா?

சுரே: முதல்லே அப்படி நினைக்கலே. ஆனு, போகப் போக இப்ப இந்தச் சந்தேகம் வலுத்துக்கிட்டே வர்றது.

மாலதி: முதல்லே எப்ப இந்தச் சந்தேகம் வந்தது?



சுரே: இன்னிக்குக் காலையிலே தான்.

மாலதி: இன்னிக்குத்தானு? சந்தேகம் வந்ததுலேருந்து தூக்கமே இல்லேன்னு சொன்னீங்களே?

சுரே: ஆமாம். காலையிலேந்து நான் தூங்கவேயில்லே. வழக்கமா எனக்குப் பகல் தூக்கம் மூணு மணி நேரம்.!

மாலதி: ஓ! திடீர்னு இந்தச் சந்தேகம் உங்களுக்கு...

சுரே: சொல்றேன். இன்னிக்கு அவன் எங்கிட்ட தாறுமாருப் பேசினன்....ஆத்திரத்திலே தவறி 'நாகராஜனைச் செஞ்ச மாதிரி உன்னையும் தொலைச்சுப்பிடுவேன், ஜாக்கிரதை!' என்று மிரட்டினன். என் மண்டையிலே சம்மட்டியாலே ஓங்கி...

மாலதி: அடிச்சுட்டானு?

சுரே: இல்லே. அடிச்ச மாதிரி இருந்தது. அவனே என்ன நினைச்சுக்கிட்டானே என்னவோ தெரியலே. ரூமையே காலி பண்ணிக்கிட்டு எங்கேயோ போயிட்டான்.

மாலதி: அந்தத் தியாகராஜன் உங்க ரூமிலேயா இருந்தான்? அவனுடைய குடும்பம்? அவனுக்குக் கல்யாணம் ஆயிடுத்து, பசங்க இருக்காங்கன்னு நீங்க சபேசன் கிட்ட சொன்னீங்களாமே...அவ்வளவு பெரிய குடும்பத்தை விட்டுட்டு உங்க ரூமிலேயே தங்கியிருந்தானு?

சுரே: அவன் அயோக்கியன்தானே? என்ன வேணுமானுலும் செய்வான். குடும்பத்தைப் பத்தி அவனுக்கு என்ன கவலே?

மாலதி: அப்படிப்பட்ட அயோக்கியனுக்கு நீங்க உதவி பண்ணியிருக்கீங்க.



''ஒத்தடம் போடச் சொல்றீங்களே! என்ன உங்களுக்கு?''

''மாடி மொசைக் தளத்திலே வழவழப்பு போதுமா என்று பார்த்தேன்.''

---

கரே: என்ன பண்றது? அவன் அயோக்கியனு இருக்கலாம். ஆனு அவன் அண்ணன் யாரு? நாகராஜன். அவன் உத்தமன்! மகா நல்லவன். அவன் தம்பிக்கு உதவாமே இருக்கலாமா?

மாலதி: இப்ப தியாகராஜன் மனைவி, பசங்களுக்கு யார் உதவப் போறுங்க?

கரே: அதைப் பத்தி நமக்கென்ன கவலை?

மாலதி: ஏன்?

கரே: அவங்க யாரு? ஓர் அயோக்கியனுடைய பெண்டாட்டி, பசங்க! அப்பேர்ப்பட்டவங்க எக்கேடு கெட்டா நமக்கென்ன? இப்ப நாம கவனிக்க வேண்டியது ஒரே ஒரு விஷயம்தான்.

மாலதி: என்ன?

கரே: நாகராஜன் எப்படிச் செத்தான்? தியாகராஜன் கொலையாளியா இல்லையா? இவற்றைக் கண்டுபிடிக்கணும்.

மாலதி: கண்டிப்பா போலீஸிலே கம்ப்ளெய்ன்ட் கொடுக்கணும். நீங்க சொல்ற மாதிரி நினைச்சுப் பார்த்தா எனக்கே தியாகராஜன் மேலே சந்தேகம் வரது. கண்டிப்பா அவன் இந்த மாதிரி செய்யக் கூடியவன் தான். 'பாம்பை தம்பி நான் போறேன்'னு நாகராஜன் தெரியாமலேயா சொன்னுர்?

கரே: போலீஸ் கம்ப்ளெய்ன்ட் இப்ப எப்படிக் கொடுக்க முடியும்? நம்மாலே எவ்வளவு தூரம் தகவல் கொடுக்க முடியுமோ, அவ்வளவு சேர்த்துக்கிட்டாத்தானே போலீஸிலே போய்த் தைரியமா குற்றம் சாட்ட முடியும்? நேரே போய்த் தியாகராஜன், நாகராஜனைக் கொன்னுப்பிட்டான்னு சொன்னு நம்புவாங்களா?

மாலதி: இப்ப என்ன செய்யலாம்னு சொல்றீங்க?

கரே: எனக்குத் தெரிஞ்ச ஒரு துப்பறியும் நிபுணன் இருக்கான். எமகாதகன். போலீஸ் தாயாப் பொறந்திருக்க வேண்டியவன். தவறிப் போய் மனுஷனுப் பொறந்துட்டான். அவனை வெச்சிக்கிட்டுத் தியாகராஜன் குற்றவாளின்னு போலீஸுக்குக் காட்டத் தகவல் சேகரிச்சு அப்புறம் கம்ப்ளெயின்ட் கொடுப்போம்.

மாலதி: அதை உடனே செய்யுங்க. இந்த அயோக்கியன் தியாகராஜனுக்குச் சரியான தண்டனை கிடைக்கணும்.

கரே: அதுக்கு ரொம்பச் செலவாகுமே.

மாலதி: எவ்வளவு ஆனல் என்ன? அயோக்கியனைச் சட்டத்தின் முன்னலே கொண்டு வந்துதான் ஆகணும். நீங்க கவலைப்படாதீங்க. நான் வேண்டிய உதவி செய்யறேன். இப்பவே சபேசன்கிட்டக் கேட்டுப் பணம் வாங்கித் தரேன்.

(சபேசன் வருகிருர்)

சபே: என்னம்மா எங்கிட்டேருந்து வாங்கப்போறே... ஹலலோ கரேஷ்!

மாலதி: உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? நாகராஜனைத் தியாகராஜன்தான் கொலை பண்ணியிருக்கார்.

சபே: வாட்! என்னது?

மாலதி: ஆமாம். நீங்களே யோசிச்சுப் பாருங்க. நாகராஜன் மாரடைப்பாலே செத்தார்னு தியாகராஜன் சொல்லித்தான் தெரியும். பிரேதத்தையும் யாரும் பார்க்கலே. இன்னிக்குச் கரேஷைத் தியாகராஜன், 'நாகராஜனைத் தொலைச்ச மாதிரி உன்னையும் தொலைச்சுப்பிடறேன்'ன்னு மிரட்டினுனும். இன்னும் என்ன வேணும்!

சபே: அய்யய்யோ! இப்பேர்ப்பட்ட அயோக்கியனு அவன்?

மாலதி: அவனைப் போலீஸிலே மாட்டிக் கொடுக்க வேண்டாமா?

சபே: கொடுக்கணும், கொடுக்கணும்.

கரே: அதுக்குத்தான் ஒரு பிரைவேட் டிடெக்டிவ் — துப்பறியும் நிபுணரை வெச்சுக்கிட்டுக் காரியத்தை நடத்தலாம்னு பார்க்கிறோம்.

மாலதி: அதுக்கு உடனே நிறையப் பணம் வேணும். கரேஷ் கேக்கிறதை நீங்க கொடுங்க. நான் சித்தப்பா கிட்ட வாங்கி உங்களுக்குக் கொடுத்துடறேன்.

சபே: இவன் எப்பவுமே பத்தாயிரம் ரூபாய்க்குக் குறைஞ்சு கேக்க மாட்டானே!

கரே: அவ்வளவுதான் ஸார் வேணும்.

மாலதி: தரமாட்டீங்களா?

சபே: கண்டிப்பா தரமாட்டேன். நாகராஜன் எவ்வளவு நல்லவன். அவன் தம்பி, சொந்தத் தம்பி, கூடப் பிறந்த இரட்டைப் பிறவி தம்பி, அவன் கொலைகாரன்னு சொன்னு யாருக்கு அவமானம்? அந்த அமர கவிக்கு ஓர் அவமானம் வரலாமா? கொலையாகவே இருக்கட்டும். நடந்தது நடந்தாச்சு. செத்தது போறுதுன்னு நாகராஜனுக்கு இப்படி ஓர் அவமானமா? அவன் பேர் கோர்ட்டிலே ஏறணுமா? நோ! நோ! நானும் இதுக்குப் பணம் தரமாட்டேன். கனக சபையையும் தரவிட மாட்டேன். நிச்சயம்! கரேஷ்! யூ கேன் கெட் அவுட்!

(மாலதியும், கரேஷும் திகைத்து நிற்கச் சபேசன் போய் விடுகிருர்.)

(தொடரும்)

# உடையுங்கள் உடையுங்கள்!




'குபேரா பாங்கு'ம், 'குசேலா பாங்கு'ம் இணைந்து 'குபேர – குசேலா பாங்க்' என்று புது உருவம் எடுத்ததில், பத்திரிகைக்காரர்களுக்குப் பக்கம் பக்கமாக விளம்பரம் கிடைத்திருக்கலாம்; பழைய குசேலா பாங்கி ஊழியர்களின் ஊதியம் உயர்ந்திருக்கலாம். 'தெரிந்தோ தெரியாமலோ குசேலாவில் பணத்தைப் போட்டு விட்டோமே, அது திடீரென்று ஒரு நாள் முறிந்து போய் நம் மென்னியையும் முறித்தால் என்ன செய்வது?' என்று தவித்துக் கொண்டிருந்த சில நூறு அப்பாவிகள், 'அப்பாடா' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டிருக்கலாம். ஆனால் அப்பாசாமியைப் பொறுத்த வரையில் அவ்விரு பாங்குகளின் இணைப்பு, பொருந்தாத் திருமணமாகவே பட்டது. உண்மையைச் சொல்லப் போனால், அந்தப் பாங்குகளின் இணைப்பினால் நஷ்டமடைந்தவன் அவன்தான்.

எஸ். தேவகி

அப்பாசாமி செல்லையம்பதியிலே, குபேரா பாங்கில் 'டோக்கனை' நீட்டியவர்களுக்கெல்லாம் ஐந்தென்றும், பத்தென்றும், நூறு என்றும் ரூபாய் நோட்டுக்களை எடுத்து வீசி, ஒரு குட்டிக் குபேரனைப் போல் வலைய வந்து கொண்டிருந்த தருணத்திலேதான், பாழாய்ப் போன பாங்கி இணைப்பு ஏற்பட்டது. அதன் உடனடிப் பலனாக, அப்பாசாமி பனை மரப் பட்டி என்ற சிற்றூர்க் கிளைக்கு மாற்றிப் போடப்பட்டான்.

''என்ன சார் இது, திடீரென்று இப்படி என்னைத் தூக்கிப் போடுகிறீர்களே வெளியூரில்?.....'' என்று மானேஜரிடம் போய் முறையிட்டான் அவன்.

''உன்னைப் போல் அனுபவம் வாய்ந்த ஆசாமிகளைத்தான் வெளியூர்களிலே போட வேண்டுமென்று மேலிடத்திலிருந்து உத்தரவு வந்திருக்கிறது.... பனைமரப்பட்டி அப்படியொன்றும் மோசமான இடம் இல்லையாம். கொசுத் தொந்தரவுதான் அதிகமென்று சொல்கிறார்கள்; கடித்தால் கொழுக்கட்டை கொழுக்கட்டையாக வீங்குமாம். ஆனால் நீ அதெல்லாம் சமாளித்துக் கொள்வாய்.... போய் ஆறு மாதம் இருந்துதான் பாரேன்; பிடிக்கவில்லையானால் திரும்பி வந்து விடலாம்.....'' என்றார் மானேஜர் சமாதானமாக.

ஆயிரம் எதிர்ப்புக்கள், மூவாயிரம் முணுமுணுப்புகள் ஆகியவற்றுடன் பனைமரப்பட்டிக்கு வந்து சேர்ந்த அப்பாசாமி, அந்த ஊரில் கால் வைத்த மறுநாளே 'இனி லட்சம் ரூபாய் கொடுப்பதாகச் சொன்னாலும் மெட்ராசுக்குத் திரும்பப் போவதில்லை' என்று பிரதிக்ஞை செய்து கொண்டானென்றால், அதற்குக் காரணம்..... வேறென்ன? ஒரு பெண்தான் !

அப்பாசாமி பனைமரப்பட்டியில் பதவியேற்றுக் கொண்ட மறுநாள் காலை. பத்து மணி. பாங்கி ஊழியர்களான ஆறு பேர்களும், ஈயை விடப் பரிமாணத்தில் பெரிதாகவும், காரவில் விமானத்தைவிட வேகமானதாகவும் இருந்த கொசுக்களை ஓட்டிக் கொண்டிருந்த நேரம்....

''மிஸ்டர், ஆயிரம் ரூபாய் நோட்டுக்குச் சில்லறை இருக்கிறதா?....'' என்ற குயில் குரலைத் தொடர்ந்து, தங்க வளையல்கள் அணிந்த தளிர்க் கரமொன்று 'கவுண்ட'ருக்குள் நுழைவதைக் கண்டதும் அப்பாசாமி மயக்கம்அடித்துச் சுருண்டு விழாததென்னவோ ஆச்சரியம்தான்.

'இந்த ஊரில் ஆயிரம் ரூபாய் நோட்டுக்கு ஒருவர் சில்லறை கேட்பதாவது ?....' என்று அப்பாசாமி மனத்துக்குள் வியந்து கொண்டிருக்கையிலேயே, மீண்டும் ஒரு முறை கீதம் இசைத்தது அந்தக் குயில்.

''என்ன சார், எத்தனை நேரமாகிறது கேட்டு?.... சில்லறை இருக்கிறதா ஆயிரம் ரூபாய் நோட்டுக்கு?.....''

அதற்குள் சுதாரித்துக் கொண்டுவிட்ட அப்பாசாமி, ''மன்னிக்க வேண்டும்.... இரண்டு நாட்கள் 'டயம்' கொடுத்தீர்களானால் தலைமை ஆபீசுக்கு எழுதி, சில்லறை வரவழைத்துத் தருகிறோம்.....இது சின்ன 'பிராஞ்ச்' பாருங்கள்'' என்றான் பணிவுடன்.

''நாசமாய்ப் போச்......'' என்றவள், 'சு'வைத் தொண்டைக்குள்ளேயே அடக்கிக் கொண்டு, அப்பாசாமிக்குப் பின்னால் ஆளுயரத்துக்கு நின்றிருந்த இரும்புப் பெட்டியை அகல விரிந்த விழிகளால் அளந்துவிட்டு, ''இவ்வளவு பெரிய இரும்புப் பெட்டி வைத்திருக்கிறீர்களே, அதற்குள் என்னதான் வைத்திருக்கிறீர்கள்? ஒரு ஆயிரம் ரூபாய் நோட்டுக்குப் போய்ச் சில்லறை இல்லை என்கிறீர்களே?...'' என்று கேட்டாள்.

''அதுவா அம்மணி?... அந்தப் பெட்டியின் ஒரு மூலையில் பணம் எங்காவது முடங்கிக் கிடக்கும். மீதி இடங்களில் டிபன் பாக்ஸுகளும், மந்தார இலைப் பொட்டலங்களுமிருக்கும்...''

''வாட்? வாட்?... டிபன் பாக்ஸா?...''

''ஆமாம். கொசுத் தொல்லைக்குப் பயந்து கொண்டு நாங்கள் எல்லோரும் டிபனை அந்தப் பெட்டிக்குள்தான் வைத்திருப்போம்!...''

''ஒண்டர்புல் உங்கள் மூளை!...'' என்றவள் திரும்பிப் போகத் தலைப்பட்டாள்.

''ஒரு நிமிடம் நில்லுங்கள். உங்கள் பெயர் என்னவென்று சொல்லாமல் போகிறீர்களே?'' என்று அவளைத் தடுத்து நிறுத்தினான் அப்பாசாமி.

''என் பெயர் எதற்காக உங்களுக்குத் தெரிய வேண்டுமாம்?...''

''அதற்குள் மறந்துவிட்டீர்களே!... சில்லறை கேட்கவில்லையா நீங்கள்? 'இன்னாருக்கு ஆயிரம் ரூபாய் நோட்டுக்குச் சில்லறை தேவைப்படுகிறது' என்று எங்கள் தலைமை ஆபீஸுக்கு நாங்கள் தகவல் தெரிவிக்க வேண்டாமா?...''

''ஓ, அப்படியா!... என் பெயர் அபீதா.''

''ஒண்டர்புல் உங்கள் பெயர்!...'' என்றான் அப்பாசாமி, பற்பசை விளம்பரத்துக்கு 'போஸ்' கொடுக்கும் பாணியில்.

''முழுப் பெயரையும் கேட்டால் இப்படிச் சொல்ல மாட்டீர்கள்... அபீத குசாம்பாள் என்பதாகும்...''

''என்ன செய்வது? சில பெற்றோர்களுக்கு ரசனை என்பதே துளிக்கூட இருப்பதில்லை...'' என்று உண்மையிலேயே அங்கலாய்த்தான்.

அவள் அப்பால் போனவுடனேயே, பியூன் சதாசிவத்தை அழைத்து, ''இப்போது வந்துவிட்டுப் போனார்களே ஓர் அம்மாள், அது யார்?'' என்று மெள்ள விசாரித்தான் அப்பாசாமி.

''பெரிய இடத்துப் பெண்ணுங்க. பணக்காரக் குடும்பமுங்க. பணம் படைத்தவனுங்க...''

''ஏம்பா, உனக்குச் சிவாஜியைக் கண்டால் பிடிக்காதோ? எம். ஜி. ஆர். நடித்த படங்களாகவே சொல்லிக் கொண்டிருக்கிறாயே?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லீங்களே!..... அந்தப் பெண்ணைப் பற்றித்தாங்க சொல்கிறேன்.... மெய்யாலும் அது பெரிய பணக்காரர் வீட்டுப் பெண்ணுதாங்க...''

''அவள் அப்பா என்ன பண்ணுகிறார்?...''

''பிஸ்னஸ்!'' என்ற சதாசிவம், மானேஜரின் அலாட்சி மணி ஒலிக்கவே வேகமாக ஓடிவிட்டான்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அந்தப் பெண் மீண்டும் வந்தாள், அதே ஆயிரம் ரூபாய் நோட்டை எடுத்துக் கொண்டு.

அவள் முகத்தைக் கண்டதுமே, ''வாருங்கள், வாருங்கள், நீங்கள் கேட்டது ரெடியாக இருக்கிறது!'' என்ற அப்பாசாமி, பீரோவைத் திறந்து பத்து ரூபாய்க் கட்டு ஒன்றை எடுத்து அவளிடம் நீட்டினுன்.

ஒரு முறை அதைப் புரட்டிப் பார்த்த அபிதா சப்புக் கொட்டினுள்.

''எல்லாம் பழசாக இருக்கிறதே!''

''இல்லையே!... இந்தப் பாங்க், இந்தக் கவுண்டர், நாற்காலி, நான் எல்லாமே புதுசு தானே?...''

''நான் நோட்டுக்களைச் சொன்னேன்'' என்றவள் அந்தக் கட்டை எடுத்துக்கொண்டு சிறிது தயங்கினுள்.

''எண்ணித் துணிக, கர்மம்!'' என்ருன் அப்பாசாமி.

''தேவையில்லை... உங்களிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இல்லாவிட்டால் உங்கள் உதவியை நாடி வருவேனு?...'' என்ருள் மென்ன.

''உதவியா? என்ன உதவி? இன்னும் இது போலப் பத்து ஆயிரம் ரூபாய் நோட்டுக்களுக்கு நயா பைசாவாக வேண்டுமா?... நானே என் கையால் எண்ணிக் கொடுக்கிறேன்... இல்லை...''

''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்..... இன்று மாலை ஆறரை மணிக்கு மேல் ஏழு மணிக்குள் இந்த ஊர் கஜ சம்ஹாரமூர்த்தி கோயிலுக்குத் தெற்கே இருக்கும் குளக்கரையில் அரச மரத்தடிக்கு வர முடியுமா உங்களால்?...''

'சரித்திரத் தொடர் கதைகள் நிறையப் படித்திருப்பாளோ இவள்?' என்ற சந்தேகத்தைத் தனக்குள் அடக்கிக் கொண்டு, ''அதற்கென்ன, அப்படியே செய்கிறேன்..'' என்று பதிலளித்தான் அவன்.

அரச மரத்தடி. நேரம்: ஆறு மணி அடித்து முப்பத்தைந்து நிமிடம்.

''ஆரணங்கே! உன் ஆணையைச் சிரமேற் கொண்டு அடியேன் இதோ வந்துவிட்டேன். நீ அடுத்தபடி இடப் போகும் கட்டளைக்காக அடிபணிந்து காத்திருக்கிறேன்...'' என்று சொல்ல வேண்டும் போலத் தோன்றினுலும், ''ஆமாம், என்னவோ வரச் சொன்னுயே, என்ன விஷயம்?'' என்ருன் அப்பாசாமி.

''நீங்கள் எனக்கு ஓர் உதவி...'' என்று ஆரம்பித்தான் அவன்.

''செய்கிறேன் என்றுதான் மூன்று மணி நேரத்துக்கு முன்னுலேயே ஒப்புக்கொண்டு விட்டேனே! விஷயத்தைப் போட்டு உடை!''

''அதையேதான் நீங்கள் செய்ய வேண்டும்!...''

''எதை, என்ன செய்ய வேண்டும் என்கிருய் நீ?...''

''உடைக்க வேண்டும்!''

''எதை?''

''உங்கள் பாங்கில் இருக்கும் இரும்புப் பெட்டியை!''

''ஹா!'' என்று அப்பாசாமி எழுப்பிய குரல் அந்தக் குளக்கரையில் எதிரொலித்திருக்கும், அபிதா மட்டும் அவன் வாயைப் பொத்தியிராவிடில்.



நகப்பனுர்: ஏண்டா அயோக்கியப் பயலே! நேத்து இரவு தூக்கத்திலே திருடன் திருடன்! அம்மா அம்மா என்று அலறினுயே; மீச்சத்துக்கெல்லாம் அப்பா! திருடன் வந்தால் மட்டும் அம்மாவா?

''என்ன சொன்னுய் நீ?... இரும்புப் பெட்டியை உடைப்பதா?... உடைத்துவிட்டு ஜெயிலுக்குப் போகச் சொல்கிருயா என்னே?...''

''நான் சொல்வதை முழுதும் கேளுங்களேன்... ரத்தினசாமி என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா?...''

''யார் அது?... திருநெல்வேலி ஜில்லாவிலே ஒவ்வொரு பாங்கி இரும்புப் பெட்டியாகப் பார்த்து உடைத்துக் கொண்டு வந்தானுமே, ஒரு பக்காத் திருடன், அவனு?...''

''சேச்சே!... ரத்தினசாமி என்பது என் அப்பா!... அவருக்காகத்தான் நீங்கள் இரும்புப் பெட்டியை உடைக்க வேண்டும்''

''ஏன்?... அவர் பெரியார் கட்சியைச் சேர்ந்தவரோ?...''

''ஐயே! நான் சொல்வதைக் கொஞ்சம் காது கொடுத்துக் கேளுங்களேன்: அப்பா ஓர் இரும்புப் பெட்டி தயாரிப்பாளராக்கும்!''

''உடைப்பாளரும்கூட என்று சேர்த்துக் கொள்!...''

''உங்கள் பாங்கில் இருக்கிறதே 'ரத்ன' இரும்புப் பெட்டி, அதுகூட அப்பாவின் தொழிற்சாலையில் தயாரானதுதான்...இந்த வியாபாரத்தில் அவருக்கு நல்ல பணம்... ஆனல் இப்போது இல்லை...''

''அதற்காக இப்படிப் பாங்கி இரும்புப் பெட்டிகளை உடைத்துப் பணம் சேர்க்கச் சொல்லியிருக்கிறதா?''

''ஐயோ! ஐயோ! கொஞ்சம் பொறுமையாகத்தான் இருங்களேன்... அப்பாவுக்கு 'மார்க்கெட்' இப்போது 'டல்'... முன்போல் இரும்புப் பெட்டிகள் இப்போது விற்பனையாவதில்லை... அதற்காகத்தான் ஒரு நாடகம் ஆடலாமென்று தீர்மானித்திருக்கிறேம்..... அதன்படி நீங்கள் இரவில் திருட்டுத்தனமாகப் போய், உங்கள் பாங்கி இரும்புப் பெட்டியை உடைக்க வேண்டும்!...''

''அது முடியாத காரியம்!...''

''நீங்களே ஒப்புக்கொண்டு விட்டீர்களே, ரொம்ப சந்தோஷம்... மன்னாதி மன்னன், திருடாதி திருடன் வந்தாலும் அந்தப் பெட்டியை உடைப்பதென்பது முடியாது. ஆனால் காலையில் பெட்டியைப் பார்த்தால் யாரோ திருடர்கள் இரும்புப் பெட்டியை உடைக்க முயன்றிருப்பதாகத் தெரிய வருமல்லவா?..''

''வரட்டுமே, அதனால் என்ன லாபம்?...''

'' 'ரத்னா இரும்புப் பெட்டியைத் திருடர்களாலும் உடைக்க முடியவில்லை' என்றால் அது பெரிய விளம்பரம்தானே?... அதனாலேயே மீண்டும் வியாபாரம் சூடு பிடிக்குமே!...எப்படி என் ஐடியா?...''

''அபாரம்தான் போ!...'' என்ற அப்பாசாமி, ''எப்போது உடைக்க வேண்டும் என்கிறாய்?...'' என்றான்.

''நாளை இரவே!... என்ன, உடைக்கிறீர்களா?...''

அப்பாசாமி மௌனமாக இருந்தான்.

''பதில் சொல்லுங்களேன்!...'' என்று தூண்டினான் அவன்.

''இரும்புப் பெட்டியை உடைக்காவிட்டால்தான் உன் இதயம் உடைந்துவிடுமே!... ஒப்புக் கொள்கிறேன்!...'' என்றான் அப்பாசாமி கடைசியில் வேண்டா வெறுப்பாக.

''சதாசிவம்!.......'' என்று கூவினான் அப்பாசாமி.

பத்து நிமிட இடைவெளிக்குப் பிறகு, ''என்ன சார், கூப்பிட்டீங்களா?...'' என்று கேட்டுக் கொண்டே வந்தான் சதாசிவம்.

''நல்ல கடப்பாரை ஒன்று; இருப்புளி இரண்டு; சுத்தியல் ஒன்று வேண்டுமே எனக்கு?...''

''அதெல்லாம் ஒண்ணும் தேவையில்லீங்க! கையாலேயே உடைத்து விடலாமுங்க'' என்று யோசனை கூறினான் அவன்.

''என்னது! கையால் உடைப்பதா?..... அதெப்படியப்பா முடியும்?...''

''நான் செய்து காட்டறேன் பாருங்க!'' என்றவன், ஒரு குத்து, விட்டான். அடுத்த விநாடி, ''பார்த்தீங்களா? பாலாஜி பவன் மைசூர்பாக்கும், காஞ்சிபுரம் இட்டிலியும் எப்படிப் பொடிப் பொடியாப் போச்சுன்னு! இதுக்குப் போய்க் கடப்பாரை வேணும்னீங்களே!...'' என்றான் பெருமிதத்துடன்.

''நான் கேட்டது டிபனை உடைப்பதற்காக இல்லே; வேறொரு விஷயமாக...போய்ச் சேகரித்துக் கொண்டு வா எப்படியேனும்!...'' என்ற அப்பாசாமி, அவன் கையில் ஒரு ரூபாய்த்தாள் ஒன்றை வைத்து அழுத்தினான்.

ஒரு மணி நேரத்துக்குப் பிறகு அந்தப் பக்கமாக வந்த மானேஜர் கவுண்ட'ருக்கு அருகில் கடப்பாரை முதலிய ஆயுதங்கள் பத்திரப்படுத்தி வைத்திருப்பதைக் கண்டதும், ''என்ன இதெல்லாம்?'' என்று அப்பாசாமியைக் கேட்டார்.

''ஹி...ஹி... நம்ம சொந்த உபயோகத்துக்காக வாங்கினேன் சார்'' என்று அவன் அளித்த பதிலை அவர் நம்பத் தயாராக இல்லை என்பதை அவரது முகமே தெளிவாகக் காட்டியது.

அன்று அரை நாள் லீவு கேட்டான் அப்பாசாமி. இரவில் கண் விழித்துப் பெட்டியை உடைக்க வேண்டுமானால் பகலில் தூங்கியாக வேண்டுமே?... லீவு சாங்ஷன் ஆனதும், மானேஜரிடம் இரும்புப் பெட்டிச் சாவியை ஒப்படைத்துவிட்டுத் தான் தங்கியிருந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தான், தூக்கம் போட.

பகல் தூக்கமல்லவா? கனவுகளுக்குப் பஞ்சமே இருக்கவில்லை. அப்பாசாமி பாங்கி இரும்புப் பெட்டியை உடைத்து விடுகிறான். பக்கத்திலேயே நிற்கும் அபிதா, ''சபாஷ்!'' என்று துள்ளிக் குதிக்கிறாள். பெட்டிக்குள்ளிருந்து காசுகளை எடுத்துக் கடகடவென்று அவள் காலடியில் கொட்டுகிறான் அப்பாசாமி. அவள் ரோஜா மாலை ஒன்றை எடுத்து ஆசையுடன் அவன் கழுத்தில் போட வருகிறாள். அவன் ஆவலுடன் தலை நீட்டுகிறான். பட்டென்று யாரோ தலைமீது அடிக்கிறார்கள்.

இந்தக் கட்டத்திலேதான் திடுக்கிட்டு விழித்தான் அப்பாசாமி. பக்கத்தில் சற்றுத் தள்ளிக் காரைக் கட்டி ஒன்று கிடந்தது. சற்று நேரத்துக்கு முன் மேற் கூரையிலிருந்து தலையில் விழுந்தது அந்தக் காரைக்கட்டிதான் என்று நிச்சயப்படுத்திக் கொண்ட பிறகே சிறிது நிம்மதி பிறந்தது. ... அவள் கூறியதெல்லாம் உண்மையாக இருக்குமா?...இல்லாவிடில் நம்மை இப்படி ஓர் இக்கட்டில் சிக்க வைத்துக் கெட்ட பெயர் வாங்கித்தர முனைந்திருக்கிறாளோ? அவள் பேச்சைக் கேட்டுக் கொண்டு இரும்புப் பெட்டியை உடைப்பதா, வேண்டாமா?...' இப்படியாகக் கேள்விகள் முளை விட்டன. இறுதியில் 'என்னதான் நடக்கும், நடக்கட்டுமே!' என்ற துணிச்சலான எண்ணம் அவனைத் தூண்டி விட்டது.

இருட்டு: அப்படியே குழைத்துப் பூசிக் கொள்ளுவது போன்ற மையிருட்டு.

பாங்கிக் கட்டிடத்துக்குள் மறு சாவி போட்டுக்கொண்டு நுழைந்திருந்த அப்பாசாமி, துழாவித் துழாவி தன் நாற்காலியண்டை வந்திருந்தான். 'என்ன இழவு இருட்டு! விளக்கைப் போட்டு விடுவோமா' என்று முந்நூற்றுப் பதினாறாவது தடவையாக எண்ணியவன், தன் நாற்காலியடியில் கைவிட்டுத் துழாவினான். நல்ல வேளையாக அவன் சேகரித்து வைத்திருந்த ஆயுதங்கள் அப்படியே இருந்தன.

கையில் கடப்பாரையை எடுத்துக் கொண்டான். இரும்புப் பெட்டி இருக்குமிடத்தை ஒரு முறை நிதானித்துக் கொண்டான். 'போட்டான் ஒரு போடு!' 'டங்'கென்று ஓர் ஓசை எழுந்தது.

போட்ட வேகத்தில் கதவுதான் திறந்து கொண்டு விட்டதோ என்ற சந்தேகத்துடன் தடவிப் பார்த்தான். ஊஹூம்; அப்படியொன்றுமில்லை. இன்னும் ஒரு போடு போட்டான். கடப்பாரை எழுப்பிய 'ணங்' கென்ற சப்தம் திகிலூட்டியது. நட்ட நடுநிசி வேளையில் இப்படி ஒரு சத்தம் கிளம்பினால், அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் சந்தேகப் படமாட்டார்களோ?... இது உதவாது என்று சுத்தியலை எடுத்துக் கொண்டான். கைப்பிடியின்மீது ஓங்கித் தட்டினான். கைப்பிடி லொடலொடத்து ஆடியது. பலங்கொண்ட மட்டும் அதைப் பிடித்து அசைத்தான். கதவு திறந்துகொள்ளும் போலிருந்தது.... மீண்டும் ஒருமுறை சுத்தியலால் போட்டான்.

# 5 தலைசிறந்த ஏஸிஸி தயாரிப்புகள்



## ஸில்விக்ரீட்

வெள்ளை ஸிமெண்ட்

தரைகளுக்கும், வீட்டின் உள்ளும் புறமும் பூச்சு வேலைக்கும் இணையற்றது



## அக்கோப்ரூஃப்

திறந்தவெளி மாடிகள், தண்ணீர் டாங்குகள், நீச்சல் குளங்கள் முதலியவற்றில் நீர் கசியாமல் தடுக்க ஸிமெண்டுடன் கலந்து உபயோகிப்பதற்கான மிகச் சிறந்த பொருள்



## ரிஃப்ராக்டரிகள்

பிரத்தியேகமாக இரும்பு மற்றும் எஃகு, ஸிமெண்ட், செம்பு, கண்ணாடி மற்றும் இவை போன்ற தொழில்களுக்குத் தேவையான ஹை அலுமினா ஃபயர்பிரிக்குகள்



## அக்கோஸெட்-50

எல்லாவிதமான தொழிற்சாலை உலைகளுக்கு ஏற்ற ஹை ரிஃப்ராக்டரி ஸிமெண்ட்



## அக்கோஸிட்

ஆஸிட்கள் மற்றும் ரஸாயனப் பொருள்களால் ஏற்படும் அரிப்பைத் தடுக்கிறது



ஏஸிஸி

உயர் தர தயாரிப்புகளின் உத்தமச் சின்னம்

கீழ்க்கண்டவர்களிடமிருந்து எளிதில் கிடைக்கப் பெறும்,

**தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**

பம்பாய் . அஹமதாபாத் . பெங்களூர் . கல்கத்தா . கோயம்புத்தூர் . புது டில்லி
இந்தோர் . கான்பூர் . மதராஸ் . பாட்னா . ஸெகந்திராபாத்

**தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**

தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

கதவு திறந்துகொண்டது — இரும்புப் பெட்டிக் கதவு அல்ல; அந்த அறைக் கதவு!

அப்பாசாமிக்குச் சப்த நாடிகளும் ஒடுங்கிப் போய் விட்டன.

இரும்புப் பெட்டிக்குப் பின்னுலோ, நாற்காலிக்கு அடியிலோ, கனமான 'லெட்ஜர்'களின் பின்னோ அவன் பதுங்கிக்கொள்ளுமுன்—

அறையில் விளக்கு எரிந்தது. வெளிச்சத்தில் மானேஜர் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. ''வாட்! அப்பாசாமி!... என்ன செய்து கொண்டிருக்கிருய் இங்கே?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார் அவர்.

''பார்த்தால் தெரியவில்லே?... இரும்புப் பெட்டியை உடைத்துக் கொண்டிருக்கிறேன்!'' என்று பதிலளித்தான் அவன். கையும் கடப்பாரையுமாகப் பிடிபட்டாகி விட்டது. இனி புளுகுவானேன்?...ஹீரோ மாதிரி நடந்து கொண்டால் நாளைக்குப் பேப்பர்களில் படம்கூட வரும். 'காதலிக்காக இரும்புப் பெட்டியை உடைத்தவர் இவர்தான்!'...

''பெட்டியை உடைக்கிருயா?... எதற்காக?...''

''இருங்கள், இதோ உடைத்து விட்டுச் சொல்கிறேன்!'' என்று கத்தியலே ஓங்கினுன். ஜெயிலுக்குப் போவதென்னவோ நிச்சயம்; உடைத்து விட்டுத்தான் போவோமே!...

''நோ! நோ! நோ!...பிளீஸ், அப்படிச் செய்யாதே!'' என்று ஓடிவந்து அவன் கைகளைப் பற்றிக் கொண்டார் மானேஜர்.

''விடுங்கள் என்னே!'' என்று திமிறினுன் அவன்.

''நோ! நத்திங் டூயிங்!''

''அட சட்! விடய்யா!'' மீண்டும் திமிறல்.

குபீரென்று கைகளை விட்டுவிட்டு அவன் கால்களைப் பற்றிக் கொண்டார் மானேஜர்.

''உனக்குக் கோடிப் புண்ணியமுண்டு, அப்பாசாமி! தயவுசெய்து என்னேக் காட்டிக் கொடுத்துவிடாதே!'' என்றுகெஞ்சினுர் அவர்.

'புண்ணியமாவது காட்டிக் கொடுப்பதாவது! என்ன உளறுகிருர் இவர்!'

''நான் செய்ததென்னவோ தப்புத்தான், அப்பாசாமி. ஆபீஸ் பணத்தில் கைவைத்திருக்கக் கூடாதுதான். இருந்தாலும் சந்தர்ப்பம் அப்படி வந்து சேர்ந்து விட்டது. காஷியரான நீ இந்த மாதிரி 'ஸர்ப்ரைஸ் செக்' செய்து என்னேத் திண்டாட வைப்பாய் என்று நான் துளிக்கூட நினைக்கவில்லே...நீ என்னிடம் இந்தப் பெட்டிச்சாவியைக் கொடுத்துவிட்டுப் போன பிறகுதான் ஆபீஸ் பணத்தை எடுத்துக் கொள்ளும் எண்ணமே எனக்குத் தோன்றியது...'' என்று விளக்க முற்பட்டார் மானேஜர்.

''எவ்வளவு பணம் எடுத்தீர்கள்?'' என்று கம்பீரமாகக் கேட்டான் அப்பாசாமி.

''பிச்சைக்காக முந்நூறு ரூபாய்!... அதைச் சீட்டிலே போக்கிவிட்டு வந்துகொண்டிருக்கும்போதுதான் இங்கே ஏதோ சத்தம் கேட்டது. என்னவென்று பார்த்தால்...''

''உஸ்!... அந்தக் கதையெல்லாம் வேண்டாம். பணத்தை எப்போது திருப்பிக் கொடுப்பதாக உத்தேசம்?...''

''இந்த வாரக் கடைசிக்குள்... தலேயை அடகு வைத்தாவது...''

''அதுவரை விஷயம் வெளியே போகாமல் இருக்க வேண்டுமானுல்...''

''என்ன வேண்டுமானுலும் செய்கிறேன்!''

''ஒன்றும் வேண்டாம்!... நான் சொன்னபடி செய்யுங்கள்!'' என்ற அப்பாசாமி, அவர் கையில் பேனுவையும், பேப்பரையும் எடுத்துக்கொடுத்தான்.

மறுநாள் காலே பேப்பர்களில் பனைமரப்பட்டி குபேர — குசேலா பாங்கின் இரும்புப் பெட்டியை யாரோ திருடர்கள் உடைக்க முயன்று தோல்வியுற்றுப் போய் கடப்பாரை, முதலிய ஆயுதங்களைப் போட்டுவிட்டு ஓடிப் போய்விட்ட செய்தியுடன் அந்த இரும்புப் பெட்டி 'ரத்னு' தயாரிப்பு என்ற விவரமும் வெளியாகி யிருந்தது.

அபிதாவையும் அழைத்துக் கொண்டு அப்பாசாமியின் அறைக்கு விஜயம் செய்த ரத்தினசாமி, ''மாப்பிள்ளே! உங்களுக்கு எந்த மாதிரி இரும்புப் பெட்டி வேண்டுமென்று இந்தக் 'காட்லாக்'கைப் பார்த்துச் சொல்லுங்கள்! ஸ்பெஷலாகத் தயாரித்துத் தரச் சொல்கிறேன்!...'' என்ருர்.

அவர் வீசியிருந்த 'காட்லாக்'கை அலட்சியத்துடன் புரட்டிய அப்பாசாமி, ''இரும்பாவது, ஒண்ணுவது! அதெல்லாம் வேண்டாம். தங்கத்திலே...'' என்று இழுத்தான்.

''என்ன இது! தங்கமாவது! மொரார்ஜி கேட்டால் கோபித்துக் கொள்ளப் போகிருர். என்ன விளையாட்டாக இருக்கிறதோ?...'' என்று பதறினுர் வருங்கால மாமனுர்.

''அவசரப்படாதீர்கள் மாமா!... தங்கத்திலே வார்த்தெடுத்தது போல் உங்கள் பெண்ணேயே எனக்குத் தாரை வார்த்துக் கொடுக்கப் போகிறீர்கள், இரும்புப் பெட்டி என்னத்துக்கு என்றுதான் சொல்ல வந்தேன்!'' என்று அப்பாசாமி சொன்னதும், அபிதாவின் முகம் தங்கத் தாமரையாகியது!

---

ஒருவன் தற்கொலே செய்து கொள்ளும் உத்தேசத்துடன் வண்டி வந்ததும் தலேயைக் கொடுத்து உயிரை மாய்த்துக்கொண்டு விடலாம் என்று எண்ணி ரயில் தண்டவாளத்தில் போய் உட்கார்ந்தான்.

அப்படிக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த அவனேப் பார்த்து ஒருவன், ''இங்கு என்ன செய்து கொண்டிருக்கிருய் நீ?'' என்றுன்.



''ரயிலில் விழுந்து சாவதற்காகக் காத்திருக்கிறேன்!'' என்று அவன் பதில் அளித்தான்.

''கையில் அதென்ன பொட்டணம்?''

''உணவுப் பொட்டணம்!''

''சாகப் போகிறவனுக்கு உணவு எதற்கு?''

''என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? இந்தப் பாழும் ரயில் நேரத்துக்கு வருமோ, நேரம் தாழ்ந்து வருமோ, யார் கண்டார்கள்? அதுவரை உணவருந்தாமல் பட்டினியாகக் கிடந்து சாக முடியுமா?''

---

# வட்ட மேஜை

★ பொருத்தமான செய்கை

★ மனிதன்தான்!

★ திருப்பாவை ஜீயர்

கல்கி ராணுவ மலர் இன்றுதான் கிடைத்தது. அவ்வளவு தொலைவில் இருக்கிறேன். மலரின் தரம் பெரிதும் மகிழ்ச்சி தந்தது.

1945ல் என்று நினைவு. ஐரோப்பா, மத்திய கிழக்கு, தூரகிழக்கு நாடுகளிலிருந்து இரண்டாவது உலகப் போர் முடிந்து நாங்கள் திரும்பிக் கொண்டிருந்தோம்.

இந்திய தேசியப் போராட்டம் உச்ச கட்டத்தில் இருந்தது. படைவீரர்கள் ஆளும் வர்க்கத்தின் கைக்கூலிகளாகக் கருதப்பட்டனர். நாங்கள் தீண்டாத சாதியாக இருந்தோம். மற்ற நாடுகளில் எல்லாம் வீடு திரும்பிய வீரர்களுக்குப் பெரும் வரவேற்பு; குதூகலம். ஆனால் எங்களுக்குப் பெயர் 'சோற்றுப் பட்டாளம்'.

பேராசிரியர் கல்கி அந்தச் சமயத்தில் ஒரு தலையங்கம் எழுதினார். 'வெற்றி வீரர்களே! திரும்பி வாருங்கள்!' என்று புகழ் மாலை சூட்டினார். அதைப் படைவீரர்கள் என்றுமே மறக்க மாட்டார்கள். அது மட்டுமல்ல! சுதந்திர பாரதத்தின் ரட்சகர்களாக இவர்கள் விளங்கப் போவது திண்ணம் என்று உறுதி கூறினார். அது நூற்றுக்கு நூறு பலித்தது.

அந்த மரபு வழுவாமல் நாங்கள் நாட்டின் நெருக்கடி காலத்தில் எங்களை ஊக்குவித்தது எவ்வளவு பொருத்தமான செய்கை!

எல்லைப்புறத்தில் ஓரிடம்
10–12–65 தி. சா. ராஜு

எத்தனையோ கதைகள் படித்திருக்கிறேன், ரசித்திருக்கிறேன். ஆனால், இதைப்போல் (பார்த்தனுக்காக மட்டும் அன்று — தி.சா. ராஜு) வரிக்கு வரி எதையுமே ரசித்ததில்லை. இரத்த நாளங்கள் புடைத்தெழ, இராணுவ வாழ்க்கையின் பல கோணங்களையும் அணு அணுவாக உணர்ந்து எழுதியிருக்கிறார். போர்க் கதைகளைப் பிற எழுத்தாளர்கள் எழுதுவதற்கும், படைநிலைகளைச் சேர்ந்தவரே எழுதுவதற்கும் எத்தனை வித்தியாசம்!

போர்ப் படைகளிலுள்ள ஆடவர்கள் மணம் முடிப்பது — தமிழகத்தைப் பொறுத்த வரை — ஒரு பிரச்னை. பல ஊர்களில் பெண் தர மறுக்கின்றனர் — பட்டாளத்தான் என்பதால்.

வேறு வேலை கிடைக்காதவர்கள் — அறிவில்லாதவர்கள்தாம் பட்டாளத்தில் சேர்கின்றனர் என்பது பலரின் எண்ணம். இராணுவ உடையோடு செல்பவனை அற்பமான ஒரு பொருளாகவே நேற்றுவரை நமது தென்னக மக்கள் மதித்து வந்தனர்.

ஆனால் என்றுமே வடபுலத்தில் படை வீரர்களுக்கு நல்ல மதிப்பு உண்டு.

போரணிப் பாசறைகளிலும் அறிவிற் சிறந்தவர்கள் — கலைஞர்கள் — விஞ்ஞானிகள்— மேதைகள் உண்டென்பதைப் பொதுமக்கள் உணர வேண்டும்.

வீரர்கள் மாதக் கணக்கில், உறவு, சுற்றம் இவர்களைப் பிரிந்து நெடுந்தொலைவில் வாழ நேரிடுகிறது. அன்பும், பாசமும் அவர்களுக்கும் உண்டு.

ரயிலடிகளில் சிற்றுண்டி தருவதைவிட — விழா நாட்களில் பரிசுப் பொட்டலங்கள் வழங்குவதைவிட — 'பட்டாளத்தான்' என்று இகழாமல், 'போர்வீரனும் மனிதன்தான்' என்ற உணர்வோடு நடந்தாலே போதும். அதுதான் நாடு காக்கும் வீரர்களுக்கு வீட்டோடிருப்பவர்கள் — தர வேண்டிய பரிசு.

கான்பூர், கலாபன் வாஸ்,
13–12–65 இந்திய வான் படை

'திருப்பாவை ஜீயர்' என்ற மகுடம் புனைந்த அட்டைப்பட விளக்கத்தை 19–12–65ம் தேதி கல்கி இதழில் பார்த்தேன். விருத்தாந்தம் உண்மையேயானாலும் 'வைணவ ஆழ்வார்களுள் ஸ்ரீ ராமானுஜரை அறியாதார் யார்?' என்று தொடங்கி எழுதப் பெற்றிருக்கிறது. ஸ்ரீ ராமானுஜர் ஆசாரிய மகாபுருஷர்களில் தலையானவரே யன்றி ஆழ்வார் கோஷ்டியில் சேர்ந்தவரல்லர்.

ஸ்ரீ ராமானுஜருக்கு மொத்தம் ஐந்து ஆசாரியர்கள். அவர்களில் இருவர்தான் திருக்கோஷ்டியூரில் வாழ்ந்து போந்த நம்பிகள் என்ற பெரியாரும் ஸ்ரீரங்கத்திலேயே எழுந்தருளியிருந்த பெரிய நம்பிகள் என்ற பெரியாரும். பெரிய நம்பிகள் குமாரத்திக்கு அத்துழாய் என்பதும் திருக்கோஷ்டியூர் நம்பிகள் குமாரத்திக்குத் தேவகி என்பதும் திருநாமம்.

ஸ்ரீரங்கத்தில் நடந்ததாக விருப்பினும் சரி, திருக்கோஷ்டியூரில் நிகழப்பெற்றதாயினும் சரி விருத்தாந்தத்தில் வேறுபாடு இல்லை. ஆனால் ஸ்ரீரங்கத்தில் நியதியாக ஸ்ரீ ராமானுஜர் வாழ்ந்தபோது நித்தமும் திருப்பாவைப் பாசுரங்களைப் பாடிக்கொண்டே பிக்ஷைக்குப் போய் வருவது வழக்கமாக இருந்தபடியாலும் பெரிய நம்பிகள் குமாரத்திக்கே அத்துழாய் என்ற பெயர் இருந்தமையாலும் விருத்தாந்தம் ஸ்ரீரங்கத்தில் நிகழப்பெற்றதாகவே சொல்வது அனுபவ உண்மைக்கு ஒத்து வரக்கூடியதாக இருக்கும்.

பன்னத்தூர்,
18–12–65 டி. ரங்கராமானுஜ அய்யங்கார்

''திருப்பாவை ஜீயரின்'' பக்தி வெள்ளத்தின் ஊடே திருப்பாவையின் பெருமையைப் பறைசாற்றிய திரு எஸ். வி. எஸ்.ஸுக்கு நன்றி கூறுவதா, நிகழ்ச்சிக்கேற்ப முகப்பில் ஓவியம் வரைந்த திரு மணியத்தின் கைவண்ணத்தைப் பாராட்டுவதா அல்லது இந்நிகழ்ச்சியை மார்கழி மாதம் முதல் நாளில் வெளியிட்ட கல்கிக்கு நன்றி கூறுவதா என்று தெரியாமல் திக்குமுக்காடிப் போனேன்.

சென்னை
17–12–65 கோ. வை. கோபாலகிருஷ்ணன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

